மகாமகோபாத்யாய. டாக்...

உ

திருச்சிற்றம்பலம்.

அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸாக்ஷாத்காரமாகிய

பரமசிவனார் பார்வதியாருக்கு

உபதேசித்தருளிய

# நிஷ்ட்டாநுபூதி

## மூலம்

இஃது

திருக்கோவலூர்.

## ஆறுமுக சுவாமிகள்

அருளிச்செய்தது.

## முத்துகிருஷ்ண ப்ரம்மத்தினால்

அவதாரிகைமுதலிய வைந்திலக்கணமாகப் பகுத்து

நூதனமாக அருளிச்செய்யப்பட்ட

## உரையுடன்.

## பு. சு. துரைசாமி முதலியார்

அவர்களால்.

பரிசோதித்து.

சென்னை.

புவனேஸ்வரி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1924.

## இந்நூலுரையிலே காட்டப்பட்ட குறிகள்.



இப்புள்ளி கூட்டிச் சொல் முதலியவற்றின் பின்னும்,

இச்சிறுகீற்றுச் சொற்களின் பிரிவுக்குப் பின்னும்,

இப்பெருங்கீற்றுப் பதசாரத்துக்குப் பின்னும்,

() இவ்விருதலைப்பிறை வளைவிக்கப்பட்ட சொற்களுக்கும்,

இக்குத்து முற்றுச்சொல்லுக்குப் பின்னும்,

[] இவ்விருதலைப்பகரம் தாற்பரியத்துக்கும்,

இத்தாரகை அடியிற்காட்டப்பட்டவற்றிற்கும்,

வைக்கப்பட்டன.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

உள்ளங்கனியுவந் தருதவப்பெற்றவர்
முதிருந்தமிழின் மொழிபெயர்த்ததுமாம்
நிதிவைப்பனைய விட்டா னுபூதி
சாத்திரமூல மாத்திரையன்றிக்
கலையமைதரவதற் குரையிலாமையோர்ந்
தாதியீறிலதா யருவாயுருவாய்ச்
சோதியாயகண்டித துரியாதீதமாய்
ஞாதுருஞான ஞேயங்கடந்ததாய்
நாதவிந்துவாய் நான்மறையந்தமாய்த்
தற்பதந்தொம்பதந் தழுவசிபதமாம்
முப்பதமுடிவாய் முக்குணாதீதமாய்ச்
செப்புதற்கரிதாய கற்பனைகடந்த
கயிலைவாழ்பரமன் கருணைகூர்ந்து
மயலறுத்தாள்வான மாணிடவுருக்கொடு
வந்தெனவனிகர் மாயிருடையுடைத்துச்
சிந்தைபுலன்வழிச் செல்லொடுதாழுகுநாள்
ஆதிபுரிவடி வம்பிகையோகினூ
ரேதியந்தண்ணியாய் போதகவுணத்துதி
யைந்துநால்வர்க்கும் வடிவுறத்தண்ணிருந்
தன்மைதெரித்த வண்ணலடியார்
எழுவருமொருவ னெனுந்திருமூலர்
வழுவறுமாயினோர் தொழுதகுமாண்டகை
குருமூர்த்தமதாய்த் தெரிவுறப்போந்து
சச்சிதானந்தத் தனிநிலைபகர

கறவைபிரித்த கன்றெனக்கவன்று
துறவுபூண்டு துரீஇப்படர்ந்தே
ஏனையதலமெலாங் கோதென்றிழித்து
மாநிலச்சார மீதெனமதித்துச்
சாரநகரிற் றன்குருவைக்கமாய்
ஆரவிளங்கிய சந்நிதானமாம்
பொதியநாயகர் பொதுவிற்கந்தப்
பதிவருசான்றோர் முதலியோர்தம்மால்
முதற்பட்டத்தின் முனைவனென்று
விதிக்கப்பட்டு வீரியவுரவோன்
மாயைத்திமிர மாற்றுஞ்சிற்சுடர்
ஏய்ப்பவக்கடல் கடத்துமிரும்புணை
அஞ்ஞானப்பிணி யகற்றுமருந்து
மெய்ஞ்ஞானக்கடி விரிநாண்மலர்
இருவினைக்காட்டை யெறிபடர்குடாரம்
மருவுபக்குவர்க்குப் பயன்சொரிவானைபசு
மானதபாகாரங் கடந்துமாண்புகழ்
மோனவைப்பின் முளைத்தசூதரு
ஆதாரத்திட ராறுந்தாண்டி
மீதானத்தொளிர் மெய்யின்மணிவிளக்கு
தாவக்கோடை தணிக்குங்கொண்மூ
ஆவிக்குறுதுணை யன்பிற்கன்னை
நித்தியநிமல நிருவிகார
சத்தியஞானமய சமயாதீதம்

# உரைச்சிறப்புப்பாயிரம்.

மனாதிக் கெய்தொணா வநாதிகாரணம்
பின்னாபின்ன முன்னாவொருபொருள்
மூலப்பகுதி முளைத்தலர்ந்தெழுந்து
காலப்பகுதி தொடர்ந்துகாண்வரு
பிரமனாதி பிபீலிகாந்தமாம்
சராசரத்துஞ் சகலாண்டத்தும்
கமலத்தடைபுனற் றிவலைகடுப்ப
அனைமவுறுந் தோய்ந்துந் தோயாதாகி
ஓட்டியிலெதனைச் சுட்டப்படாத
சர்வசாட்சி தானேதானும்
பிரமவாரிதிபடித் தாடும்பெற்றியோன்
இழுக்கறுபல்கலைத் தானைகொண்டெய்தி
ஒழுக்கவமைச்சன் ஆட்சியிலூன்றிக்
காமமாதிக் கடும்பகைபிரியத்
தோமிலாவோர்மெழில் வாயிற்புரிக்குத்
துவாதசாந்தப் பெருநகர்தன்னித்
தவாதசாந்தவத் தாணியிவர்ந்து
திருவருளென்னு மொருமுடிகவித்துப்
பண்புடையபோத வெண்குடைநிழற்ற
நிறைவுறுநிட்கள நேமியுருட்டிக்
குறைவில்பேரின்ப முறைபுரிகுரிசில்
சத்திநிபாதஞ் சார்ந்த
முத்துகிருஷ்ணப் பிரமமொய்தவனே

---

மகிமைகொள் பல்கலை தேர்ந்தோர் சூத்ரதாரி
மருவுதிரை மறைவுறுகை வசத்தராயாட்டும்
வகைகொள் மரப்பாவை நடிப்பதனைக்கண்டு
மகிழுலகோர் போல்வியந்து மகிழ்வர்மாதோ.

---

## இதுவுமது

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

பொருவரிய மெய்ஞ்ஞான நிட்டாநுபூதியினாற்
பொருளை யோர்தற்
கரியனலேனாயினுமென் புன்மதியாலச்சமகன்
றுரைசெய்தேனால்
அருமைபெறு முத்தமிழை முறையாகத் தெரிந்திருக்கு
மறிவுசான்றோர்
வருகுழவி சொலுமொழிபான் மகிழ்வுறல்போ
லிவ்வுரைக்கு மகிழ்வாரன்றே.

---

இந்நான்கும், இந்நூல்
ஸ்ரீ உரையாசிரியரால்
இயற்றப்பட்டன.

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.





# சாத்துகவிகள்



இஃது

புரசை-அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாரவர்களா லியற்றப்பட்டது.

நேரிசை ஆசிரியப்பா.

பூமிசைநான்முகப் புனிதனைநியருந்
தேமுறவுணர்ந்து சொலற்கருமாமறை
முடிவுநூலின் முன்னிய துணிவும்
வடிவுறத்தெரிந்து மன்னுவிஞ்ஞான
பூரணநிலையிற் பொருந்துபுயோக
காரணசமாதி நிட்டைகைகண்டருள்
குரவுக்காட்சிக் குறிபிறழாது
திறமுறவுட்கொளீஇத் திகழ்முத்திராமப்
பிரமமென்னும் பெயரோன் மருகனென்
றிருநிலமகிழ்சிறப் பெய்துவண்ணோன்பா
லான்மாமுயற்சி யாவுமொழியாத்
தான்மாத்திரமாய்த் தருசுகாதீதத்
துட்டமோமயம்போற் போதமென்றயர்ந்து
விட்டகேவல வீடிவர்ந்தெளிநி

இஃது சிதம்பரம்

இராமலிங்கப்பிள்ளை யவர்களா லியற்றப்பட்டது.

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

நலங்கொள் சிவயோகமண நாற்றிசையு மணக்கும்
    ஞானமணங் கந்திக்குமோன மணநாறும்
விலங்கலில் சித்தாந்த மணம்பரி மளிக்குமின்பா
    வேதாந்த மணங்கமழும் வேதமணம்வீசும்
தலங்கொளு மெய்யத்துவிதத் திருமணமும் பரவும்
    தனிமுத்துக் கிருட்டினப்பேர் தங்கிய நம்பிரமம்
வலங்கொளு நன்னிட்டானு பூதியெனு நூற்கே
    வாய்மலர்ந்த வுரையெனுமோர் மாமலரினிடத்தே (உ)

---

இஃது சேமங்கலம் வித்துவான்

நாராயண முதலியார் பாடியது.

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பரமசிவ னுமையவளுக் குபதேசஞ் செய்யப்
    பரவியசீர் நிட்டானு பூதிதனைப்பார்மேல்
திரமருவு குகைநமசி வாயரருட் டொண்டர்
    திருக்கோவ லாறுமுக தேசிகர் செந்தமிழால்
வரமலிபாடலி னெழுதத் திருமூலர் மரபில்
    வருமுத்திராமப் பிரம்மகுரு கிளவரசாம்
உரமிலகு முத்துகிருஷ்ணப் பிரமமதற்கவதா
    ரிகைமுதலா முரையெழுதி யுலகிலச் சிட்டதுவே ()

இஃது திருநீர்மலை

கோபாலகிருஷ்ண கவிராஜசேகரர் பாடியது.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

குருவடிவாயுமைக் கரன்மொழிந்திட்டாறு பூதிதனைக் கோவ
[லூர்வாழ்
தருஞான வாறுமுக தேசிகன் செந்தமிழினிற் செய்தான
[ந்தமகுத்
தெருளுறநல்லுரை செய்தான் திருமூலர் வழிவருமுத்தி
[ராமப்ரம்மம்
மருகனிள வரசாமேலோன் முத்துகிருஷ்ணப் பிரமமெனும்
[வள்ளியோனே (சு)

---

இஃது - தில்லையம்பூர்ச்

சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பாடியது.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

சத்திதனக் கறையருளு கிட்டாறு பூதிதனைத் தமிழ்ப்பா
[வாக
எத்திசையும் புகழ்கோவ லாறுமுக தேசிகனு ரியம்பினைச்
சுத்தமிகுஞ் செய்யுளுக்குத் திருமூலர் மரபிளி வரசாய்த்
[தோன்றும்
முத்து கிருஷ்ணப் பிரமமுறை வகுத்துரைத் தான்றனைய
[றியுமுறையிற்றானே. (ரு)

---

இவை நரசிங்கபுரம்

## தமிழ்ப்புலமை வீராசாமி முதலியாரவர்களால்

இயற்றப்பட்டன.

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

அறுகுறு மாமலைமகளை யரனுக்கெயருளிய நிட்டாநுபூதிக்
கொருகுவ லயத்துள்ளோ ரந்ஞான மொழித்துய்ய வுரை
[செய்தானல்
திருகுமல மறவேயுற் சேர்வோர்க்குச சிவானுப வந்தெ
[ரியக்காட்டும்
பெருகு புகழ்த்திரு மூலர் மரபில்வரு முத்துகிருஷ்ணப்பி
[ரம மாதோ. (சு)

பட்டாருங்கனி நுகர்வார் சுவைத்திறத்தைத் தாமறிதன்மட்
[டேயன்றி
கட்டாரு முணரவெளிப் படுக்குனர் மற்றில்லையிந்தஞாலத்
[தோர்க்கு
நிட்டாநு பூதியெனுங் கனிசுவை தானறிந்த தனியிதி
[யாக
உட்டாவ வெளியிட்டான் முத்துகிருஷ்ணப் பிரமமெனும்
[யோகிதானே. (எ)

## இஃது தாயுமானசுவாமிகள் மரபிலெழுந்தருளிய எடுத்துக்கட்டி-அருணாசல சுவாமிகளால் இயற்றப்பட்டது.

### அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்.

அரனுமையாட் கூடமேர்த் தருளியகன் விட்டாரு மூதினூ
[லுக்
கிரவினிலத் திருவீக்கிப் பொருள்விளக்க லெனத்தெளிவா
[யுரையிட்டானும்
திரிமலமுஞ் சதுரசட்பா வழுமொழித்த திருமூல நாயனார்
[தம்
மரபில்வரு முத்துகிருஷ்ணப் பிரமமெனத் திசைபுகழு மா
தவத்திறைனை (அ)

---

## இஃது-திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் ஆதீனம் ஒன்பதாவது பட்டம் முத்துகுமார சுவாமிகளாலியற்றப்பட்டது

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

மருமலிந்த கொன்றையணிபர னுமை யாண்மகிழு வருள்வா
[ளத்திற
பொருண்மலிந்த நிஷ்ட்டானு பூதிதனைக் கோருவரையப்
[புகன்றிட்டானல்
இருண்மலிந்த பவப்புணரி தினைக்குமான வரின்பச்சலதி
[தோயத்
தெருண்மூலர் மரபிலவரு முத்துகிருஷ்ணப் பிரமமெனுந்
[தேவன் மாதோ. (௧)

இஃது-குளத்தூர் கரதலமூர்த்தியாகிய

சட்டநாத சுவாமிகளா லியற்றப்பட்டது.

அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்

நீர்நிறைந்த வண்டமெல்லா நின்றபரி பூரணத்தி னிலைமை
[நோக்கி
ஆர்நிறைந்த சிவஞானபோதக் கருவிய நன்னிட்டானு பூதி
[நூலுக்
சேர்நிறைந்த புத்தகமா யுரையாப் பிரமமெனு மெம்பெருமா
[னிரங்கியன்பாய்
பார்நிறைந்த வரும்பொருட்கு மருளளித்துப் பாவலரை பகர்ந்
[தான் மன்னே. (க0)

---

இஃது-திருவண்ணாமலையார் திருக்கூட்டத்தில்

ஒருவராகிய சேங்காலிபுரம்

கோவிற்பத்து குழந்தைவேலு ஓதுவாரவர்களால்

இயற்றப்பட்டது,

அறுசீர்க்கழி நெடில் ஆசிரியவிருத்தம்.

நிட்டானு பூதியுரை முத்தநிருஞ்சனப் பிரமங்கழுத்தமோன
மெட்டாத தேவர்முதல் முனிவர் சித்தர்மானிடர் மற்றே
[னையோர்க்குஞ்
சுட்டாமற் றன்னுடற்கு சமரசவா னந்த வெள்ளந் தொ
[டர்ந்தநோக்கிக்
கட்டான தொடர்பெல்லாங் கரைந்தத்துவித நிலையுங்கலந்
[ததம்மா. (கக)



உ




ஸ்ரீ சற்குருவே பரதுணை.

# நிஷ்டாநுபூதி

## மூலமும் - உரையும்.



காப்பு.

## அவதாரிகை

சிவஞான நிஷ்டையில் நல்லமைப்பட்ட இவ்வாசிரியர் தத்வமசி என்னும் சாமவேத மகாவாக்கியார்த்தமாகிய உத்தரவாதுளம் என்கின்ற ஆகமத்திலுள்ள நிஷ்டாநுபூதியிலுரைத்த தாயமைந்த சுபாநுபவத்தை ஆத்மகோடிகள் எளிதில் உணர்ந்துய்யும்படி ஆனந்தாதீதமாகும்

சித்திமுத்திகள் விளைகின்ற சிவானந்தபூமியாகிய பிரணவ சொரூபத்தைச் சுருதியுத்தி அனுபவத்தாற் காணக்கூடாமையால் சுருதி குருசுவானுபவத்தாற் கண்டறிந்து அடைகின்ற மேலான சத்துக்களென்பார்.—சித்தி திருவொடுமுத்திபெறுவரென்றார், எனவுங் கூறுவாருமுளர்.

## இதன் தாத்பரியம்.

அக்ஷர சொரூபங்களில், முதலெழுத் தென்றும், சர்வ ஆன்மாக்களுக்கும் பிரகாசிக்கின்ற சித்ரூபமென்றும், சுழிமுனையென்றும், பிரம்மாந்திரமென்றும், திர்க்குரூபமென்றும், பஞ்சவர்ணத்தழுருள்ளதென்றும், மாணிக்கவொளிபோன்றதென்றும், சின்மாத்திர சொரூபமென்றும். ஞானசூரிய னுதிப்பதற்கு மேருவென்றும், பிரம்ம சந்நிதானத்தில் தோன்றிய மாயாவிநோதயான சகத்விளையாட்டைப் பார்ப்பதற்கும், அவ்விளையாட் டொடுங்கினவிடத்தும் கேவலநிலையைப் பார்ப்பதற்கும், புருஷாகாரியைப்போலநின்ற ரூபாரூபமென்றும், சத்துச்சித்து ஆனந்தமென்றும், இன்னும் பலவாறாக யோகாகமங்களிலுங் கூறப்பட்டதென்றும், சொல்ல விளங்கிய பிரணவ சொரூபத்தை ஞானாசிரியரால் விசாரித் தடைந்தவர்கள் சர்வசித்தி முத்திகளைப்பெற்றுச் சாக்ஷாத் காரமாவதென்பதாம்.

அஷ்டமாசித்தியும், அவற்றின் விபாகமுமாவன அணிமா, மிகவுஞ் சிறிய வுயிர்தோறும் பரமகாஷ்டையாய்ச் சென்றிருத்தல், மகிமா, மிகவும் உயர்ந்த மகமேருவைப்போல ஆகவேண்டுமெனல் ஆதல். இலகிமா, மேருபாரத்தை யொத்த யோகியை எடுத்தால் இலேசா யிருத்தல். கரிமா, அணுப்போலிருக்கும் யோகியை எடுத்தால் மேருபாரமாயிருத்தல். பிராப்தி, எவ்வுலகத்திலுந் தடையறச் சஞ்சரித்தல். பிராகாமியம், பரகாயப் பிரவேசம்பண்ணுதலும்-அந்தரசஞ்சாரஞ்செய்தலும்-இச்சித்தபோகம் அனுபவித்தலும்-மண்ணில் விண்ணில் உள்ள பொ

ருள்களையும் முக்காலங்களையுந் தனது தேககாந்தியால் அறிதலுமாம். ஈசத்துவம், ஸர்வேசுவரனைப் போலத் தன்னிச்சைவழியில் முத்தொழிலுஞ் செய்து சூரியன்முதலிய கோள்கள் தன் ஏவல்கேட்க விளங்குதல். வசித்துவம், தேவர்முதலிய உயிர்களையும் எல்லாவுலகங்களையும் தன்வசமாகக் கொள்ளுதல்.

இரண்டறக் கலத்தலாவது:- சுருதி குருசுவயுத்திகளால் தன்னைச் சாக்ஷிமாத்திரமாய் அறிந்தபடியே ஏகமான தன்சொரூபத்தைச் சுத்தப் பிரமமாகச் சுவானுபவத்தாற்கண்டு தனக்கு அன்னியமாய்த் தோற்றிய தேகாதிகளைத் தன்னைவிட வேறேதுமில்லையென்றும், அப்படித் தோற்றுகிறதுபொய்யென்றும், அறிந்தறிந்தவிர்த்தியைச் சின்மாத்திரத்தில் ஐக்கியம்பண்ணி அவ்வைக்கியமென்கிற கிருசித் திருப்பாகிய அறிவுந்தானே என்றுணர்ந்து கேவலரூபமாய்த் துவிதமறக் கலந்துவிளங்குவதாம்.

அஷ்டமாசித்தியென் பதற்குப்பிரமாணம்.

(திருவிளையாடல்)

அணுவுஞ்சிறியவுயிர்தொறுங்காற் பரமகாட்டையணுவாய்ச்
சென்றுறையுஞ்சிறுமையணிமாவா மவனிமுதலமுதன்மே
லென்றலையுஞ்சிவாந்தமாறுமுள்ளும்புறனுமகலாதே
நிறையும்பெருமைதனையன்றேமகிமாவென்னுநிரம்பியநூல்
இலகுமேருபாரம்போலிருக்கும் யோகிதனையெடுத்தால்
இலகுவானதன்மைமேவிருப்பதிலகிமாவாகும்
இலகுவாமபாரவணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தால்
இலகுமேருபாரமென விருப்பதன்றேகரிமாவாம்
பிலத்திலிருந்தேவானவுலகிற்புகுதன்மீண்டுபிலமடைதல்
பலத்தின்மிகுந்தபிராத்தியதாம்பராகாயத்தினண்ணுதல்வா
ன், புலத்தினியங்கலீசத்தபோகமனைத்துந்தானிருக்குந்
தலத்தினினைந்தபடிவருதல்பிராகாமிய மாந்தவக்கொடியீர்

(பகவற்கீதை.)

யாதொன்றிந்தப்புலனறி யாவனாயினும்பயமாயிருக்கும் யாதொன்றினைச் சென்றடைந்தோர்கள் பின்னையதனினின்ற ண்டாசார், யாதொன்றினைப்பெற்றவர் தனின்மிக்கதோர்ப்பு ண்டென்னார்கள், யாதொன்றிந்தவறிவிற் பேயரியவாய்நிற்கு மதினின்றோர். (எ-ம்)

(கைவல்யநவநீதம்)

தஞ்சமாங்குருவுஞ்சானனை தத்துவவழிதப்பாமல்
பஞ்சகோசமுங்கடந்து பாசமூடியதன்னியுள்ளி
கொஞ்சமாயிருப்பும்விட்டுக் கூடாதபிரமமென்னும்
நெஞ்சமுமூழ்வியொன்றாய் நின்றதுபாலனோதுக்கண்ணன் (

(அன்றியும்)

அனுபவானந்தவெள்ளத் தழுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாடிச் சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானதற்குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன்சுபாவமானான் (எ-ம்)

(ஞானவாசிட்டம்)

அவ்வறிவு சங்கற்பத்தாற்கட்டுண்ணு
மதுவிடில்வீடுறு மந்தவறிவுதன்னைச்
செவ்விதினீயறிந்தனையாற் போகத்திச்சை
செககாட்சியனைத்தினையுந் தீர்த்தியானாய்

# இந்நூலுரை யாசிரியரது

திருக்கூட்டத்தாரால் மகிழ்ந்துரைக்கப்பட்டன

இஃது-சென்னைமாநகரத்துள்ள
திருக்கூட்டத்தாரில் ஒருவராகிய இங்கிலீஷ்
உபாத்தியாயர் மயிலை

## குருசாமி முதலியாரவர்களா லியற்றப்பட்டது

பதினான்குசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

வாதவூரர்க்குப்பெருந் துறையினிற்குந் தமரவடி யினிற் [தேசிக
வடிவாகிவந் தருளி மகிமைபெறு சிவஞான போதமெனு [முறைவழங்கும்
ஆகியேயருளொ டுங்காள் சென்னைமுத்து கிருஷ்ணப்பிரம [மெனவவதரித்
தவனிதனி லெவருங் கடைத்தேறும் வண்ணமிட்டாறு [இப்பெயர்பெறும்
கோயிலா ருரைநூற் குரையெழுதி மேற்கோளுடன் கொ [ண்டுத்தருளியத்தன்
துலவுநிதரிசனப்பிரமாணமாயில குறுங்குறைவிலாப் பெரு [மைதனையும்
ஆதனேனைப் புறம்புறமாட்கொண்டு தனிபத்தை தானந்த [மேற்சேர்த்திடு
மதனிரக்கத்தையுஞ் சொலவரகனுக்குமரிதாகில் யானென் [சொல்கேனே. (கக)

இஃது-தஞ்சைமாநகரத்துள்ள

திருக்கூட்டத்தில் இளவரசுபட்டம் பெற்ற

ஆறுமுகபிரமத்தினா லியற்றப்பட்டது.

பதினான்குசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

அலகில்வேதாந்த சித்தாந்தநிலை கட்கெலா மமருநிலையி
[தென்னவே
யருளுமென்றுமை கேட்கவண்ணலுங் கனிகொண் டறைந்த
[நிட்டாநுபூதிக்
கலைகுஞ்சுவானுறு திசகிசைய வின்பவுரை யிட்டனன் புலவ
[ரேத்த
வெமழுதன் மூவாசையும் மொழித்திவ்வடிவி லெனையாள
[வந்தபெருமான்
நலமேலோர்பலபுகழ் திருமூலர் மரபில்வரு நிமலன்மக
[வாக்கினெட்டா
நிகரிலாச் சிவயோக நிட்டையைப் புரிதற்கு நெறியோடு
[ணர்ந்துபெரியோன்
உலகினிலனைத்தையு மகண்டபரிபூரண சொரூபமாயுன்னு
[கின்ற
மெய்ப்பற்ற முத்திகுருவண்ணப்பிரம குரவனருமுணர்வரியமா
[னுபவனே (கசு)

---

எவ்வமறநிறைமனத்தா லடையற்பால
யாவுமடைந்தாய காக்ஷிக்கெட்டாதொன்றிற்
கவ்வையறவுடைகின்றாய் முத்தனை
கருத்திலுறுமயக்க மெனுங்கவலைதீர்வாய் (எ-ம்)

(ஞானசாதீதவெண்பா.)

உற்றுணர்ந்ததெல்லா முணர்வாகுமுண்மைதனிற்
பெற்றிருப்பதற்றவிடம் பேருகுங் , கற்றநூல்
பேசவினிவேண்டாம் பிறிதிலையத்துவிதம்
ஆசையற நின்றவிடமாம் (எ-ம்)

(திருவாசகம்)

சங்குதிரண்டுமுரன்றெழுமோசை தழைப்பனவாகாதே
சாதிவிடாத குணங்களமோடு சலித்திடுமாகாதே
அங்கிதுநன்றிது நன்றெனுமாயையடங்கிடுமாகாதே
ஆசையெலாமடியாரடியோமெனுமத்தனையாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர் சிந்தைதிளைப்பனவாகாதே
சீரடியார்கள் சிவானுபவங்கடெரிந்திடுமாகாதே
எங்குநிறைந்தமுதூறுபரஞ்சுடரெய்துவதாகாதே
ஏறறியாமறையோனெனையாள வெழுந்தருளப்பெறிலே ()

(சிவானந்தமாலை)

மித்தையுடல்கட்டறுத்து மெய்யருளாய் மெய்யொழிக்குந்
தத்துவமுங் கேவலமுஞ்சார்வகற்றிச் சுத்தத்

தனியாகித்தானும்போய்த் தற்பரமாய்விட்டாற்
சனியானிது சத்தியம். (எ-ம்)

(ஒழிவிலொடுக்கம்.)

என்றனையென்றனை யென்றனையேகபிரண்
டென்றுமற் றும்பரமென் றொன்று சொன்னான்
திருஞானசம்பந்தன் சீர்காழிநாடன்
அருளாளன் ஞானவேதியன் (எ-ம்)

(சொரூபசாரம்)

ஞானநூற்கற்றாலு நற்றவமுண்டாலு
மோனசமாதி முயன்றாலுந் தானாகி
எல்லாக்கவலையு மற்றின்புற்றிருப்பதுவே
சொல்லாருமுத்திச்சுகம். (எ-ம்)

சிவஞானசித்தியார்.

அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனையருளினா லறியாதேயறிந்து
குறியாதேகுறித்தந்தக் கரணங்களோடுங்
கூடாதேவாடாதே குழைந்திருப்பையாகிற்
பிறியாதசிவன்றானே பிரிந்துதோன்றிப்
பிரபஞ்சபேதமெல்லாந் தானாய்த்தோன்றி
நெறியாலேயவையெல்லா மல்லவாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதாரனாயே (எ-ம்)

கண்ணுடையவள்ளல்.

தம்மாலுயிர்த்தன யாவையுந் தாமலவென்றறிந்து
மும்மாயையும்மலமுங் குணநீங்கிமுழுதுமறிவாற்
சும்மாவிருக்கத் துரியங்கடந்த சுகமுதிக்குஞ்
சன்மார்க்கமுத்தியிதென்றான்றடங்கச்சியேகம்பனே()

அகஸ்தியமுனிவர்.

மூடுந்திடம்போசகந்தமோனமெய்ஞ்ஞானமுதல்வனின்னைப்
பாடுந்திடமேபதிபாசம்பசுவிருட்பறந்தற்றதும்
விடுந்திடநானென்று நாமென்று மாயையும் விட்டொ
[வையுங்
கடுந்திடத்தப்புறத்தப்புறத்தானந்தங்காணுமதே. (எ-ம்)

பட்டணத்துப்பிள்ளையார்.

வான்றேடுமறையேயோ மறைதேடும்பொருளேயோ
ஊன்றேடுமுயிரேயோ வுயிர்தேடுமுணர்வேயோ
தான்றேடநான்றேடச் சகமெலாந்தனைத்தேட
நான்றேடிநான் காணநானானேனோநானானேனோ எ-ம்

பத்திரகிரியார்.

என்னையென்னிலேமறந்தே, யிருந்தபதியும்மறந்து
தன்னையுந்தானேமறந்து, தனித்திருப்பதெக்காலம். எ-ம்

உண்மைவிளக்கஞ்சிந்தனை.

முத்திதனையடைந்தோர்முந்துபழம்போதங்கி
வித்தகமாம் வினையினைவிற்றி- மொத்த

விரதமணம் வெம்மையெழிறுதம்போல
விரவுவரென்றோதும்விதி.

அனுறியும்.

தத்துவங்களெல்லாஞ் சகசமாயான்மாவிற்
பெற்றதனினிற்கின்ற பெற்றிபோல்- முத்திதனிற்
சித்தமலமற்றார் செறிந்திடுவரென்றுமறை
சத்தியமா யோதியிருந்தான். எ-ம்

அத்துவித வுண்மை.

தன்னையறியாவியற்கையினிற் சத்தேபோலவிளங்கியிடுந்
தன்னையறிந்தவுடன்சத்தாய்த் தானேவிளங்குமிவ்வுலகந்
தன்னையறியுமளவுமில்லை தன்னைவிட்டவேறிலையெனவே
தன்னைநோக்கியிடினவையுந் தானாய்விளங்குமுடிவதனில்.

வரும்-மற்றும்வருவனவற்றாற்காண்க.

அத்துவித அபரோக்ஷானுபவத்தில் வேறுதோன்றாமல் பரிபூரணானந்தபோதமுறச் சகலமுந் தன்மயப்படுத்திக்கொள்ளுஞ் சுயஞ்சோதிமயத்தை அடைந்தவர்கள் சித்திமுத்திகள் பெறுவரென்றமையால் யாமும்நிர்விக்கினமாய் இந்நூல்நிறைவேறப்பெறுவோமென்றதாயிற்று.

---

காப்புமுற்றிற்று.

# பாயிரம்.

---

பரசிவவணக்கம்.

சீர்பூத்தசெஞ்சடையிற் சுரநதியுங்காமதியுஞ்செறிந்திலங்க
வார்பூத்தகுய வனிதையொரு புறத்திற்பசந்தொளிரவாரி [யுண்ட
கார்பூத்த மணிவண்ணன் கட்கமல மிணைக்கமலக் கழலின் [மேவ
வார்பூத்தகோவலில்வாழ் வீரட்டத்தொருமுதலையிறைஞ்சு [வோமே.

(இ-ள்) சிறப்புப்பொருந்திய செவந்தசடையில் தெய்வகங்கையும் அமுதகிரணங்களையுடைய இளம்பிறையும் - நெருங்கிப் பிரகாசிக்கவும் கச்சுப்பொருந்திய ஸ்தனங்களையுடைய தேவியார் இடப்பாகத்தில்(மரகதரத்தினம்போலப்) பசுமையாய் விளங்கவும் - நீருண்ட மேகத்தையொத்த மகாவிஷ்ணுவின் கண்ணாகிய தாமரைப்புஷ்பம்-இரண்டாகிய பங்கஜத்தைப்போன்ற திருவடிகளிற் பிரகாசிக்கவும் - அழகுபொருந்திய திருக்கோவலூரில் எழுந்தருளியிருக்கும் திருவீரட்டேசுவரரை வணங்குவாம். எ-று. ஏ-அசை

பரதேவதைவணக்கம்.

அரியநாயகியளவைக்கனுதினமு நெக்குருகுமுடியான்புக்
கூரியநாயகியெங்குந்தானாகி நீங்காமலொளிராநின்ற

கரியநாயகிகோவற்பிரானிடத்தி லெப்போதுங்கலந்துவா
[ழும்
பெரியநாயகியுபயபதமலரை யனுதினமும்பேணுவோமே.

(இ-ள்) மனத்தினாலும் வாக்கினாலும் நினைத்தலுஞ்சொல்லலுமாகிய அளவுக்கடங்காத ஈசுவரியாயுந் தினந்தோறும் மனம் நெக்குவிட்டுருகும் அடியார்களுடைய அன்புக்குச் சுதந்தரமான பரதேவதையாயும் எங்குந்தானே அகண்டாகாரமாய் நீங்காமல் பிரகாசிக்கின்ற சர்வசாக்ஷிக்குரிய உமையாயுந் திருக்கோவலூரில் எழுந்தருளியிருக்குந் திருவீரட்டேசுவரருடைய இடப்பாகத்தில் அனவரதமுஞ் சேர்ந்து வாழ்கின்றவளாய் விளங்குகின்ற பெரியநாயகி யம்மனது உபயசரணாரவிந்தங்களைத்தினந்தோறுந் தியானிப்பாம். —(எ - று) அகரம்-சாரியை
எ - அசை

கணபதிவணக்கம். - வேறு.

அரியானை யயன்மாலுக்க கண்டபேரொளியானைத்
தெரியானை யன்பிலர்க்கு மேதகமனவாக்கதனுக்
குரியானை யன்பர்தமக்குயர் பெரியாளின்றெடுத்த
பெரியானைக்கணபதியின் பிறங்கியபொற்பதம்பணிவாம்.

(இ-ள்) பிரம்மா விஷ்ணுக்களாலுங்காண அரியவராயும் - அகண்டாகாரமாகிய ஞானப்பிரகாசராயும் - அன்பில்லாதவர்களுடைய மனோவாக்குக் காயமென்னுந் திரிகாணங்களாலும் அளவுதெரியக்கூடாதவராயும் - அடியார்களுக் குரியவராயும் - உயர்ந்த பெரியநாயகியம்மன் பெற்றெடுத்த (மூத்தபுத்திரராயுமிராநின்ற) * பெரியானைக் கணபதியினுடைய, விளங்குகின்ற, அழகிய திருவடிகளை வணங்குவாம்.-(எ--று)

* பெரியானைக் கணபதி-என்பது - திருக்கோவலூரிலிருக்கும் விநாயகருக்குப் பெயராம்.

(சுப்பிரமணியர் வணக்கம்—வேறு)

கடல்கவற நெடுமாயக் கிரிவீழச் சூரனுங்கலங்கச் செம்
[பொன்
மடலவிழ் கற்பகநிழலின் வளரியும்வந்தா சிருப்பமகங்க
[ளோங்க
விடலரியவி புதர்சிறைவிட முனிவர்செய் தவங்கண் மேலு
[மோங்க
அடல்கெழு வேலேவிய வொரு றுமுகனடியிணையை யகத்
[துள் வைப்பாம்.

(இ-ள்) சமுத்திரசலம் சோஷித்துப்போகவும் - உயர்ந்தவஞ்சனையாகிய கிரவுஞ்சமென்னும் மலைபிளந்துவிழவுஞ் - சூரபன்மனுடைய மார்புகலங்கவுந் - தேவேந்திரனுஞ் செம்பொன்னிறமாகிய இதள்விரிந்த (புஷ்பங்கள் நிறைந்த) கற்பக விருக்ஷத்தின் நீழலில்வந்து கொலுவீற்றிருக்கவும் - யாகங்கள் விர்த்திக்கவும் - விட்டுநீங்குதற்கரிய சிறையினின்றுந்தேவர்கள் நீங்கவும் - ரிஷிகள் செய்யுந்தவங்கள் மேன்மேலும் வளரவும் - வெற்றியிருந்த வேலாயுதத்தைப் பிரயோகித்த - ஒப்பற்ற சண்முகக்கடவுளினுடைய உபயதிருவடிகளை உள்ளத்தின்கண் வைத்துத் தியானிப்பாம்—(எ-று) மடலவிழென்றதனால் புஷ்பங்களென்பது வருவிக்கப்பட்டது.

(ப-ம்) ஒருகாலத்தில் சூரபன்மனுக்குத் தோல்வியடைந்து சீகாழியிற்சென்று ஒளித்துப் பரமசிவனைப் பூசித்துக்கொண்டிருந்த தேவே

ந்திரன் மறுபடியும்வந்து அரசுசெலுத்தவுமென்பார்—வலாரியும் வந்தா
இருப்பவெனக்கூறினர். (4)

(திருநந்திதேவர் வணக்கம்—வேறு)

முந்துசஞ்சிதங்கழ மும்மலக்கங்குல்பாற
அந்தியும்பகலுமில்லா வாதித்தனகத்திற்றோன்ற
இந்தியம்புலன்கண்மாய வின்பவாரிதியின்மூழ்க
நந்தியெம்பெருமான்பாத நளினமென்சிரமேல்வைப்பாம்.

(இ-ள்) முதன்மையாகிய சஞ்சிதவினைகள் அழியவும் - மும்மலமா கிய இருள்நீங்கவும் - இரவும் பகலுமற்ற ஞானசூரியன் உள்ளத்திலு திக்கவும் - பஞ்சேந்திரியங்களும் அதன்விஷயங்களுங்கெடவும் - பிரம மானந்தக்கடலுள் மூழ்கவும் எம்பெருமானாகிய திருநந்திதேவருடைய பாதாம்புயத்தை எனது முடியின்கண்வைத்து வாழலாம்.—(எ-று)

(ப-ம்) பிரகிருதியின் தோற்றமாகிய பகலும் அதன் ஒடுக்கமாகிய இருளும் - இறந்து சகோதரமாய்ப் பிரகாசிக்கின்ற சர்வசாக்ஷியாகிய போறிவென்பர்— அந்தியும் பகலுமில்லா வாதித்தனென்றார். சஞ் சிதமாவது, அனந்தபவங்க ளுண்டாவதற்குக்காரணமாகிய வினைகள் கட்டுப்பட்டிருப்பதாம். மும்மலங்களாவன, ஆணவம் - மாயை - கன்ம மாம். இவற்றுள்- தண்டுலத்தைப்பற்றிய தவிடுபோல ஆத்மாவை ஆண வமலம் பற்றியிருக்கும், தண்டுலத்தைப்பற்றிய உமியைப்போல ஆத்மா வை மாயாமலம்பற்றியிருக்கும், தண்டுலத்தைப்பற்றிய முளையைப் போல ஆத்மாவைக் கன்மமலம்பற்றியிருக்கும். (5)

(நால்வர் வணக்கம்—வேறு)

அடிபணிவேனுமை சொர்க்கத்த முதையயின் றினியகவிய
[முகங்கந்தோன்
அடிபணிவேன் பவக்கடலு மூவர்க்கடலுங் கடந்தவர்க்கர
[சின் செங்கேழ்
அடிபணிவேன் பரவைபாற் பரசிவனைத் தூதாகவனுப்பு
[வித்தோன்
அடிபணிவேன் றிருவாதவூரடிகள் புகழேத்தியன் பிற்று
[னே.

(இ-ள்) அன்போடுங் கீர்த்திகளைத்துதித்துப் பார்வதியாருடைய ஸ்தனத்தின்பாலையுண்டு இனிமைதங்கிய செந்தமிழ்ப்பாடலாகிய அமுதத்தைத் தந்தருளிய திருஞான சம்பந்தசுவாமிகளுடைய திருவடிகளை வணங்குவேன்.—பிறவிக்கடலையும் - உப்புக்கடலையும்-நீந்திய அப்பர் சுவாமிகளுடைய சிவந்தநிறம்பொருந்திய திருவடிகளை வணங்குவேன் —பரவைநாச்சியாரிடத்திற் பரமசிவத்தைத் தூதாக அனுப்பவித்த சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளை வணங்குவேன் — (எ-று) தான் - சாரியை ஏ - அசை - அன்போடுங் கீர்த்திகளைத்துதித்து-என்றது - நால்வருக்குங்கூட்டுக. (6)

(வசவேசர்-சென்னவசவேசர் வணக்கம்.)

சிவசமயப் பயிர்தழையப் பரசமயக்களை நீங்கத்திகழ் வே
[தத்தோ
டுவமையிலா கமகீதியோங்க வரும்வசவணர் தாளுநவந்து
[போற்றி

அவமறுமாறங் கலிங்கங்களை முகஞ்சாதாக்கியம் பத்தியத்
[கஞ்சத்தி
இவைகளொரு வடிவாய சென்னவச வேசர்பத மிறைஞ்சு
[வோமே.

(இ-ள்) சைவசமயமாகிய பயிர்கள் விர்த்தியடையவும் - அன்னிய சமயமாகிய களைகள்கெடவும் - பிரகாசமுள்ள வேதங்களுடனே ஒப்பில்லாத வீரசைவாகமவொழுங்கு பிரபலத்தையடையவும் - அவதாரஞ்செய்து வசவண்ணரென்னுந் திருநாமத்தைக்கொண்ட சுவாமிகளது திருவடியைக் களிப்புடனே வணங்கிக் குற்றமற்றிராநின்ற - பீடம் - படிகிதம்பம் - கோமுகம் - மேல்வட்டம் - நாளத்தடி எனனும் - ஆறங்கத்தினையுமுடைய - லிங்கமூர்த்தியும் - சார்தியாதீதகலை - சாந்திகலை - வித்யாகலை - பிரதிஷ்டாகலை - நிவர்த்திகலை - என்னும ஐந்துகலைகளும், ஈசானம் - தற்புருஷம அகோரம் - வாமதேவம் - சத்தியோஜாதம். என்னும் ஐந்துமுகங்களும், சிவசாதாக்கியம் - அமூர்த்திசாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் - கர்த்ருசாதாக்கியம் - கர்மசாதாக்கியம் - என்னும் ஐந்து சாதாக்கியங்களும், சத்தி - மௌநாங்கம் - அத்தி - தலம - கர்மம் சுவை - என்னும் ஆறுபத்திகளும், காதல கமலமென்னும அஸ்தமும், பராசத்தி - ஆதிசத்தி - இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தி என்னும் ஐந்துசத்திகளும், ஆகிய இவைகளெல்லாம் ஏகரூபமாய் விளங்கிய சென்னவசவேசர் என்னும் அங்கித்தையுடைய எமது சுவாமிகளுடைய உபயசரணங்களை வணங்குவாம்.—(எ-று) வ-அடைச.

இலிங்கமாவது - இஷ்டலிங்கம் - பிராணலிங்கம் - பாவலிங்கம் ஆசாரலிங்கம் - குருலிங்கம் - சிவலிங்கம் - சரலிங்கம் - பிரசாதலிங்கம் - மகாலிங்கம் என - வீராகம சித்தாந்தப்படி ஒன்பதுவகையாமெனக்கொள்க

பஞ்சசத்திகளின் விபரமாவன, சிவத்தின் அம்சத்தில் - ஆயிரத்தொன்று பராசத்தியும், அப்பராசத்தியின் அம்சத்தில் - ஆயிரத்தொன்றுஆதி

சத்தியும், அவ்வாதிசத்தியின் அம்சத்தில் - ஆயிரத்தொன்று இச்சாசத்தியும், அவ்விச்சாசத்தியின் அம்சத்தில் - ஆயிரத்தொன்று ஞானசத்தியும், அந்த ஞானசத்தியின் அம்சத்தில் - ஆயிரத்தொன்று கிரியாசத்தியுமாமென்பது சைவாகமசித்தாந்தமெனக் காண்க. (எ)

(குகைநமசிவாயர் வணக்கம்—வேறு.)

அன்னமயம் பிராணமய மனோமயம் விஞ்ஞானமானந்த ம
[யத்தினுடனைங் கோசமாய
இன்னன்மய னீங்கிய மெய்ஞ்ஞானி யுளகுகையா மெப்போ
[து நீங்காமலிசைந்து மிகவாழ்வோன்
பன்னரிய விரிவுயர்வு சமமதிக மிலைவகள் பகர்வரிதாய்ப் பி
[ரமன்முதற் பண்ணவர் தம்முளத்தில்
உன்னரியோ னமசிவாய குருராயனுபய சரணமனத்
[துமுச்சியினும் வைப்பாம்.

(இ-ள்) அன்னமயம் பிராணமயம்-மனோமயம் - விஞ்ஞானமயம்-ஆனந்தமயம் - என்னும் பஞ்சகோசமாகிய துன்பத்துடனே இன்பத்தையும் நீங்கிய உண்மை ஞானியின் இருதயத்தையே குகையாகக்கொண்டு அனவரதமும் நீங்காமல் ஒத்துவாழ்கின்றவராயும், சொல்லுதற்கரிய விஸ்தாரமும் - உயர்வும் - சமமும் - விசேஷமும் - ஆகிய இவைகளில் வேறு சொல்லதற்கில்லாதவராயும் - பிரமன் முதலிய தேவராலும் - மனதின்கண் நினைததற்கரியவராயும், பிரணவசொரூபராயும், (விளங்குகின்ற) குகைநமசிவாய குருராயருடைய உபயசரணங்களை எமது அகத்திலுஞ் சிரத்திலும்வைத்து வாழ்வாம்.— (எ-று) தம்சாரியை.

அன்னமயமாவது, தோலும் - இரத்தமும் - தசையும் - நரம்பும்-எலும்பும் - மூளையும் - ஆகிய ஷட்பாவ விகாரமாகத் தோற்றுகின்ற-

ஸ்தூலதேகமாயிருத்தல், பிராணமயமாவது, பிராணாதியாகிய - சமஷ்டிவாயு ஒன்றுடனே வாக்காதிகர்மேந்திரியம் ஐந்துங் கூடியிருத்தல். மனோமயமாவது, புத்திநீங்கலாய் - மனமாதியாகிய சமஷ்டி - அந்தக்காணம் - ஒன்றுடனே வாக்காதிகர் மேந்திரியம் ஐந்துங்கூடியிருத்தல் விஞ்ஞானமயமாவது, புத்தி ஒன்றுடனே சுரோத்திராதி ஞானேந்திரியம் ஐந்துங்கூடியிருத்தல், ஆனந்தமயமாவது, மனோமயமும்-விஞ்ஞானமயமும் - அஞ்ஞானத்தி லமுர்ந்திய காரணதேகமாயிருத்தல். (8)

(குருநமசிவாயர் வணக்கம்—வேறு.)

சீலமிகுங்குகை நமசிவாயர் காசாதனராய்த் திகழுமன்பாற்
பாலினுறு சுவைபோலப் பனுவலவர் மீதுமம்பலவர் மீ [துங்
கோலமுடனே செப்புங்குரு நமசிவாயர் பதங்குழைந்து [போற்றித்
தாலமிசை நிலவவரு சிவசரணாகளை வணையுந்தாழ்ந் து [வாமே.

(இ-ள்) (ஞானமாகிய) நல்லொழுக்க மிகுந்திருக்கின்ற குகை நமசிவாயர் கையினுற்காட்டிய (சின்முத்திரையைச) சாதனமாகக் கொண்டவராய்ப் பிரகாசிக்கின்ற அன்பினலே அவ்வாசிரியர்மீதும் - சிதாகாசத்தில் எழுந்தருளியிருக்குங் கடவுளின்மீதும் - பாலிலுள்ள சுவையைப்போலும் (இனிமைதங்கிய) தமிழ்ப்பாடல்களை அழகாகச்செய்த குருநமசிவாயருடைய திருவடிகளை மனமுருகித் துதிசெய்து பூமியின் கண்ணே ஒளிவிளங்க அவதரித்த சிவசரணர்கள் யாவரையும் வணங்கி வாழ்வாம்.—(எ-று) ஏ-ஏ-அசைகள். (9)

(ஆசிரியவிருத்தம்.)

பத்தியங்கங்கொடு செய்யும் பூசனையுமறையாதி பகரும்வ
[ண்ணம்
இத்தரணிமிசைசெய்யும் பூசனையும்யானை முதலினசக்குமை
[ந்து
சுத்தியின்றிச் செயும்பூசை யமைதறியா நீசிதான சுழற்றிவீ
[சும்
அத்தனிக்கூவிளப் பூசைசங்கிரங்கலினால் யான்பாடவக முற்
[றேனே.

(இ-ள்) பரமசிவனார் இப்பூமியினிடத்தில் பக்தியாகிய அங்கத்தைக்கொண்டு செய்த பூசைக்கும் வேதாகமங்களிற் கூறியிருக்கும் விதியின்படி செய்த பூசைக்கும் சொல்லுகின்ற யானைமுதலாகப்பாம்பு சிலந்தி - எறும்பு - நண்டு - ஆகிய ஐந்தும்-பஞ்சசுத்தியில்லாமல் செய்த பூசைக்கும், அநுக்கிரகித்த தல்லாமல்-மூடத்தன்மையையுடைய சண்டாளஸ்திரீ யானவள் சுழற்றியெறிந்த வில்வம் (தன்மேற்பட அதையும்) பூசையாகக்கொண்டு கிருபைசெய்தபடியால் அடியேனுடைய சொல்லையும் அங்கீகரிப்பாரென்று இந்நூல்செய்ய நான்மனதில்துணிவுகொண்டேன்-எ-று தான்-இ-சாரியைகள்-வ-அசை,

பஞ்சசுத்தியான, ஆத்மசுத்தி - பூசுத்தி - திரவியசுத்தி-மந்திரசுத்தி-இலிங்கசுத்தி என்பனவாம்.

## நீசிக்கு அருள்செய்த வரலாறு.

### பிரமோத்திரகாண்டம்.

கேகயதேசத்தில் ஒருபிராமணனுடைய புதல்வி சௌமினியென்பவள் - தன்பிதாவினால் வேதவிதியின்படி மற்றொரு பிராமணனுக்குக் கலியாணம் பண்ணிக்கொடுக்கப்பட்டவளாய்ப் புருஷனுடனே இவ்வு

டத்தை யனுபவித்துக்கொண்டு இருக்கிறநாளில்-அந்தப்புருஷன்-தான் செய்த தீவினையினால் பலவியாதிகள்மேலிட்டு இறந்துபோக - அந்தச் சௌமினியானவள் அதிக துக்கமுடையவளாகிப் பின்னர் அதிக விரகத்தை யடைந்தவளாய்ச் சகியாமல் முறைதவறிச் சோரத்தனமாய்ப் பல புருஷரைச் சேர்ந்து பந்துக்களும் அன்னியர்களுமாகிய பெரியோர்களும், வாசித்தவர்களுஞ் சொல்லிய நன்மையைக்கேளாமல் காமசுகத்தையனுபவித்துக் கர்ப்பமடைந்தாள் - அதையறிந்த தாய் தந்தை முதலானவர்கள் அவளைவைத்துக்கொண்டிருப்பது இனி நமக்குத்தகாதென்று ஊரைவிட்டுத் துரத்திவிட்டார்கள். அப்போது சௌமினியானவள் - அதிக துக்கத்தோடுங் காட்டிற்போக - ஒரு வேளாளன்கண்டு - அழைத்துக்கொண்டுபோய்த் தன்வீட்டில் வைத்திருந்தான். அவனைச்சேர்ந்து - மாம்சபுக்தமும் மத்தியபானமும் பண்ணிப் பிள்ளையைப் பெற்று ஒரு நாள் அந்த வேளாளன் வெளியூருக்குப் போகத் தனித்திருந்த சௌமினியென்பவள் மாம்சந்தின்ன ஆசைகொண்டு தொழுவத்திற்புகுந்து கள்ளுண்ட மயக்கத்தினாலே பசுவின் கன்றைப்பிடித்து வெள்ளாடென்று நினைத்துக் கழுத்தையறுத்து வீட்டிற்குக் கொண்டுவந்து விளக்கின்முன்னே அறியும்போது பசுவின்கன்றென்று அறிந்து சிவசிவா கள்ளின்மயக்கத்தினாலல்லவா இப்படி நேரிட்டதென்று இரண்டுநாழிகை வரையிலுந் துக்கித்திருந்து பின்பு மாம்ச அபேட்சையினாலே அந்தப்பசுவின் கன்றின் மாம்சத்தைப் பாகம்பண்ணிப் புசித்துத்தோலெலும்புகளைத் தெருவிற்கொண்டுபோய்ப் புலிகொன்றதென்று சொல்லி அழுதுகொண்டிருந்தாள், பொழுது விடிந்தவுடனே புருஷனாகிய வேளாளன்வந்து பசுவின்கன்று இறந்துபோனதைக்கேள்விப்பட்டு வியசனமுற்றுச் சௌமினியுடன்சேர்ந்து இருக்கிறநாளில் சௌமினியானவள் வாழ்நாள் கழிந்திறந்து, இரண்டுகண்ணுடைய பார்வையில்லாமற் புலைமகளாய்ப் பிறந்தாள். நாயுண்ட எச்சிலையும் - மிருதியாகிய
உ. இறைச்சி முதலாகிய மாம்சங்களுடனே கள்ளையும்உண்பித்து வளர்

த்துந் தாய்தந்தைகள் இறந்துபோக - அப்புலைமகள் கருங்காக்கையைப் போல நிறமும்-தேகமுழுதும் புழுநெளிய அதிகரித்திரணமும் அதிகமா னகுஷ்டமும் - புண்வழியில் அதிக நாற்றமும்-சூலையும்-க்ஷயமும்-இன் னும - பல வித வியாதிகளுங் கொண்டிருந்ததால் ஒருவரும் விவா கஞ்செய்யாமற்போனார்கள். இவள் பசிமுதலாகிய நோய்களைத் தாங்க மாட்டாமல் புலைச்சேரிதோறும் பிச்சையெடுத்துண்டு இருக்குநாளை யில் தேகமிளைத்து மூப்படைந்து அதிக துன்பமுற்றுப் பசிவருத்தமே விட நடைதளர்ந்து சிவராத்திரி புண்ணியகாலத்தில், கோகர்ணத்துக் குப் போவார்களுடன் சென்று ஒரு வீதியிற்போய்க் கண்ணில்லாதவ ளுக்குப் பிச்சைபோடுங்களென்றலறித் திரிவதைக்கண்டு ஒருசிறுவன் தன்கையிற்போட்ட வில்வத்தை உணவென்று வாயிலிட--உண்ணத் தகாததாயிருந்தபடியால் அதைச்சுற்றி வீசினாள். அவ்வில்வங் காளிக் குச்சமீபத்திலிருந்த பழைய சிவலிங்கத்தின் முடிமேல் விழுந்தது-- அன்று இரவு நீங்கிச் சூரியோதயமானபின்பு வருத்தத்தோடும் ஒருபுலை மகள் கையைப்பிடித்துத் தடியையூன்றிக்கொண்டு கால்சோர அவ்வூ ரைவிட்டுப் போகும்போது பாலைநிலத்தில் இருமலினால் தவறிவிழுந்து மரணத்தை அடைந்தனள். சிவராத்திரிமுழுதும் ஆகாரமில்லாமலிருந் ததே விரதம் - பசியினால் தூயில்நீங்கியதே சாகரம் - அப்பொழுது தங் கவிடமில்லாமல் பனியில் நனைந்ததே ஸ்நாநம் - வில்வம் - எண்ணாமலெ றிந்ததாயினும் தன்மேற்பட்டபடியால் அதுவே அர்ச்சனையெனத் திரு வுளங்கொண்டு பரமசிவமருள்செய்ய-நவரத்தின கசிதாலங்கார விமா னத்துடன் பலசிவகணநாதர்கள் பூமியினிடத்துவந்து அவள் உயிரைத் திவ்வியரூபத்திற்சேர்த்து விமானத்திலேற்றி வித்தியாதரர்பாடவும் அப்ஸரஸ்ஸுகளாடவுங்கொண்டுபோய் முக்குணவசத்தராய் அஞ்ஞானவிரு ளிற்புக்கவர் பொருந்துதற்கு அரிதாயுஞ்சூரியனொளியை மின்மினி போலச்செய்யுங் காந்தியையுடையதாகவும் வேதவித்தாயும்பெறுதற்கு அரிதாயும் - அடைந்தவர் மீளக்கூடாததாயும்-யாவர்க்குஞ் சேர்தற்கரி தாயும் விளங்குகின்ற - மோக்ஷத்தின்கண்ணே சுவாமியுந் தேவியுங் காணவிட்டார்கள் - என்பதாம். (10)

## இதுவுமது.

வாருங்கோள் வையகத்தீ ரான்கீர வாரிதியை வள்ளத்தா [லே
பாருங்கோ ளளந்தீ வேலிகளு நன்றாயருந்திப் பாவிறு [ைச
தீருங்கோளென்றொருவன் செப்புதல்போற் சிவயோக நிட் [டை தன்னை
நீருங்கோளரவணியு மண்ணலென் மொழிப்படியே யாநிகழ்த் [சுறேனே.

(இ-ள்) கங்கையும் தீமையைப் பயக்கின்ற சர்ப்பத்தையும் தரித்த பரமசிவனார், உமைக்கு அனுக்கிரகித்தபடியே-சிவயோக நிஷ்டையை நிஷ்டானுபூதியென்னும் பெயரையுடைய நூலாக யாம் தமிழிற் செய்வது (எதுபோலுமெனில்) உலகத்தாரே வாருங்கள் நாம்பாற்கடலைக்கிண்ணத்திலேயளந்து குடித்துப் பாருங்கள் நீங்களுஞ்செவ்வையாகவுண்டு பாவிஞைசையைத் தீர்த்துவிடுங்களென்று ஒருவன் சொல்வதையொக்கும்,—எ-று. தான்-சாரியை-ஏ-அசைகள்.

(எனவே) பூலோகத்தார்-நரமானசையை விட்டொழிந்து அநாதூற் பயனாகிய பிரம்மநிஷ்டையை அடையும்பொருட்டு உமைக்குப் பரமசிவனார் அனுக்கிரகித்ததென்பது தோன்ற அண்ணல் மொழிப்படியெனவும், இந்நூல் பார்க்கத்தக்க நுட்பபுத்தியையுடைய புண்ணியாத்துமர்களாகிய இவ்வுலகத்தாரே வாருங்கடயீர்களென்பதுதோன்ற வாருங்கோள் வையகத்தீரெனவும், ஆத்மயோகிகளுக்கு பிரம்மநிஷ்டையையெடுத்துப்போதிக்கின்ற நாலுவேதங்களிலுண்டாகிய அஷ்டோத்தரசதவுபநிஷத்துகளும் அவற்றை மென்மேலும் தெளிவாகச்சொல்லுகின்ற பலநூல்களும் அளவிலென்பதுதோன்ற கீரவாரிதியையென

வும், அவ்வளவிறந்த சுருதிகளாகிய - பாற்கடலையறிந்து - அவற்றின் பொருளாகிய பாற்குடித்தற்கு ஆயுளின்மையால் - வரிசைக்கிரமமாக நிஷ்டையை - யாமெடுத்துப்போதிப்போமென்பது தோன்ற - யான் இன்னணத்தாலளந்தேனெனவும், உங்களுடைய அறிவின் கண்ணைக் கொண்டு அந்த நிஷ்டையைச் சாதித்துப் பரிபூரணமான ஆரூடபதத்தை-விரைவிலடைந்து நூலாசையை ஒழித்துவிடுங்களென்பதுதோன்ற பாருங்கோள் நீங்களுநன்றாயருந்திப் பாலின்ருசை தேருங்கோளெனவும், சர்வானந்த வல்லமையுள்ள இந்நூலாசிரியர் - தாம் நிர்வாணசுகத்தை-நிஷ்டானுபூதியென்னும் - பெயரையுடைய தமிழ் நூலாகச்செய்வதற்குக் கற்றுவல்ல சான்றோர் முன்பற்றாதவரெனத்தாழ்ந்து கூறுதல் முறைமையென்பது தோன்ற - என்னொருவன் செப்புதல்போற் சிவயோக நிஷ்டைதன்னை யானிகழ்த்தலுற்றேன, எனவுங்கூறினாரெனப் பெறும்.

நூல்வரலாறு.

அத்தனார் ரஜதகயிலைப் பீடத்துமையாள் வணங்கிமகிழ்ந்
[தன்பிற்கேட்ப
உத்தரவாதுளந் தன்னின்மேற் பூரம்படலத்தி லுண்மைஞா
[ன
முத்திதனை யுதவுநிட்டானுபூதியையெடுத்து மொழிந்தா
[னத்தை
இத்தலத்தியான் றமிழாற்புல்லறிவு கொடுபகல விசைந்து
[ளேனால்.

(இ-ள்.) கைலாசத்தி லெழுந்தருளியிருக்கின்ற கடவுளைத் தேவியானவர் வணங்கிச் சந்தோஷித்து அன்புடனே (ஆத்மஞான நிஷ்டையை அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று) கேட்க - அக்கடவுள்

வாதுளமென்னும் ஆகமத்தில் உத்தரபாகத்தில் இருபத்தெட்டாம் படலத்தில் (தாம் சொல்லியிருக்கின்ற) மெய்யறிவாலடைகின்ற மோக்ஷத்தைத் தருகின்ற நிஷ்டானுபூதியை - யெடுத்து வுபதேசித்தார். அதனை இப்பூமியின்கண் நான் என்னுடைய சிற்றறிவைக்கொண்டு (நிஷ்டானுபூதியென்னும் பெயரையுடைய நூலாகத்) தமிழினாற் பாடமனமிசைந்தேன்-எ-று-ஆல்-அசை.

பாயிரம் - முற்றிற்று.

ஆக திரு விருத்தம்-கஉ.

---

நூல்.

அவதாரிகை.

தேவியார் பரமசிவத்தை வணங்கி ஞானநிஷ்டா
சாதனையை அடியேனுக்குக் கிருபைசெய்ய வேண்டுமென,
அக்கடவுளுஞ் சொல்லுவோங்
கேட்கக்கடவாயெனல்.

நித்தனை யுமையாளடி பணிந்தெனக்கு நிட்டைசாதனை நிகழ்த்தெனவே
அத்தனுமகிழ்ந்தே நீயினிவிடுத லாருயிர்த்தொகை கண்மெய்புணர்வான்
முத்தியை யடையுங்காரணமா மான்மொய் குழற்செய்ய வாய்பசுந்தோள்
வித்தகி சாவதானமாய்க் கேட்டியென்றிறை விளம்பிடுமன்றே.

(இ-ள்.) என்றைக்கும் அழியாத நித்தியராகிய பரமசிவத்தை (நோக்கிப்) பார்வதியார் திருவடிகளிற் பணிந்து நின்று - அடியேனுக்குத் தேவரீர் பிரம்ம நிஷ்டாசாதனத்தை அநுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்று கேட்க-சகத்துக்கெல்லாம் பிதாவாய் விளங்குகின்ற அப்பரமசிவமும்-அகற்கு ஆனந்தத்தையடைந்து - நெருங்கிய கூந்தலையுஞ் சிவந்தவாயையும்-பசுமைபொருந்திய தோள்களையும் - கியானத்தையுமுடைய உமையவளே, நீ கேட்டது அலகத்தில் நிறைந்திருக்கின்ற ஆத்மபோதகர் (பழிசேர் முக்திகளைந்தி) உண்மையறிவால் மோக்ஷத்தையடைவதற்குக் காரணமாயிருக்கின்றது, (ஆகையால்) நீ சாவதானமாய்க் கேட்பாயாகவென்று சொல்லுகின்றார் எ-று-எ-ஆம்-அன்றால - இவ்வைந்தும் அசைகள்- மெய்புணர்வாலென்றதனால் பழிசேர்முத்தி வருவிக்கப்பட்டது.

(ப-ம்.) அண்டசராசரங்களெல்லாந் தம்மிடத்தில் தோன்றித்தோன்றி அழிந்தாலுந் தாமெப்பொழுதும் அழியாமல் சமஸ்தமுந் தாமாயுந் தாமல்லவாயும் விளங்குகின்ற கடவுளென்பார். நித்தனெனவும் மெழுக்குண்டையில் மறைப்புண்ட இரத்தினம்போல் ஆணவத்தால் மறைப்புண்டுகிடந்த சர்வாத்மாக்களுக்குந் தனுவாதிகளைக்கொடுத்து அவற்றின்கண் முன்னர் வினைகளைப் புசிப்பித்துப் பின்னர் சருகிருசுவானுபவங்களினால் ஆத்மஞானத்தை விளைவித்துப் பாதுகாக்குந் தந்தையென்பார் அத்தனெனவும், பஞ்சகிருத்தியங்களையும் செய்கின்ற ஒப்பற்ற தேவநாயகனென்பார். இறைவனையும், எவ்வண்டங்களும் அவைகளுள் உள்ள உயிர்த்தொகைகளும் உண்டாவதற்கு விதையாகவும் அகமாகவுமிருக்கின்ற சிற்சத்தியென்பார். வித்தகியெனவுங் கூறினார்.

(இ-ள்.) தேவியானவர் - லோகநாயகரைப்பார்த்து ஆத்மகோடிகளின் பொருட்டு-பிரம்மநிஷ்டாசாதனத்தை வினவினதாம்.

(பழிசேர்முத்திகளாவன.) உலகாயுதன், மகளிரிடத்துண்டான போகமே முத்தியென்பான். புத்தனாகிய சவுந்தராந்திகன். உருவம், வேதனை. குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்கிற பஞ்சகந்தங் கெடுகிறதே முத்தியென்பான். அமணனாகிய நிகண்டாவாதி, முக்குணங்களுங்கெடுகிறதே முத்தியென்பான். பிரபாகரன் எங்கும் விரிந்த காமியகன்மங் கெடுகிறதே முத்தியென்பான். அகச்சமயத்தில் பேதவாதி ஆணவமலங்கெடுகிறதே முத்தியென்பான். அகச்சமயத்தில் சமவாதி, சுத்தமாயாசரீரமழியாது நித்தியமாயிருக்கிறதே முத்தியென்பான், மாயாவாதி, சரீரதொந்தனைப்பட்டு நிற்கிற சீவாத்மாவுக்கு விவேகஞானமுண்டாகிறதே முத்தியென்பான். மாயாவாதத்தில் பாற்கரியன், ஆத்மாகெடுகிறதே முத்தியென்பான். அகச்சமயத்தில் சங்கிராந்தவாதி. பசுகரணங்கெட்டுச் சிவகரணமாகிறதே முத்தியென்பான். இதற்கு அவ்ஷ்டமாசித்தியுமென்பான். பாஷாணவாதி ஆத்மாகேவலத்திற் கிடக்குந்தன்மைபோல் முத்தியிலும் ஒன்றுமறியாமல் பாஷாணம்போலக் கிடக்கிறதே முத்தியென்பான். இவையன்றி இன்னுமனந்தமுள அவை பலநூலாலறிக. மெய்யுணர்வால் முத்தியை அடைவதாவது-ஆணவம்-மாயை-காமியம்-ஆகிய மும்மலங்களும் நீங்கி ஆத்மா அருளோடுகூடி நிற்பதேயாம். இதுவே முத்தியென்பதற்குப் பிரமாணம், (சிவப்பிரகாசம்.) அரிவையரின்புறு முத்திகந்தமைந்து மறுமுத்திதிரிகுணமுமடங்குமுத்தி, விரிவுவினைகெடுமுத்தி மலம்போமுத்தி விக்கிரகநித்தமுத்தி விவேகமுத்தி, பரவுமுயிர் கெடுமுத்தி சித்திமுத்திபாடான முத்தியிவை பழிசேர்முத்தி, திரிமலமுமகலவுயிரருள்சேர்முத்தி திகழ்முத்தி யிதுமித்தித் திறத்ததாமே. என்பதனாற்காண்க. (க)

(அ-கை.) சிவஞான தேசிகரால் அநுக்கிரகிக்கப்பட்ட மஹாவாக்கியத்தாலன்றி வினையவற்றால் முத்தி கிடையாதென்றுகூறுவான். தொடங்கி ஓர் மொழியினால் சர்வமுமொழிந்து வீடடையலாமெனல்.

ஒருமொழியாலே சுருதியாகமனூலுயர் புராணமு மெலாமொழி
யும், ஒருமொழியாலே சரிதைநற்கிரியா யோகபாவனையெலாமொழியும்,
ஒருமொழியாலேயண்டபூதங்க ளொடுங்கிநின்றன்னிலேதோன்றும், ஒரு
மொழிசும்மா விருந்தலாமதனுலொப்பிலாச்சிவபதமடைவார்.

(இ-ள்.) சற்குருவருளாற் பெறப்பட்ட) ஒரு சொல்லினுல் நான்கு வேதங்களும்-நான்கு உபவேதங்களும்-ஆறங்கங்களும்-முப்பத்திரண்டு உபநிஷத்துகளும் - இருபத்தெட்டு ஆகமங்களும் ஒன்பது உபாகமங்களும் - சப்தகோடி மகா மந்திரங்களும் - அறுசாஸ்திரங்களும் - பதினெண் புராணங்களும் - பதினெட்டு உபபுராணங்களும் - இரண்டு இதிகாசங்களும் என்று சொல்லுகின்றவைகளெல்லாம் ஒழிந்துபோம் - ஒரு சொல்லினுல், சரிதையாகியதொழிலுங் - கிரியையாகிய பூசையும்-அஷ்டாங்கயோகமுமாகிய எல்லாம் ஒழிந்துப்போம் ஒரு சொல்லினுல், அண்டங்களும் - பிருதுவி முதலாகிய பஞ்சபூதங்களும் ஒடுங்கிப்போம்- (பின்னர்) தமது ஆத்மசொருபமான உண்மைநிலை உதயமாம் - ஒரு சொல்லானது அசைவற நிலைத்துத் தன்மையை யுடையதாம் - அந்த ஒரு சொல்லினுல் எவையாலும் ஒப்பிட்டுக்கூறப்படாத சிவசாயுஜ்ய பதத்தை அடைவார்கள். (எ-று.) ஏ - ஏ - ஏ - அசைகள் - ஒருமொழி சும்மாவிருந்தலாமென்றது, ஒருசொல்லினுல் அசைவறநிற்குந் தன்மை யாமெனப் பொருள்கூறினும் அமையும் - சுருதியென்றமையால், உபவேதங்களும் - ஆறங்கங்களும் - உபநிஷத்துகளும் - ஆகமமென்றதனுல் உபாகமங்களும் - சப்தகோடி மகாமந்திரங்களும் உயர்புராணமென்றதனுல், உபபுராணங்களும் - எலாமென்றதனுல், இதிகாசங்களும் வருவிக்கப்பட்டன.

(ப.) அகண்ட - பரமானந்தம் - சின்மய-சிவா. அனன்னியவிசுத்த விக்கியான - கன - சச்சிதானந்த - பிரமத்தினிடத்தில் சமஸ்தமும் உற்பவித்த கிரமத்தையும் - லயத்தையும் விதித்துரைக்கின்ற - அருபத்து

ந்திரியங்களுடைய பேதரூபங்களான வியவகாரவிருத்திகளுக்கும், அவ் விருத்திகள் ஒடுங்கின கேவலரூப சமாதிக்குஞ் சர்வசாக்ஷியாய் விளங் குதலென்பார். சும்மாவிருத்தலா மென்ருரெனப் பொருள்கூறுதலே சிறப்புடைத்தாம்.

(இ-ம்.) பிரம்மசொரூபமாகிய ஞானதேசிகராலே அநுக்கிரகிக் கின்ற பிரக்கியானம் - பிரம்ம - அகம்பிரம்மாஸ்மி - தத்வமசி - அயமாத் மா - பிரம்ம என்னும - சதுர்வேதாந்தாங்க மஹாவாக்கியமாகிய ஓர் மொழியினும் சற்சொரூபமாயிராநின்ற அறுபத்துநான்கு கலைக்கியா னங்களும் - பிரத்தியக்ஷசொரூபமாய்ப் பரிணமிக்கின்ற - சரிதை - கிரி யைகளும் - தியானசொரூபமாகிய யோகமும் - பூதபௌதிகமாய்ப் பிர காசிக்கின்ற அண்டபூதங்களுமாகிய இவையெல்லாந்தனது வடிவமே யன்றி வேறல்லவென்றறிந்த சித்தவிர்த்தியைச் சின்மாத்திரத்தில் ஐக் கியம்பண்ணி அவ்வைக்கிய மென்கிற இடத்தில் நிலைபொருந்திய நிர திசயானந்தமுந் தானேயென்றறிந்தது நழுவிக் கேவலரூபமாய் விளங் குவதாம்.

ஒருமொழியென்பதற்குப் பிரமாணம். (திருவாசகம்.) புற்றுமாய் மரமாய்ப் புனல்காலேயுண்டியா யண்டவாணரும் பிறரும், வற்றியாரு நின்மலரடி காணுமன்னவென்னையோர் வார்த்தையுட்படுத்துப் பற்றி னுய்ப்பதையேன் மனமிகவுருகேன் பரிகிலேன் பரியாவுடறன்னைச், சென்றிலேனின்னுந் திரிதருகின்றேன் திருப்பெருந்துறைமேவிய சிவ னே. எ-ம்.—(திருமந்திரம்) ஓமென்னுமோங்காரத்துள்ளே யொரு மொழி, ஓமென்னுமோங்காரத்துள்ளே யுளபேதம், ஓமென்னுமோங் காரத்துள்ளேயுருவரு, ஓமென்னுமோங்கார மொண்முத்திசித்தியே- எ-ம். (கடவுளந்தாதி.) பாதத்திலே மனம் பற்றுவர்முற்றுவர் பாசமற் ருேர், நீதத்திலேநிலை பேராமற்சாதிப்பர் சித்துவித்தை, வாதத்திலே பொருளொன்ருகக்காண்பர் மனது நெறி, நீதத்திலேகுரு சொல்லாமற்

சொன்ன நிறையிதுவே-எ-ம். (பஞ்சாக்ஷரப் பசுபதிபாசவிளக்கம்.) தாரணியவர்க்கு நாலாஞ் சத்திநிபாதமெய்த, ஊருணிபோலத்தோன்றி யொருமொழியாலெனக்குக், கோரணிகாட்டுமாறு சமயத்தின் கோளை நீக்கிப், பூரணசொரூபங்காட்டும் புண்ணியன்பொலன்றாள் போற்றி-எ-ம்.—(நிகழ்காலத்திரங்கல்.) சீரமறையுஞ் சிவாகமமுஞ் செய்நூலும் வோரரவுணர்வு மொருமொழியாய்த்தந்தவா-எ-ம்.—(தத்துவராயசுவாமிகள்.) சொல்லுமெல்லைகண்முடிந்து துரிசொன்றுமிலதா, யெல்லையின்றிய வகண்டபரவின்பமிதெனு, வல்லவன்புதல்வன்வாழ வொருமோன மொழியா, லொல்லைகண்டு திளையாயெனவுவந்தருளினன்-எ-ம்.—(ஞானிகள்நிலைமை.) குருபதத்தஞ்சலி கூப்பியாதனத்தினுறைந்து கூறுமற்கூறிய வோர்மொழியுள்ளத்திருத்திக், கருவியெலாமொழிந்துக் காண்பான் காட்சியொழிந்து காணுதுகண்டு களியாது களித்துவப்பாற், பொருவருநிட்கள சுத்தமேகமெனவிளங்கும் பாக்குவரவில்லாத புனிதபூரணத்தை, இருவகைவாசனையுமிழந்திருக்கு மவன்ஞானியவற்குப் பிறவியுமுண்டெனவிளம்பலாமோ-எ-ம்.— (பட்டினத்துப்பிள்ளையார்.) வெட்டாத சக்கரம் பேசாதமந்திரமேலொருவர்க், கெட்டாத புஷ்பமிறையாததீர்த்த மினிமுடித்துக், கட்டாதலிங்கங் கருதாதநெஞ்சங் கருத்தினுள்ளே, முட்டாதபூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே-எ-ம்.—(தாயுமானசுவாமிகள்) அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்பவன்பினு லுருகிவிழிநீர், ரராமுகவாராது முத்தியினதாவேச வாசைக்கடற்குண்மூழ்கிச், சங்கரசுயம்புவே சம்புவேயெனவுமொழி தழுதழுத்திடவணங்குஞ், சன்மார்க்கநெறியிலாத் துன்மார்க்கனேனையுந் தண்ணருள் கொடுத்தாள்வையோ, துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்கடொழுதருகில் வீற்றிருப்பச், சொல்லறிய நெறியையொ

ரு சொல்லாலுணர்த்தியே சொருபானுபூதிகாட்டிச், செங்கமலபீட மேற் கல்லாலடிக்குநள்வளர் சித்தாந்த முத்திமுதலே, சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே சின்மயானந்தகுருவே-எ-ம். வரும்-மற்றும் வருவனவற்றாற் காண்க.

சும்மாவிருக்கலா மென்பதற்குப் பிரமாணம். (கந்தானுபூதி.) செம்மான்மகளைத் திருடுந்திருடன், பெம்மான் முருகன் பிறவானிறவான், சும்மாவிரு சொல்லறவென்றலுமே, யம்மாபொருளொன்று மறிந்திலனே-எ-ம். (அத்துவிதக்கலிவெண்பா.) மும்மாயைக்கப்பாலா முப்பாழுங்கண்டபின், சும்மாவிருவென்று சொன்னானம்மானை, வேறுபொருளில்லையென்றான்-எ-ம்.—(ஒழிவிலொடுக்கம்.) சும்மாவிருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திரத்தை, விம்மாககதமயவதும் வேலைகளும்-தம்மறிவா, னிட்டிப்பிடித்திருக்குந் திட்டைகளு ஞானிகள்முன், காட்டும் பரியாசகம்.—(சந்நிதிமுறை.) சும்மாவிருவெனச் சொல்லப்பொருளொன்றும், அம்மாவறிந்திலமென் றன்றுரைத்த-எம்மான், அருணகிரிநாதனனுபவநாயேற்குக், கருணைமொழிப்பொருளாகாட்டும்-எ-ம்.—(ஞானசுகாதீதவெண்பா.) உன்னாதே யோதாதே யொன்றியொருமந்திரத்தைப், பன்னாதே சாத்திரங்கள் பாராதே யென்றுமே, அப்பாலுமொப்புவமை யற்றசுகாதீதத்தில் எப்போதுஞ் சும்மாவிரு-எ-ம்.— (பட்டினத்துப்பிள்ளையார்.) சும்மாவிருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன், அம்மாபொருளிதென வவ்வுடைய விழுப்பினன்றி, எ-ம்.—( தாயுமானசுவாமிகள். ) நானெனவுநீயெனவு மிருதன்மைநாடாமனடுவேசும்மா, தானமருநிலையிதுவே சத்தியம்.—(அன்றியும்) சும்மாவிருக்குஞ் சுகஞ்சுகமென்றுசுருதியெல்லாம் அம்மாநிரந்தரஞ்சொல்லவுங்கேட்டி மறிவின்றியே, பெம்மான்மவுனிமொழியையுந் தப்பியெனபேதமையால், வெண்மாயக்காட்டி லலைந்தேனந்தோவென் விதிவசமே எ-ம்;—வரும் - மற்றும் வருவனவற்றாற் காண்க.

ஞானாசிரியரால் பக்குவராது அத்துவாக்களைநீக்கி அதுவேநீயென்று காட்டுவதென்பதற்கும் பிரமாணம். (தாயுமானசுவாமிகள்.) வந்தெனுடல் பொருளாவிமூன்றுந் தன்கைவசமெனவே யத்துவாமார்க்கநோக்கி, ஐந்துபுலனைம்பூதங் கரணமாதியடுத்தகுணமத்தனையு மல்லையல்லை, இந்தவுடலறிவறியாமையுநீயல்லை யாதொன்று பற்றினதனியல்பாய் நின்று, பந்தமரும் பளிங்கனைய சித்துநீயுன்பக்குவங் கண்டறிவிக்கும் பான்மையேயாம், என்பதனுற்காண்க.—முப்பத்தாறு தத்துவங்களுங் கடந்துபோய்த் தான் சும்மாவிருத்த லென்பதற்குப பிரமாணம். அன்றியும்-ஐந்தவகையாகின்ற பூதமுதனுதமுமடங்கவெளியாக வெளிசெய், தறியாமை யறிவாதி பிரிவாகவறிவார்க ளறிவாக நின்றநிலையிற் சிந்தையறவில்லென்று சும்மா விருத்தி-என்பதனுற்காண்க-சிவஞானதேசிகர் தமது திருநோக்கத்தாற் காட்டுவதென்பதற்குப் பிரமாணம். (சிற்றம்பலநாடிகள்.) மொழியாலுரைக்கிற் குறிக்கப்படுமென்று மூதறிவால் ஒழியாநிறைவையு மானந்தவாழ்வையு மொண்புகலின், அழியாவிரதகுஞ் சிற்றம்பலநாடி யகமகிழ்ந்த, விழியாமலனைக் களித்தான் விடுத்தேனின்ப மேலிட்டதே-எ-ம்:-(சசிவர்ணபோதம்) உவமையொப்பின் ஞானிவிழிபட்டு முன்னைவினைபட்டு முத்தியுலகிற், றவமற்றுமேவ யனையேபுரிந்த சசிவண்ண னெய்துகதையே-எ-ம்:—மகாவாக்கியம்) இருவிழிகளுலகறிந்துந் தனையறியாததுபோல, யானறியும் பொருளனைத்துங் கேளையறியாமையினுல், கருவிடைப்புக்கின்பதுன்பக் கடலிடையேசுழன்று கண்கலக்கப்படுவேனைக் கருணைவிழியதனுல், அருவினைகளறநோக்கி யாணவமேம்போக்கி யகமகமென்றிருந்தலா மறிவுகொண்டேநீக்கிப், பருவமதிற்பதந்தாக்கிக் கற்பனைகளியாவும் பாழாக்கித்தானுங்கும் பரகுருவைப் பணிவாம்-எ-று.—(சிவானந்தமாலை.) வீடொழியப்பேறில்லையென்றென்றும் வேதங்கள். நாடியன்றையும்பொருளை ஞானகுரு நீடுமெருட், கண்ணலேகாட்டும் கருணைப்பிரான்றனைநா, னெண்ணுவதே யுண்

டிருப்பதென்-எ-ம்.—தேவாரம்) அத்தாவுன்னடியேனையன் பாலார்த்தாயருளுக்கித் தீர்த்தநீராட்டிக்கொண்டாய், எத்தனையுமரியை நீயெளியையானு யெனையாண்டுகொண் டிரங்கியென்றுகொண்டாய், பித்தனேன் பேதையேன் பேயேனாயேன் பிழைத்தனகளத்தனையும் பொறுத்தாயன்றே இத்தனையுமெம்பரமோவையோவையோ வெம்பெருமான் றிருக்கருணையிருந்தவாறே. எ-ம். (தத்துவராயசுவாமிகள்.) பிள்ளைதனக்கொருவர் பேதித்துப்பேதியா, வுள்ளபொருளெல்லா முணர்த்துவிக்கத்-தெள்ளும்; விழியைக்கொடுத்தருளி வேதாந்தந்தன்னை, மொழியப்புகுந்தான் முனி-எ-ம். வரும்-மற்றும் வருவனவற்றாற்காண்க.

தேகேந்திரிய விருத்திகளுக்குங் கேவல சமாதிக்குஞ் சாட்சிதானே யென்பதற்குப் பிரமாணம். (கைவல்யநவநீதம்.) செய்கையுஞ் செய்விக்கையுமற் றிருக்குங்காந்த சிலைமுன்னிரும்புகள் சேட்டிக்குமாபோற், செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்குமென்முன் சடமானவுலகமெலாஞ் சேட்டைசெய்யு, மெய்கலந்த விந்திரிய விகாரரூபவிவகார விருத்திக்கு விருத்திசானு, மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சியேநான் வெயில்போலென் றுரைத்தவனே விபுமாகர்தன் - என்பதனாற் காண்க.

நான்குவேதங்களாவன, இருக்கு - தைத்திரியம். சாமம் - அதர்வணமாம். நான்கு உபவேதங்களாவன, ஆயுள் - அர்த்தம் - தனுர் - காந்தர்வமாம். ஆறங்கங்களாவன, மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிஷமா. முப்பத்திரண்டு உபநிஷத்துக்களாவன; ஸ்ரீருத்திரம் - பிரகதாரண்ணியம் - சுவேதாசுவதரம் - கைவல்யம் - காலாக்கினி - கடவல்லி - சாத்திவாயனம் - பிரமம் - நாராயணம் அங்கிசம் - பரமாங்கிசம் - பாற்கரம். பிரமபிந்து - ஆருணி - அமிர்தபிந்து - பகுவபஞ்சம் - பிரமசாபாலம் - தேஜோபிந்து - வார்ச்சியாநீயம் போதாயநீயம் - ஆசுவலாயநீயம் - சாங்கியாயநீயம் - வாசிராயநீயம் -

சௌனகீயம் - சிவசங்கற்பம் - சிரவணம் - பாராகம் - கிம்புரோடியம் - மாண்டூகம் - முண்டியம் - மௌண்டிரம் - ஜாபாலோபநிஷத்து - ஆம். இருபத்தெட் டாகமங்களாவன, காமிகம் - யோகஜம் - சிந்தியம் - காரணம் - அஜிதம் - தீப்தம் - சூக்ஷுமம் - ஸகஸ்திரம் - அஞ்சுமான் சுப்பிரபேதகம் விஜயம் நிசுவாசம் சுயம்புவம் அனல் டவீரம் இரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் பிம்பம் புரோற்கீதம் இலளிதம் சித்தம் சந்தானசர்வோத்தம் பாரமேச்சுரம் கிரணம் பேதம் வாதுளமாம்.

ஒன்பது உபாகமங்களாவன, பாதற்பாரகம் பரம் சிவம் சத்திகலை பிரகாசம் பாரதந்திரம் சிவாக்கியம் சொற்பிரகாசமாம் சப்தகோடி மகாமந்திரங்களின் பெயர்களைக் கற்றுவல்ல சான்றோர்களாலும், நூலாந்திரங்களாலும் உணர்க. ஆறுசாஸ்திரங்களாவன, வேதாந்தம் வைசேஷிகம் பாட்டம் பிரபாகரம் பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸையாம். பதினெண்புராணங்களாவன, சைவம் ஸகாந்தம் இலிங்கம் கூர்மம் வாமனம் வராகம் பௌஷிகம் மச்சியம் மார்க்கண்டேயம் பிரமாண்டம் இவை பத்துஞ் சிவபுராணமாம். நாரதீயம் பாகவதம் காருடம் வைணவம் இவைநான்கும் விஷ்ணுபுராணமாம். பிரமம் பதுமம் இவை இரண்டும் பிரமபுராணமாம், பிரமகைவர்த்தம் சூரியபுராணமாம் ஆக்கினேயம் அக்கினி புராணமாம் பதினெட்டு உபபுராணங்களாவன, உசனம் கபிலம் காளி சநற்குமாரம் சாம்பவம் சிவதர்மம் சௌரவம் ஆருவாசம் நந்தி நாரசிங்கம் நாரதீயம் பராசாரம் பார்க்கவம் ஆங்கிரம் மாரீசம் மானவம் வாசிட்டலிங்கம் வாருணமாம். இதிகாசங்களாவன பாரதம் இராமாயணமாம்.

சரிதையாவது, சிவாலயங்களில் அதிகாலமே திருவலகிடல் திருமெழுக்கால் மெழுகல் திருவிளக்கிடல் சுத்தஞகநந்தவனத்திற் சென்

றுதெரிந்து புஷ்பமெடுத்தல் தேமாலையாதிகட்டி ஈசன் திருமேனியில
ணிவித்தல், தேவாரம் திருவாசகம் பக்தவிலாசம் ஆகமம் புராணம் ஆகிய இவைமுதலானவைகளைப் பாராயணஞ்செய்தல். வில்வம்முதலான புஷ்பச்செடிகளைவைத்துப் பரிபாலனஞ்செய்தல். விபூதிருத்திராக்ஷம் காஷாயம் இலிங்கம் பஞ்சாக்ஷரம் என்னும் இப்பஞ்சமுத்திரையில் ஒருமுத்திரையையாவது தரித்த சிவனடியார்களைக் கண்டால் பரமசிவத்தை வழிபடுதல்போல் வணங்கிவந்தனை வழிபாடுசெய்தல்; சிவாலயம் விஷ்ணுவாலயம் பிரம்மாலயம் சாவடி சத்திரம் ஆகிய இவைகளை நூதனமாகச்செய்வித்தல். தினந்தோறுங் கங்கைமுதலாகிய புண்ணியநதியில் ஸ்நானஞ்செய்தல். ஆலயங்களில் அங்கப்பிரதக்ஷணஞ்செய்தல் அடியளந்துநடத்தல் நூற்றெட்டு ஆயிரத்தெட்டென்னுந் தொகைப்படி பிரதக்ஷணஞ்செய்தலாம்.

கிரியையாவது, சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் நைவேத்தியம் ஆகிய 5-ம் கோசலம் கோமயம் பால் தயிர் நெய் ஆகிய 5-ம் வாழைப்பழம் எலுமிச்சம்பழம் நாரத்தம்பழம் நெல்லிப்பருப்பு இளநீர் ஆகிய 5-ம் மற்றும் உபகாரணமான ஆசாதிரவியங்களுஞ் சேர்த்து ஆத்மசுத்தி பூசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி, ஆகிய பஞ்சசுத்தியும், சவுரபூசையுஞ்செய்து சிவத்தியானம்பண்ணிப்பட்ச பிரம்மஷடங்க பஞ்சாக்ஷரமந்திர உச்சாடனத்தால் ஆவாகன, அவகுண்டன தேனுயோனி, அமுர்தீகரண, லிங்கமுத்திராம்பரதரிஸ், என்று திக்குபந்தனாதி, மந்திரகிரியா பாவனைகளைக் குறைவில்லாமற்செய்து ஆதனமூர்த்தியை மூலத்தினாலும், அஷ்ட புஷ்பத்தினாலும், அர்ச்சித்துப் பீடத்துவார குருபூசைகளும் ஈசானாதி முதலாவரணமும் அனந்தாதி இரண்டாமாவரணமும் நந்தியாதி மூன்றாமாவரணமும் இந்திராதி நான்காமாவரணமும் வஜ்ராதி ஐந்தாமாவரணமும் அந்தந்த தேவதாபாவனையுஞ் செய்து வில்வத்தினால் நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்னும் நாமங்களை

உச்சரித்து அர்ச்சித்து ஆனந்தத்துடனே தோத்திரமும் இன்பமாக ஓமமுஞ்செய்து முறைப்படிசெய்த பூசையில் தனக்கொரு போகத்தையுங் குறியாமல் நிஷ்காமமாகச் சிவார்ப்பிதஞ்செய்து சண்டேஸ்வர பூசையுஞ்செய்தலாம்.

அஷ்டாங்கயோகமாவன, இயமம் நியமம் ஆதனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி ஆம். இவற்றுள். (இயமம்) பத்துவகைப்படும் அவையாவன, அஹிம்சை சத்தியம். அஸ்தேயம், பிரம்பசரியம் தயை ஆர்ஜவம் க்ஷமை திரிதி மிதாஹாரம் சவுசம் ஆம். அஹிம்சையாவது, (யோகார்த்தம்) திரிகாணத்தாலும் அன்னிய பிராணிகளுக்குத் துக்கத்தைச் செய்யாமலிருத்தல். (ஞானார்த்தம்) ஆத்மா அறுக்கப்படாதது தகிக்கப்படாதது நனைக்கப்படாதது உலத்தப்படாதது எனவறிதல். சத்தியமாவது. (யோ-ம்) எதார்த்த கேள்வியினாலும் பிரத்தியக்ஷப் பார்வையினாலும் அறிந்ததைச்சொல்லுதல். (ஞா-ம்) எவற்றையும் சத்தியபிரம்மமயமாய்ப் பார்த்தல். அஸ்தேயமாவது (யோ-ம்) அன்னியருடைய சொத்துகளைக் கிரகிக்க வேண்டுமென்று மனத்தாலும் நினையாதிருத்தல். (ஞா-ம்) ஆத்மாவை அனாத்மாவாக உச்சரியாமலிருத்தல். பிரம்மசரியமாவது, ( யோ-ம் ) ருதுகாலமன்றி மற்றகாலத்தில் சுவ ஸ்ரீயையும் விரும்பாதிருத்தல். (ஞா-ம்) மனத்தினால் தன்னை பிரம்ம சொரூபமாகத்தானே எண்ணிக்கொள்ளுதல். யையாவது, தன்னைப்போல் யாவரும் மோக்ஷத்தை அடைய மனதிற் ப கொள்ளுதல், ஆர்ஜவமாவது, பெண்டீர்முதல் சத்துருவரையிலுஞ் சமம மாயிருத்தல். க்ஷமையாவது. சத்துருக்கள் தங்கள் திரிகரணங்களாலுஞ்செய்யா நின்ற துக்கங்களை மனதில் தரியாமலுங் கலங்காமலுமிருத்தல். திரிதியாவது, (யோ-ம்) வேதவிசாரயினால் சமுசாரத்திலிருந்துவிடுபடுதலேசுகமன்றி வேறில்லை யென்றறிதல் (ஞா-ம்) நான் பிரம்மமேயன்றித் தேகமல்லன் என்று நிச்சயித்தரிதல். மிதாஹாரமாவது,

அதிகமுங் கொஞ்சமுமில்லாமல் சமமாகப்புசித்தல், சவுசமாவது, (யோம்) காயத்தை மண்ணினாலும் சலத்தினாலுங் கழுவுதல். இதுபகிஸ்ஸவுசம். (ஞா-ம்) சொரூபத்தை மனனஞ்செய்தல், இது அந்த ஸ்ஸவுசம். (நியமம்.) பத்துவகைப்படும். அவையாவன, தபசு சந்தோஷம் ஆஸ்திக்கியம் தானம் ஈஸ்வரபூசை சித்தாந்தச்சிரவணம் லஜ்ஜை மதி செபம் விரதம் ஆம் தபசாவது, (யோ-ம்) உபாசனத்தினால் தேகத்தை சுஷ்கப்பண்ணுதல (ஞா-ம்) ஆத்மவிசாரம் பண்ணுதல் சந்தோஷமாவது, (யோ-ம்) அற்பசிரமையினாலாயது பரயிச்சையினாலாவது கிடைக்கின்ற புசிப்பினிடத்திலே போதுமென்று திருப்தியடைதல். (ஞா-ம்) இகத்திலும்பரத்திலும் அடையாநின்றபோகங்களில் உபேக்ஷைபண்ணி ஆத்மாவினிடத்தில் பிரீதிவைத்திருத்தல் இதற்குப் பரமசந்தோஷமென்றும் பெயர். ஆஸ்திக்கியமாவது, சுருதி ஸ்மிருதி வாக்கியார்த்தத்தில் விசுவாசம்வைத்தல் தானமாவது, நீதியில் நின்று சம்பாதிக்கின்ற தனதிப்பொருளைப் பிரமநிஷ்டர்களுக்குங் கர்மிகளுக்குங் கொடுத்தல் ஈஸ்வரபூசையாவது, திரிமூர்த்திகளையும் வர்ணத்திரயத்தாரும் தங்கள் சக்திக்குத்தக்கபடி பூசித்தல் சித்தாந்தசிரவணமாவது, வேதசித்தாந்தத்தைக் குருமுகத்தில் நிச்சயித்தல். லஜ்ஜையாவது. லவுகீகத்திலாவது வைதீகத்திலாவது பொல்லாங்கானகாரியத்தில் வெட்கமடைதல், மதியாவது, வேதத்திற்சொல்லிய புண்ணியங்களை விசுவாசித்தல். வேதசாஸ்திரத்தின் அர்த்தம் விசாரித்தல். செபமாவது. வேதஞ்சொன்னபடி மந்திரங்களை உருவேற்றுதல். இதைப்பாசுபத விரதமென்றும் சிரோவிரதமென்றும் அத்தியா சிரதமென்றுஞ் சொல்லுவார்கள். விரதமாவது, கோபத்தால் அன்னியனை அடித்தல். அன்னியருடைய ஸ்ரீயைப்பிடித்தல். அன்னியருடைய சொத்தைப் பலவத்காரமாக எடுத்தல் ஆகிய இம்மூன்றையுஞ் செய்யாதிருத்தல் வாக்கினால் கடூரமாகப் பேசுதல் பொய்சொல்லுதல் கோள்சொல்லுதல் ஊறல், ஆகிய இவை நான்கையும் விட்டிருத்தல் மனசு அரிஷ்டவர்க்கத்தை விட்டிருத்தல்.

தேகமுழுதும் விபூதிதாளிதம் பண்ணுதல்- (ஆசனம்.) ஒன்பதுவகைப் படும். அவையாவன, ஸ்வஸ்திகம் கோமுகம் பதுமம் வீரம் கேசரி பத்திரம் முத்தம் மயூரம் சுகம் ஆம். இவற்றுள் ஸ்வஸ்திகமாவது தொடைக்கும் முழங்காற்கும் நடுவே இரண்டு உள்ளங்காலையும் செலுத்தி இறுமாந்திருத்தல் கோமுகமாவது, ஜகனபக்கத்தில் இருகாற்பாட்டையும் மாறவைத்து அவ்விருகாற் பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல் பதுமமாவது, இருதொடைமேலும் இரண்டு உள்ளங்காலேயும் மாறித் தோன்றவைத்தல். வீரமாவது, வலத்தொடையில் இடக்காற் பாட்டைச்சேர்த்து இறுமாப்புற்றிருத்தல். கேசரியாவது, பீஜத்தின்கீழ் ஜீவனியிடத்துப் பாட்டைவைத்து இடமுழங்கையை முழந்தாளில்வைத்து அங்குலியைவிரித்து நாசியைப்பார்த்திருத்தல். பத்திரமாவது, பீஜத்தின்கீழ் ஜீவனியிடத்து இருகாற்பாட்டையும்வைத்து அவ்விருபதத்தையும் இருகையால் இறுகப்பிடித்து அசையாதிருத்தல். முத்தமாவது, இடக்காற்பாட்டால் ஜீவனியை அழுத்தி வலக்கால்பாடு அப்பாட்டின்கீழ் உந்தவிருத்தல. மயூரமாவது, முழங்கை இரண்டும் உந்திப்புறத்தில் அழுந்தப் புவியிற்கையூன்றிக் காலை நீட்டித் தலைநிமிர்ந்திருத்தல். சுகமாவது சுகமும்திடமும் எவ்வாற்குக்கின் எதுமோ அவ்வாறிருத்தல். இவ்வொன்பதும் முக்கியாசனமாம். இவை முக்கியாசனமெனவே இருகுதிகாலுஞ் ஜீவனியிடத்திற் பொருந்த இருபுறவடியின்மீதிலும் இரண்டங்கையுஞ்சேர்த்து மார்புநெறித்துந் தலைநிமிர்ந்திருத்தலாகிய குக்குடாசனமுதலிய சிலவாசனங்களும் உளவெனக்கொள்க. (பிராணாயாமம்.) இரண்டு வகைப்படும். அவையாவன, சகர்ப்பம் அகர்ப்பம் ஆம். சகர்ப்பமாவது, தியானத்துடன் மூச்சைப்பிடிப்பது. இந்த இருவகையும் இரேசக பூரக கும்பகமாயிருக்கும் ரேசகமாவது, மூச்சைவிடுதல். பூரகமாவது, மூச்சை ஏற்றுதல்- கும்பகமாவது மூச்சைநிறுத்தல். இன்னும் பல விதமாயிருக்கும். (பிரத்தியாகாரமாவது) (யோ-ம்) மனத்தை இந்திரிய விஷயங்களிற் செல்லவொ

[illegible]ல் லயியத்தில் நிறுத்தல். (ஞா-ம்) சர்வம். பிரம்ம மயமாய்ப்பார் [illegible]களைப் பிரம்மநிஷ்டர்கள் சொல்லுதல் வேதத்திற்சொல்லிய [illegible]யனைமித்திய காமியகர்மங்களை பிரமாராதனமென்று செய்யுதல். [illegible]க்கை நானென்று நினைப்பதைத்தள்ளிச் சித் ஆத்மாவே நானெ [illegible]நினைத்திருத்தல். (தாரணையாவது) (யோ-ம்) தேகாகாசத்தை [illegible] ஆகாசமாகவும். தேகவாயுவை வெளிவாயுவாகவும்தேகத்தீயை [illegible]த்தீயாகவும் தேகநீரை வெளிநீராகவும், தேகமண்ணை வெளி [illegible]கவும் நினைத்திருத்தலும், பாதமுதல் முழங்கால்வரையில் பிருது [illegible]கம் பிரமனாகவும், முழங்கால்முதல் தொப்புள்வரையில் சலபாகம் [illegible]வாகவும், தொப்புள்முதல் மார்புவரையில் அக்கினிபாகம் ருத்திரனா [illegible], மார்புமுதல் புருவம்வரையில் வாயுபாகம் ஈசுவரனாகவும், புருவ [illegible]ல் சிரசுவரையில் ஆகாசபாகம் சதாசிவமாகவும், நினைத்திருத்தலும் [illegible]திற்குச்சந்திரன் காதிற்குத்திக்கு தோளுக்கு விஷ்ணு புயத்திற்கு [illegible] வாக்குக்கு அக்கினி குதத்திற்கு மிருத்திபுவு உபஸ்தத்துக்குப் [illegible]பதி தொக்குக்கு வாயு கண்ணுக்குச் சூரியன் நாவுக்கு வருணன் [illegible]க்குப் பூமிதேவி புருஷனுக்கு அந்தரியாமி அதிஷ்டான தேவ [illegible]யென்று புத்தியில் தரித்தலும் ஆம். (ஞா-ம்) தேகாதிப்பிரபஞ்சமா [illegible] பஞ்சபூதங்களை மஹாபூதங்களில் ஒடுக்கி மஹாபூதங்களை மாயை [illegible]ஒடுக்கி மாயையை ஆத்மசொரூபத்தி லொடுக்கித் தான் சின்மாத் [illegible]னென்று மனதில் தரிப்பதுவும் நான் தேகாதிகளுமன்று அதற்குரி [illegible]கிய மாயையும் அன்று நான் சிற்மாத்திரனென்று ஒடுங்கிநிற்பது [illegible] பரமதாரணையாம். தியானமாவது (யோ-ம்) மனதை மூர்த்திவடி [illegible]க்கி மற்றொன்றிலும் பொருந்தாமற் செலுத்தல். (ஞா-ம்) தேயா [illegible]மாயும், திருக்குரூபமாயும் இருக்கிற சின்மாத்திரத்தை நானென்று [illegible]ானிப்பது பரமதியானமாம். இப்படி தியானிக்கிறவனைச் சாக்ஷாத் [illegible]சிவனெனப்படும்.

5

(சமாதியாவது.) (யோ-ம்.) ஜீவனுக்கும் பரமனுக்கும் ஐக்கிய அபேதக்யானம் பிறக்கின்றதேயாம். (ஞா-ம்.) நான் சாக்ஷிஸ்வரூபனென்கையினாலே நான் தேகாதிகளல்லன்-நான் பரமசிவமென்ற புத்தியும் பிரமாண்ட பிண்டாண்டங்களை ஸ்தூல பஞ்சபூதங்களிலொடுக்கி அந்தப்பூதங்களை அபஞ்சீகிருத பூதங்களில் ஒடுக்கி அச்சதந்மாத்திரைகளை மாயையிலொடுக்கி அம்மாயையைப் பிரத்தியேகாத்மாவிலொடுக்கி அவ்வாத்மாவாகிய நானே பிரமம் நான் சமுசாரியல்லன். என்னைவிடவேறே யில்லையென்று அறிவதும் பிரணவஸ்வரூபமான பரமேஸ்வரனை மூன்று வர்ணங்களாகப் பாவித்து அம்மூன்று வர்ணங்களையும் இருக்கு தைத்திரிய சாமரூபங்களாக பாவித்து நாதத்தை அதர்வண வேதமாகப்பாவித்து அம்மூன்று வர்ணங்களையும் பிரம்மா விஷ்ணு ருத்திரர்களாகப் பாவித்து அந்த வர்ணத்தினுடைய நாதத்தைக்காரண ஈசுவரனாகப்பாவித்து அம்மூன்று வர்ணங்களையும் மூன்று அக்கினியாகவும் மூன்று லோகமாகவும் மூன்று அவஸ்தையாகவும் மூன்று ஸ்தானங்களாகவும் மூன்று ஸ்வரங்களாகவும் மூன்று காலங்களாகவும் பாவித்து அகாரத்தை உகாரத்திலொடுக்கி உகாரத்தை மகாரத்திலொடுக்கி மகாரத்தை நாதத்திலொடுக்கி நாதத்தை மாயையிலொடுக்கி மாயையை ஜீவனிலொடுக்கி ஜீவனை ஈஸ்வரன் அவனே நானென்றுபாவிப்பதும் பரயசமாதியாம்.

(அ-கை.) ஆப்தராலடையும் மஹாவாக்கியமாகிய ஆத்மஞானத்தாலன்றிச் சரிதையாதி தொழிலினால் முத்தி கிடையாதெனவ்.

## வேறு.

சரிதையின்றொழிலினாலுஞ் சற்கிரியையினும்யோகம்
புரிதருமுயற்சியாலும் பொருந்தொணா தென்பர்மேலோர்

உரியதேசிகனுமாக்கு மொருமொழி யுண்மையாலே
அரியமெய்ஞ்ஞானவீடு கடைவது திண்ணமாமே.

(இ-ள்.) அருமையாகிய உண்மைஞானத்திற்குரிய சீவன் முத்தியைச் சரிதைத்தொழிலினாலும் நல்ல கிரியையினாலும் அஷ்டாங்கயோகஞ் செய்தலாகிய முயற்சியினாலும் அடையக்கூடாதென்று மேலாகிய ஞானவான்கள் சொல்லுவார்கள். (மற்றையாதினால் அடையலாமெனில்.) உரிமையாகிய ஞானசிரியர் அனுக்கிரகிக்கின்ற உண்மை பொருந்தின ஒரு மகாவாக்கியத்தினால் அடைவது நிச்சயமாம்-எ-று. இன்சாரியை ஏ-ஏ-அசைகள்.

(ப-ம்.) நிஷ்காமபூசை யென்பார். சற்கிரியையென்றார், சச்சிதானந்தமாகிய பரமசிவத்தினுடைய அருளுக்குச் சுதந்தரப்பட்டவரென்றும், மாணாக்கனது உடல் பொருளாவி யென்று மூன்றிற்கும் அதிகாரியென்றும், ஆத்மகோடிகள் ஜனனமரண அவஸ்தையிலுழலாமல் நிலைபெற்ற நற்கதியைப் பெற்றுக்கொள்ளத் தாமே தேடி ஞானபோதகஞ்செய்யுங் கருணைக்குரியவரென்றும். தன் சொரூபமாய் விளங்குகிற உலகத்தின்கண் தனது லீலைக்குரித்தாய்ப் பிரகாசிக்கின்ற உயிர்த்தொகைகளில் இருவினையொப்பு மலர்பரிபாகஞ் சத்தினிபாதத் தன்மை பெற்றவர்களைப்பார்த்துத் தன்மயமாகச்செய்யும் அருளிறைவடிவமென்றுங் கூறுவார். உரிய தேசிகனென்றார்.

(இ-ள்.) ஆத்மஞானத்தன்றி வினையவற்றால் ஜனனமரணம்ஒழியாவென்பதாம்.

சரிதையாதி தொழிலாற் பயனின்று ஞானமொன்றினாலேயே முத்தியென்பதற்குப் பிரமாணம். (பிரமகீதை.) சரிதையாதி யொருமூன்றுஞ் சவுபாணங்கள் பயனில்லை, அரியும் பிரமனாலு மறிதற்கரிய

தாரணைகள், உரையுமில்லை முடிவரியாவொன்றாய் நின்றதனிஞானப் பொருளாயிருநும் வெளியுமில்லாப் போதமருவிக்களியென்றான்- (சிவஞானதீபம்.) சாத்திரம்புத்தகம் பூசைசமயமதந் தருக்கம தந்திரயோகந் தவவிரதஞ்சீல, மேத்தரிய பாவனையெண் சித்திகளே முத்லாமெய்ப்பயனு முத்திவிலக்கெனவொருசொல்லதனால், நீர்த்தவன் மெய்த்தேசிகனாயவனருளாலகலாச் சித்தமலமறுத்துலகிற்றீமை நன்மைசெயினும், வாய்த்த கதிரன் செயல்போ லிசைந்திசையா தொழுகும் வண்மையரே மெய்ஞ்ஞானவுண்மை நிலையினரே-எ-ம். (பிரபுலிங்கலீலை.) உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது, சரியை நற்கிரியையோகந் தாமொரு மூன்றுஞான, மருவுதற் கேதுவென்றே மறைநூகன்றுரைக்குமிந்தக், கருவினையப் பொருளென்றெண்ணிக் களிப்பவர்கடவான்றே. எ-ம். (திருமந்திரம்.) ஞானத்தின்மிக்க தவநெறி நாட்டில்லை, ஞானத்தின்மிக்க சமயமுநன்றன்று, ஞானத்தின்மிக்கவை நன்முத்திநல்காவால், ஞானத்தின்மிக்கார் நரரின்மிக்காரே-எ-ம். (தாயுமானசுவாமிகள்.) பத்திநெறி நிலைநின்றி நவகண்டபூமிப் பாப்பெல்லா மாகவந்தும் பாவையிடைமூழ்கிய நதிகளிடைமூழ்கியும் பசிதாகமின்றி யெமுநா, மத்தியிடை நின்றுமூதிர் சருபுனல்வாயு வினைவன் பசிதவக் கடைத்து மௌனத்திருந்துமுயர் மலைநுழைவுபுக்கிய மன்னுதவ முற்றுஞ், சுத்திசெய்தும் மூலபிராணனேடங்கியைச் சோம வட்டத்தடைத்து சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல்கற்பங்கடோறு நிலைநிற்க வீறு, சித்திசெய்துஞ்ஞான மலதிகதிகூடுமோ சித்தாந்த முத்திமுதலே சிரகிரிவிளங்கவரு தக்ஷணாமூர்த்தியே சின்மயானந்தகுருவே - எ - ம். (ஒழிவிலொடுக்கம்.) சரிதைகிரியைகளைச் சற்குருக்கிச்சாகாக், கருமயகத்தைக் கழற்ற வரிதவர்க்குத், தோன்றியது பொய்யாகக் காண்கையிலே தோன்றாத, வூன்றியபோதங் கழலுமோ-எ-ம். (சசிவன்னபோதம்) ஐயறிவறிந்தவை யடங்கினர்களேனும், மெய்யறிவிலாதவர்கள் வீடு பெறுரே-எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

ஆசிரியர் உடல்பொருளாவி மூன்றிற்கும் உரியவரென்பதற்குப் பிரமாணம். (திருவாசகம்.) அன்றேயென்றனாவியுமுடலு முடைமையெல்லாமுங், குன்றே யனையாயென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ, வின்றோரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்கணெம்மானே, நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோவிதற்கு நாயகமே. என்பதனாற் காண்க.

ஆசிரியர் ஆத்மாக்களைத் தாமேதேடி ஞானபோதஞ்செய்வ ரென்பதற்குப் பிரமாணம். (திருவாசகம்.) வேண்டத்தக்கதறிவோய் நீ வேண்டமுழுதுந் தருவோய்நீ, வேண்டுமயன்மாற் கரியோய்நீ வேண்டியென்னைப் பணிகொண்டாய், வேண்டிநீ யாதருள்செய்தா யானு மதுவே வேண்டினல்லால், வேண்டும் பரிசொன்றுண்டென்னிலதுவு முன்றன் விருப்பன்றே. என்பதனாற்காண்க.

(அ-கை.) சர்வசங்க பரித்தியாகத்தினாலும் எல்லா ஞானநூலுணர்வினாலும் முத்தியின்றெனல்.

கட்டறத்துறந்தே யுயிர்பொருட் சார்பைக் கருதிடும் வாசனையனைத்தும், ஒட்டறவிடித்து ஞானநூலனைத்து மோர்ந்திடினென்பயனுதவும், எட்டுதற்கரிய சற்குருவருளாலியம்புமோர் மொழியினைப்பெற்றே நிட்டை சாதித்தேசகல கேவலங்கணீங்கிடிற் பிறப்பிறப்பறுமே.

(இ-ள்.) பந்தங்களை முழுதும் நீக்கினாலும் உயிர்ச்சார்புபொருட்சார்புகளை நினைத்துச்செல்லும் இந்திரிய வாசனைகளெல்லாவற்றையும் பற்றறவிட்டாலும் ஞானசாஸ்திரங்களை ஒருங்கே வாசித்தறிந்தாலும் என்னபிரயோசனத்தைத்தரும். (ஆதலின்.) அவாங் மனோகோசரமாகிய அருளிறை வடிவமாய்வந்த ஞானதேசிகர் கிருபையினால் அநுக்கி

ரிக்கத்தக்க ஒப்பற்ற மஹாவாக்கியத்தைப் பெற்றுக்கொண்டு ஞான நிஷ்டா சாதனஞ்செய்து தோற்ற வொடுக்கங்களாகிய * சகல கேவலங்களில்நின்றும் நீங்கினால் ஜனனமரணமொழித்து (முத்தியைப்பெற்றுக்கொள்ளலாம்.) எ-று. ஏ-ஏ-ஏ-எ-இந்நான்கும் அசைகள்பிறப்பிறப்பறு மென்றதனால் முத்தி வருவிக்கப்பட்டது.

(ப-ம்.) ஒருவன் ஆத்மஸ்வரூபமாகிய தன்னை அனாத்மாவாகிய சரீர மூடிக்கொண்டிருப்பதுபோலத் தனது தேகத்துக்குப் புறம்பாயிரா நின்ற பெண்டீர்முதலிய சுற்றத்தாராகிய உயிர்ச்சார்பும், கிரகமுதலிய க்ஷேத்திர தனதானியங்களாகிய பொருட்சார்பும் ஆகிய புறப்பற்றுக்கள் மூடியதைப் பொய்யென்றறிந்து அவைகளில் தோன்றும் வாசனையாகிய அகப்பற்றை ஒருங்கேவிட்டு வெளிப்படுகின்ற சாமான்னியத்தில் அடையக்கூடாமையான துறவைப் பெறுவானாயின் அவன் அந்தச் சரீராந்தத்தில் இவ்வுலகத்தாரால் அருமையாய்ப் புகழப்படுவதேயன்றித் தன் உண்மைவடிவத்தை அறிகின்ற சொந்தலாபமான முத்தியை அற்பமும் பெறமாட்டானென்பார் கட்டறத்துறந்தே யுயிர்பொருட் சார்பைக்கருதிடும் வாசனையனைத்து, மொட்டறவிடுத்துமென் பயனுதவுமென்றும், வேதம்முடிவாகிய தற்புருஷார்த்த நிலைபரியந்தம் உணர்த்தி அதற்குமேல் கூறப்படாமையால் வாயடங்கிற்றென்று அதையேவிரித்து தெளிவாகச் சொல்லுகின்ற பல ஆத்மஞான சாத்திரங்களைக் கிரமமாகவாசித்தும் அவற்றின் நுட்பங்களை யுத்தியாலும் பிர

---

* சகல கேவலமான குடிலையில் நின்றும் நீங்கிய பராசத்திவடிவமாயிருக்கின்றேமென நினைத்தலும் அந்நினைவை மறைத்தலும், தாவ்ஷ்ட்டீம் பூதனை தன்னிடத்தில் ஒன்றுமிலாததை நினைத்தலும் மறத்தலுமாமெனக்கொள்க. ஆணவமாயையின் காரியமாகும். நினைத்தலும் மறைத்தலுமெனக் கூறுவாருமுளர்.

மாணங்களாலும் அறிந்தும் தன்னிலே அஃதே என்று நிச்சயித்தாலும் சம்பிரதாயத்தில்வந்த சதாசாரியரால் தனதுவடிவமான அருட்கண் ணோக்க நீலையைப் போதிக்கப்பெற்று அவரது திருக்கண்ணோக்கத்தி ஞல் அருளும் கிருபையின் வழித்தாய்நின்று பிரமசாதனஞ் செய்து சுவானுபூதி சாட்சாத்காரத்தை அடைந்தாலன்றி முத்திப்பிரயோசனத் தை ஒருகாலும் அடையக்கூடாதென்பார். ஞானநூலனைத்து மோர்ந் திடினென்பய னுதவுமென்பவும், காயத்திஞல் வணங்கியும், வாக்கிஞல் தோத்திரஞ்செய்தும், மனத்திஞல் தியானித்தும், அறிதல் கூடாமை யான ஞாஞசிரியரது திருவருளெனவும், எப்பொழுதும் உளத்தின் கண் நெக்கு நெக்கேங்கிக் கரக்கம்பஞ் சிரக்கம்ப முதலானவைகளும் உண்டாகக் கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சொரியத் தேம்பிமெய்சோர்ந்து அவசரப்பட்டிருக்குங்காலத்தில் உதயமாகின்ற சச்சிதாநந்த சொரூப மாகிய மௌனகுருவினது அருட்பார்வையென்னுஞ் சுவானுபூதி பிரத் தியக்ஷமெனவுங் கூறுவார். எட்டுதற்கரிய சற்குருவருளென்றும், இத்தன்மைப்பட்ட சுவானுபூதி சாக்ஷாத்காரத்தை உணர்த்தத்தக்க ஞாஞசிரியரிடத்திற் சற்சீடன் அடுத்து அவர்மனங் களிகூரநடந்து ஞானநிஷ்டையைப் பெற்றுக் குருகுலவாசமாயிருந்து சதாநிஷ்டை செய்துவருங்காலையில் சுவானுபூதியின்கண் ணுடையாநின்ற சம்சயங்க ளனைத்தையும் அவ்வாசிரியரிடத்தில் தீர்தலடையும்பொருட்டு விண் ணப்பம் பண்ணிக்கொண்டு அவைநீங்கினபின்னர் ஜீவேசுவரசகத்பே தமாகிய நினைப்புமறப்பையும் விட்டுத் தன்னை எதிரிட்டறிய உதயமாகி ன்ற சிஞ்சித் அறிவான இருப்பையும்விட்டுத் ததாகாரமாய் நின்றவிடத் திலேயே நிரதிசயானந்தமாகிய முத்தி தடஸ்தமாக விளங்குமென்பார் நிஷ்டைசாதித்தே சகல கேவலங்கணீங்கிடிற் பிறப்பிறப்பறுமென் றுங் கூறினர்.

(இ-ம்.) சிவஞானதேசிகர் அநுக்கிரகிக்கின்ற நிலையின் வழிநின்று சாதனஞ்செய்கின்ற அனுபவிக்கேயன்றி ஏனையோர்க்கு முத்தியின்றென்பதாம்.

துறவடைந்ததனால் முத்தியின்றென்பதற்குப் பிரமாணம். (பட்டினத்துப்பிள்ளையார்.) காடே திரிந்தென்ன கார்றேபுசித்தென்ன கந்தைசுற்றி, யோடே யெடுத்தென்ன வுள்ளன்பிலாதவ ரோங்குவிண்ணோர், நாடேயிடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால், வீடேயிருப்பினு மெய்ஞ்ஞானவீட்டின்பமேவுவரே. (அன்றியும்.) மாத்தானவத்தையு மாயாபுரியின் மயசகத்தையு, நீத்தார்தமக்கொரு நிட்டையுண்டோ நித்தனன்புகொண்டு, வேர்த்தாற்குளித்துப் பசித்தாற்புசித்து விழிதுயின்று, பார்த்தாலுலகத் தவர்போலிருப்பர் பற்றற்றவரே. என வருதலாற் காண்க.

ஞானநூலுணர்வினால் முத்தியின்றென்பதற்குப் பிரமாணம் (திருவாசகம்.) நூலுணர்வுணரா நுண்ணியோன்காண்-எ-ம். (தாயுமானசுவாமிகள்.) கற்றலுங் கேட்டதுதானேயேதுக்காகக்கடபடமென்றுருட்டுதற்கோ கல்லாலெம்மான், குற்றமறக்கைகாட்டுங் கருத்தைக்கண்டு குணங்குறியற் றின்பநிட்டைகூடவன்றே. (அன்றியும்.) சின்னஞ் சிறியார்கள் செய்தமணற்சோற்றை யொக்கும், மன்னனுங்கலை ஞானம் மார்க்கம் பராபரமே-எ-ம். (அருணகிரியந்தாதி.) கற்றதனாற் றொல்லைவினை கட்டறுமோ நல்லகுலம், பெற்றதனாற் போமோபிறவிநோய் உற்றகடல், நஞ்சுகந்து கொண்டருளை நாதரடித்தாமரையை, நெஞ்சுகந்து கொள்ளாநெறி-எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

சதாநிஷ்டையாலேயே முத்தி அடையலா மென்பதற்குப் பிரமாணம். (தாயுமானசுவாமிகள்.) கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா

மெய்த் தெளிவாற், வாட்டமறுவுற்பவநோய் மாறுமோ நாட்டமுற்று மெய்யான நிஷ்டையினை மேவினர்கட்கன்றோதான், பொய்யாம் பிறப்பிறப்பும்போம், எ-ம். (சிவபோகசாரம்) தன்னையிழந்திடத்தேதானே சுகவடிவா, யின்னபடி யென்றுணரா வெங்கோனுட்பின்னமற, நின்ற நிலைதானுந் தெரியாதே நின்றவர்கட், கன்றோபிறப்பறுக்கலாம்-எ-ம், வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

துறவினாற்புகழும் ஞானமொன்றினால் முத்தியு மென்பதற்குப் பிரமாணம் (உபநிடதம்.) தோற்றமுபாதிவைராக்கியஞான மூன்றிலைகடொழிற்பட்டாரு, ளேற்றமுபாதிபடையார் பிரமாதி பதமடைவரிகலோகத்திற், போற்றம் வைராக்கியருக்கு மப்பதமுண்டாஞானம் பொருந்தினோர்க்குச், சாற்றரியதனிமுத்தி சரீராந்தத் தெனவுரைப்பர் தகமையோரே என்பதனாற்காண்க.

(அ-கை.) பலநூலுணர்வினாலும், தத்துவசோதனையினாலும், முத்தியின்றெனல்.

வித்தாரமாகப் பலகலைபயின்று மேவுநற்பயன்களை யறிந்
[துந்
தத்துவமுழுதுங் கசடறவுணர்ந்துந் தனைநிலை யறிவதற்
[கரிதாம்
சுத்தமெய்குருஞான தேசிகன்மகிழ்ந்து சொல்லாமற் சொல்
[லுமோர்மொழியாம்
முத்திரைமோன நிலையினாலன்றி முத்தியி னிலைகிடையா
[தே.

(இ-ள்.) (ஒருவன்.) ஞானமுண்டாகப பலநூல்களை வாசித்தாலும் அந்நூல்களிலுள்ள சிறந்த பிரயோசனங்களைத் தெரிந்தாலுங் குற்

றமறத் தத்துவங்களெல்லாவற்றையும் அறிந்தாலும் தனது ஆத்மசொ ரூபநிலையை அறிவதற்கு அரியதாகும். (ஆதலால்,) பரிசுத்தமான உண் மைபொருந்திய ஞானாசிரியர் உள்ளக்களிப்புடன் சொல்லாமற் சொல் லுகின்ற ஒப்பற்ற மஹாவாக்கியமாகிய சின்னமுத்திரையினலாகும் மவுனநிலையினலன்றி மற்றொன்றினலும் மோக்ஷநிலைகிடையாது-எ-று, ஏ-அசை.

(ப-ம்.) அறுபத்துநாலு கலைக்கியானங்க ளென்பார்.—பலகலையெ ன்றார். பரமசிவனுடைய பராசத்தி அருளினலே குடிலையில் நாத மும், நாதத்தில்விந்துவும், விந்துவில் சாதாக்கியமுஞ் சாதாக்கியத்தில் மஹேசுவரமும், மஹேசுவரத்தில் சுத்தவித்தையுந்தோன்றும். இவ் வைந்தினுள் விந்துவிலேநாலுவாக்கும், ஐம்பத்தோரக்ஷரமும், எண்பத் தொருபதமும், இருநூற்றிருபத்துநான்கு புவனமும், சப்தகோடி மஹா மந்திரமும், சகலசாஸ்திரமும், விஞ்ஞானகலர் பிரளய காலருக்குத்தனு கரண புவனபோகங்களும், சரியை கிரியை யோகங்களில் நின்றோர்க் குச் சாலோக சாமீப்பிய சாரூப்பிய மென்னும் பதமுத்திகளும், பஞ்ச கலைகளுந்தோன்றும் இவை சுத்தமாயையின் தோற்றமாம். அனந்த தேவ னருளினலே அசுத்தமாயையிலே நின்றுங்காலமும், நியதியும், கலையுந்தோன்றும். கலையில் வித்தையும், வித்தையில் இராகமுந்தோ ன்றும் உருத்திரதேவனருளினலே முன்சொன்ன கலையிலே மூலப்பிர கிருதிதோன்றும் முக்குணங்களுந் தோன்றுது நின்றவிடம் அவ்வியக் தம், இந்த அவ்வியக்தத்திலே சித்தமும், புத்தியுந்தோன்றும் புத்தியி லே அகங்காரந்தோன்றும். அதுதான். யான் எனதென்று விகற்பித் துவரும். அதுதான் அகந்தைக்கு வித்தாகும் அதுதான் தைசசாங்கார மென்றும், வைகாரிகாங்காரமென்றும், பௌதாதி காங்காரமென்றும், மூன்றுவிதமாயிருக்கும், தைசசாங்காரத்திலே சத்துவகுணத்தினுடைய மனமும், புத்தியும், சுரோத்திராதிகளைந்தும் தோன்றும், வைகாரிகாங்

காரத்திலே இராஜோகுணத்தினது வாக்காதிகளைந்துந் தோன்றும். பௌதாதிகாங்காரத்திலே தமோகுணத்தினுடைய தன்மாத்திரைகளாகிய சத்தாதிகளைந்துந்தோன்றும். சத்தத்திலே ஆகாயமும், பரிசத்திலேவாயுவும், ரூபத்திலேதேயுவும், இரசத்திலே அப்புவும், கந்தத்திலே பிருதிவியுந் தோன்றும், ஒடுங்குங்காலத்துத் தோன்றினவடைவே ஒடுங்கும். உள்நிலைக்கருவிகள் முப்பத்தாறு புறநிலைக்கருவிகள் அறுபது ஆகதத்துவம் தொண்ணூற்றாறுமாகிய தேகத்துடனே கூடி நின்று ஆத்மாபுசிக்கும். வசரத்தி லுணர்த்துமுறைமை எங்ஙனமெனில், கீழாலவஸ்தைக்கு நிற்குங்கருவிகள் தத்துவம் 35-ம் மேலாலவஸ்தைக்குத் தத்துவம் 36-ம் ஆம் இனிச்சுத்தாவஸ்தை என்பது பூதங்களைத் தரிசிக்கில் தூலதேகமிலதென்பதும், இந்திரியங்களைத் தரிசிக்கில் பூதங்களிலவென்பதும் அந்தக்கரணங்களைத் தரிசிக்கில் இந்திரியங்களிலவென்பதும், கலாதிகளைத் தரிசிக்கில் அந்தக்கரணங்களிலவென்பதும் சுத்ததத்துவங்களைத் தரிசிக்கில் கலாதிகளிலவென்பதும். அருளைத்தரிசிக்கில் சுத்த தத்துவங்களிலவென்பதுமாம். இதற்குப் பசுகரணங்கள் சிவகரணங்களாயிருத்தலே நின்மலசாக்கிரமெனவும், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றுப் பொருந்துவனவெல்லாம் மனதிற் கோசரியாமலிருத்தலே நின்மல சொப்பனமெனவும், இந்தப்பேரு பெற்றோமென்னும் நிராசையால் பரிணாமத்தை அடைதலே நின்மல சுழுத்தியெனவும், தனக்கு இன்பம்பிறந்து சம்பூரணநிசை அடைதலேநின்மல துரியமெனவும், நீரிலே முழுகிவிட்டவனைப் போலிருத்தலே நின்மல துரியாதீதமெனவுந், தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆத்மரூபம் ஆத்மதரிசனம் ஆத்மசுத்தி சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் சிவபோகம் என்னுந்தசகாரியங்களெனவுங் கூறுநின்ற சைவாகமசித்தாந்தமுறைப்படியே ஒருவன் பகிர்முகத்தில் அதிநுட்பமாக உணரப்பெற்றாலுஞ் சிவஞான தேசிகரால் அந்தர்முகத்திற்பெறுகின்ற ஞான நிஷ்டையின் வழித்தாய்நின்று ஆணவாதிமலங்களில் நின்றும் நீங்கி

ஆன்மா அருளோடுங்கலந்து நிற்கின்ற காலவரையிலுஞ்சாதிக்கப்பெரு ளுயின் சிவசொரூபமான தனது உண்மைநிலையை ஒருகாலுமுணரமாட் டானெனவும். சுத்தப்பிரமமாகிய சர்வசாட்சியினிடத்தில் சூரியனிற் சூடுபோல அபின்னுசக்தி ஒன்றுண்டு. அந்தச்சக்தி அவ்வதீதப்பிரமத் தினிடத்தில் அடங்கியிருக்கும்போது அதற்குச் சுத்தப்பிரமமென்றும், சூரியனதுகிரண மெங்குமாய்ப் பிரகாசிக்கும்பொழுது அச்சூரியன் அதி லடங்கியிருப்பதுபோல அந்தச்சத்தி விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும்போது, அப்பிரமம்பரை வியாபகத்துக்குள் ளிருந்தபடியால் அதற்குப்பரப்பிர்மமென்றும் பெயராம். அந்த சத்தியினிடத்தில் அந் தப்பிரகாசத்தின் நிர்ச்சலம்போல அவிகிருதசத்துவமாகிய ஆனந்தரூப சத்தியும் சலனம்போல இராஜஸாகிய சித்ரூபசத்தியும், மக்கினம்போ லத் தமசாகிய சத்ரூபசத்தியுந் தோன்றின. அத்திரிவிதசத்திகளுடன் கூடிய பரபிரமத்துக்குப் பரமானந்தன் பரிபூரணன் பரன் என்னும் பெயராம். இந்த அகண்டபரிபூரண சச்சிதானந்த பிரம்மத்தினிடத் தில் கானற்சலத்தைப்போல மூலப்பிரகிருதியென்று ஒருசத்தி உண் டாயிற்று. அந்த மூலப்பிரகிருதி அக்கானற் சலத்தினது நிர்ச்சலம் சலனம் மக்கினம்போல விகிர்தசத்துவ ரஜசு தமஸென்னும் மூன்று குணங்களுடனே கூடியிருக்கும். அவற்றுள் சத்துவ குணத்திற்கு மாயை யென்றும், சர்வக்ஞ வுபாதியென்றும், ஈசுவரன் காரணசரீர மென்றும்பெயர். அந்தமாயையினிடத்தில் நிர்மல சலப்பிரிதி பிம்பம் போலப் பிரமம் சலக்ஷணமாகப் பிரதிபிம்பிக்கும் அதற்கு சர்வக்ஞனு கிய ஈசுவரனென்று பெயர். அந்தச்சத்துவகுண மாயையினிடத்தில சத்துவத்திற் சத்துவம் பிரதான மாகும்போது பிரமனென்றும், சத்து வத்தில் தபசுபிரதான மாகும்போதுருத்திரனென்றும், முத்தொழிலுக் குரிய நாமங்களாம். இராஜோகுணத்திற்கு அவித்தைகளிடத்தில் மலி னசலப்பிரதி பிம்பம்போலப் பிரமசைதன்னியம் பிரதிபிம்பிக்கும். அவைகட்குக் கிஞ்சிக்ஞரென்றும், சிதாபாச ஜீவரென்றும்பெயர் இந்த

அவித்தைகளிடத்தில் ரஜஸில்சத்துவம் பிரதானமாகும்போது தத்துவ ஞானிகளென்றும், ரஜஸில்ரஜஸ் பிரதான மாகும்போது காமக்குரோத கர்ம்மநிஷ்டர்களென்றும், ரஜஸில்தமஸ் பிரதானமாகும்போது சோம்பல்நித்திரை மயக்கங்களை யுடையவர்களென்றுமாம், தமோகுணத்தில் ஆவரணம் விக்ஷேபமென இரண்டு சக்திகள்தோன்றின. அவ்விரண்டில் விக்ஷேப சக்தியினிடத்தில் சத்ததன்மாத்திரையான ஆகாசமும், ஆகாசத்தில் பரிசதன்மாத்திரையான வாயுவும், வாயுவில் ரூபதன்மாத்திரையான தேயுவும், தேயுவில் ரசதன்மாத்திரையான அப்புவும், அப்புவில் கந்ததன் மாத்திரையான ப்ருதிவியுந்தோன்றின. இச்சூக்ஷ்ம பஞ்சபூதங்களுக்கு மூன்று குணங்களுமுண்டு, அவையாவன, தமஸில் சத்துவத்திலுண்டான முற்பாதியில் சமஷ்டி அந்தக்கரணம் ஐந்தும், பிற்பாதியில் வியஷ்டி ஞானேந்திரியங்கள் ஐந்தும், தமஸில்ராசதத்திலுண்டான சமஷ்டிமுற்பாதியில் சமானாதி வாயுக்கள் ஐந்தும், பிற்பாதியில் வியஷ்டி கன்மேந்திரியங்கள் ஐந்துமாம், ஆகிய (20-ம்.) இலிங்கசரீரமாம். அஃதெங்ஙனமெனில்.

(பிண்டாண்ட பிரமாண்டத்திற்சொல்லிய பூதபஞ்சீகரணம்.)

---

சத்ததன் மாத்திரை சாத்வீக அம்சம். சமஷ்டி (½) மாத்திரை ஞாதா அதில் பரிசதன்மாத்திரை ரஜோ அம்சம் சமஷ்டி [illegible] மாத்திரைகூடினது சமானவாயு, ரூபதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி (⅛) மாத்திரை கூடினது சுரோத்ரேந்திரியம், ரசதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி (⅛) மாத்திரைகூடினது சுரோத்ரேந்திரியம், சத்தவிஷயம், கந்ததன்மாத்திரை ரஜோ அம்சம் வியஷ்டி (⅛) மாத்திரைகூடினது வாக்கிந்திரியம்.

பரிசதன்மாத்திரை ரஜோ அம்சம் சமஷ்டி (½) மாத்திரை வியானவாயு அதில், சத்ததன்மாத்திரை சாத்விக அம்சம் சமஷ்டி (⅛) மாத்திரைகூடினது மனம், ரூபதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரைகூடினது தொக்கிந்திரியம், ரசதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரைகூடினது பரிசவிஷயம், கந்த தன் மாத்திரை ரஜோ அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரைகூடினது பாணீந்திரியம்.

ரூபதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி ½ மாத்திரை நேத்ரேந்திரியம் அதில், சத்ததன் மாத்திரை சாத்வீக அம்சம் சமஷ்டி ⅛ மாத்திரைகூடினது புத்தி, பரிசதன்மாத்திரை ரஜோ அம்சம் சமஷ்டி ⅛ மாத்திரை கூடினது உதானவாயு, ரசதன்மாத்திரை சாத்விக அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரை கூடினது ரூபவிஷயம், கந்ததன் மாத்திரை ரஜோ அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரை கூடினது பாதேந்திரியம்.

ரசதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி ½ மாத்திரை ரசவிஷயம் அதில், சத்ததன்மாத்திரை சாதவீக அம்சம் சமஷ்டி ⅛ [மா]த்திரைகூடினது சித்தம், பரிசதன்மாத்திரை ரஜோ அம்சம் சமஷ்[டி] ⅛ மாத்திரை கூடினது அபானவாயு, ரூபதன்மாத்திரை சாத்வீக அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரை கூடினது ஜிக்விந்திரியம், கந்ததன் மாத்திரை ரஜோ அம்சம் வியஷ்டி ⅛ மாத்திரை கூடினது குய்யேந்திரியம்.

கந்ததன்மாத்திரை ரஜோ அம்சம் வியஷ்டி ½ மாத்திரை குதேந்திரியம் அதில், சத்ததன்மாத்திரை சாத்வீக அம்சம் சமஷ்டி ⅛ மாத்திரைகூடினது ஆங்காரம், பரிசதன்மாத்திரை ரஜோ அம்சம் சமஷ்டி ⅛ மாத்திரை கூடினது பிராணவாயு ரூபதன்மாத்திரை சாத்

வீக அம்சம் வியஷ்டி $\frac{1}{8}$ மாத்திரை கூடினது கிராணேந்திரியம், ரசதன்மாத்திரை சாத்வீக அம்சம், வியஷ்டி $\frac{1}{8}$ மாத்திரை கூடினது கந்தவிஷயம் ஆம்.

இதிற்கூறிய எதிர்விஷயங்களெந்தும் நீங்கலாக மற்ற விருபதுஞ் சூட்சும சரீரகற்பனையாம். இதன்கிரியை எங்ஙனமெனில், ஞாதா சமானவாயுவுடனேசேர்ந்து சுரோத்திரேந்திரியத்தைப்பற்றி சத்தவிஷயத்தைக்கிரகித்தால் வாக்குவசனித்தலும். மனம் வியானவாயுவுடனே சேர்ந்து தொக்கேந்திரியத்தைப்பற்றிப் பரிசவிஷயத்தைக் கிரகித்தால் பாணியிடுதலும், ஏற்றலுஞ் செய்தலும், புத்தி உதானவாயுவுடனே சேர்ந்து நேத்திரேந்தியத்தைப்பற்றி ரூபவிஷயத்தைக் கிரகித்தால் பாதஞ் சஞ்சரித்தலும், சித்தம் அபானவாயுவுடனே சேர்ந்து ஜிக்விந் திரியத்தைப்பற்றி ரசவிஷயத்தைக் கிரகித்தால் குய்யம் ஆனந்திப்பித் தலுங், ஆங்காரம் பிராணவாயுவுடனேசேர்ந்து கிராணேந்திரியத்தைப் பற்றிக் கந்தவிஷயத்தைக் கிரகித்தால் குதம்மலவிசர்க்கஞ் செய்தலு மாம். தமசில் தாமதத்திலுண்டான பூதபஞ்சீகரணம் எங்ஙனமெனில் பிருதுவி தன்னம் சம்பாதி அஸ்தி, பிருதுவியில் அப்பு $\frac{1}{8}$ பங்கு கூடி னது மாம்சம் பிருதுவியில் அக்கினி $\frac{1}{8}$ பங்கு கூடினது சர்மம், பிருது வியில் வாயு $\frac{1}{8}$ பங்குகூடினது நரம்பு, பிருதுவியில் ஆகாசம் $\frac{1}{8}$ பங்கு கூடினது ரோமம். அப்பு தன்னம் சம்பாதி மூத்திரம். அப்புவியில் பிருதுவி $\frac{1}{8}$ பங்குகூடினது வாய்நீர், அப்புவியில் அக்கினி $\frac{1}{8}$ பங்கு கூடினது வியர்வை, அப்புவியில் வாயு $\frac{1}{8}$ பங்குகூடினது இரத்தம், அப்புவியில் ஆகாசம் $\frac{1}{8}$ பங்குகூடினது சுக்கிலம். தேயு தன்னம் சம் பாதி பசி, தேயுவில் பிருதுவி $\frac{1}{8}$ பங்குகூடினது நித்திரை, தேயுவில் அப்பு $\frac{1}{8}$ பங்குகூடினது தாகம், தேயுவில் வாயு $\frac{1}{8}$ பங்குகூடினது சோம்பல், தேயுவில் ஆகாசம் $\frac{1}{8}$ பங்குகூடினது மைதுனம் வாயுவு தன் னம் சம்பாதி ஓடல் வாயுவில் பிருதுவி $\frac{1}{8}$ பங்குகூடினது படுத்தல்,

வாயுவில் அப்பு $\frac{1}{8}$ பங்குகூடினது நடத்தல், வாயுவில் அக்கினி $\frac{1}{8}$ பங்குகூடினது இருத்தல், வாயுவில் ஆகாசம் $\frac{1}{8}$ பங்குகூடினது தாண்டல் ஆகாசம் தன்னம் சம்பாதி மோகம் ஆகாசத்தில் பிருதுவி $\frac{1}{8}$ பங்குகூடினது இராகம், ஆகாசத்தில் அப்பு $\frac{1}{8}$ பங்குகூடினது துவேஷம், ஆகாசத்தில் அக்கினி $\frac{1}{8}$ பங்குகூடினது பயம் ஆகாசத்தில் வாயு $\frac{1}{8}$ பங்குகூடியது வெட்கம், ஆம். இவை யிருபத்தைந்தும் தூலசரீர கற்பனையாம். அவித்தையென்னும் இச்சாவசுத்தாய் அஞ்ஞானசுழுத்தியிற் கட்டுண்டசிதாபாசர்களை ஈசுவரன் தனது காருணியத்தால் பிரமதேவனாய் நின்று ஜீவாங்குரத்தால் அசைவிற்கு அந்தக்கரண மென்னுங் கண்ணாடியைக்காட்ட அதிற் பிரதிபலித்து தூலசரீரத்தைத் தாமென்றும் புவனபோகங்களைத் தமதென்றும் அபிமானித்தவர்க ஜீவர்களது சரீரத்திரயம் சிதாபாசன் சாக்ஷிசைதன்னியம் என்பனவைகளில் பேதந்தெரிகின்றதற்குரிய அறிவின்கண்ணை ஆவரணசத்தி மூடிவிட்டதென்றும், அம்மூடுதலில் நின்றும் நீங்குவதற்கு வேதார்த்தக்கிரமப்படி பகிர்முக விசாரணைமுன்னிலையில் தேர்ந்து பிரமமுதல தோன்றின அடைவே ஒடுங்கிப்பார்க்கச் சேஷித்தது எதுவோ அதுவே நமது வடிவமென்னுந் திடபிரக்ஞையோடு அபரஞானியா யிருந்தாலும், ததாகாரமாகிய தேசிகரால் அந்தர்முக விசாரணையான சுவானுபூதியைக் கிரமமாகக்கொண்டு அச்சுவானுபூதியிலெழுகின்ற சங்கற்பம் நசிப்பதான திருவடிதீக்ஷையும் பெற்று அங்ஙனம், பெற்றோமென்றவுணர்வும் நழுவினவிடத்துண்டாகிய தனது சிதாகாசநிலையை அறிந்து பரஞானியாதல், அற்பமுங் கூடாதெனவுங்கூறுவார். தத்துவமுழுதுங் கசடறவுணர்ந்துந் தன்னிலையறிவதற் கரிதாமெனக் கூறினார்.

(இ-ம்.) ஒருவன் தத்துவசோதனையில் சுருதியுத்தி யனுபவப்பட ஐயமறத்தெளிந்தாலுஞ் சகசீவபரங்களின் அபேதங்களைப் பலநூலால் நன்குயறிந்துதானே அதுவென்றிருந்தாலுஞ் சத்குருவால் சுவானுபூதி

யை உன் முகத்திற் பெற்றலன்றி ஒருகாலும் நிஜபோத முதியாதென் தபாம்.

பலகலையிலும் முத்தியின்றென்பதற்குப் பிரமாணம். (ஒழிவி லொடுக்கம்.) குடையுஞ் செருப்புங்கொடுகடப்பதல்லாற், படியும்விசும் பும் பரப்பி யிடையாம், மாத்திரம்போலே சமயவாதமனம்போதாத, சாத்திரங்கற்றார் வீடுற்றார் எ-ம். (சசிதானந்த விளக்கம்.) கோடிபல நூலறிவு வேதமுறைநம்பசிதுறு குருபாதம் வெளியாகுமோ - எ-ம். (ஞானசுகாதீத வெண்பா) நூறுகோடிநாளிருந்து நூல்கள்பலகற்றாலு மாறுகோடி சித்தியடைந்தாலும் பேறில்லை, நித்தன்மலரடிக்கே நீக்க மறவேநின்று, அத்துவிதங் காணுதவர். எ - ம். (அத்துவிதக்கலி வெண்பா.) நன்றாகச் சாத்திரதலைகளோதி மதங்கற்கியாதென்றோர், வார்த்தையிலைச்சொல்லல் வழக்குரைத்தான்-எ-று. (ஔவைக்குறள்.) நல்லனநூல்பல கற்பினுங்காணவரிதே, மெய்ம்மையிலாதசிவம்-எ-ம்,வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

தத்துவமுதலிய விசாரங்களால் தன்னை அறியக்கூடாதென்பதற் குப பிரமாணம். (சிற்றம்பலநாடிகள்.) தத்துவங்கற்றுஞ் சமயவிரோத முஞ் சாத்திரஞ்சேர், புத்தகப்பித்தையும் புந்திமதத்தையும் போட்டி டென்று, வித்தகஞ்சிற்றம்பலநாடி வேணுபுரத்திறைவன், உத்தமமான சிவானந்த போகத்தை யூட்டினனே-எ-று. (தாயுமானசுவாமிகள்) தத் துவப்பேய்போடே தலையடித்துக் கொள்ளாமல், வைத்தவருண்மௌன வள்ளலேயே நித்தமன்பு, பூணக்கருதுநெஞ்சு போற்றக் காமெழுப்புங், காணத்துடிக்குமிருகண்- எ-ம். (பதார்த்ததீபிகை.) திண்ணியவறிவ தான சிவத்தினையடைய வேண்டில், அண்ணிய வசத்தனுத்மா வநிர்த மாயோகமான, மண்முதற்றத் துவங்கண் மறுவெனநேதிசெய்து, எண் ணெய்போற் பிரிந்துநீயு மிருந்திடா இன்பமுற்றே-எ-ம். ( பாலையா

ணர்தசுவாமிகள்.) தத்துவக்குப்பையைத் தள்ளுங்கடி வேதசாத்திரப் பொததலைமூடுங்கடி, முத்திதருஞானவஸ்துவை வாவென்று மூடிக் கொம்மியடியுங்கடி-எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

குருசொல்லாமற் சொல்லுவரென்பதற்குப்பிரமாணம். (திருவிளையாடல்.) கல்லாலின்புடையமர்ந்து நான்மறை யாறங்கமுதற்கற்ற கேள்வி, வல்லார்கணால்வர்க்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய், எல்லாமாயல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்வாம். என்பதனாற் காண்க.

ஞானகுரு அநுக்கிரகிக்கின்ற வழியேயன்றி யேனையவற்றால் முத்தியின்றென்பதற்குப் பிரமாணம். (ஞானவாசிட்டம்.) பேசிய தன் விசாரத்தாற் சனகர்பிரான் பெறும்பேறு பெற்றதல்லால், வாசியுளமற்றொன்றால் வந்ததல்ல வாரிசமலர்க்கண்மாலே, யாசியதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடைவதல்லாற், பேறசிகரில்லாவினைசெய் தொழிலாற் பெறலாமோ சிற்சொரூபம்-எ-ம். (ஒழிவிலொடுக்கம்.) தன்னிழப்பை யென்னகற்றச் சாதிப்பான்சற்குருவா, மன்னுபெருஞ் சீவ மதயானை தன்னடைமேற், சொற்பனத்தே தோன்றித் துடிப்பற்றுக் கேவலமாய், நிற்பதுபோற்பாரனெனின்-எ-ம். (குகைநமசிவாயர்) செப்பரியஞானச் செழுஞ்சுடரே சோணகிரி, யப்பனே நன்னூலறிந்தாலும் இப்புவியிற், கொண்டகுருவைப் பொருளாகக் கொள்ளார்பயனேது, கண்டவெலாம் வீணிலேகற்று. எ-ம். (குருநமசிவாயர்.) சற்குருவைப்போற்றாமற் சற்குருவைச்சாற்றாமற், சற்குருவைச்சந்ததமுஞ் சாராமற் சற்குவை, நின்றுதரியாயனீள்பிறவி நீங்கிவிடுமோ, மன்று சிதம்பர தேவா-எ-ம். (திருமந்திரம்.) கருடனுருவைக் கருதுமளவிற், பருவிடந்தீர்ந்து பயங்கெடுமாபோற், குருவினுருவங் குறிக்கொண்டு நிற்கத், திரிமலந்தீர்ந்து சிவனவனாமே-எ-ம். ( பட்டினத்துப்பிள்ளை

பார்.) குருமார்க்கமில்லாத குருடருடன்கூடிக், கருமார்க்கத்துள்ளே கருத்தழிந்து கெட்டேனே-எ-ம். (தாயுமானசுவாமிகள்) குருமொழியே மலையிலக்குமற்ற மொழியெல்லாக் கோடின்றிவட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்-எ-ம். (ஔவைக்குறள்.) குருவினடிபணிந்து கூடுவதல்லார்க், கருவமாய் நிற்குஞ் சிவம். (அன்றியும்.) நெறிபட்ட சற்குருநேர்வழிகாட்டில், பிறிவைற்றிருக்குஞ் சிவம்-எ-ம். (திருப்புகழ்.) ஐந்துபூதமுமாறுசமயமு மந்த்ர வேதபுராண கலைகளுமைம்பதோர் விதமானலிபிகளும் - வெகுரூப, வண்டராதி சராசரமும்முயர் புண்டரீகனு மேகநிறவனு மந்திபோலுரு வானுநிலவொடு வெயில்காலுஞ், சந்த்ரசூரியர் தாமுமசைவையும் விந்துநாதமு மேதுவடிவமோர் தன்சொரூபம தாகிநிகழ்வது-சிவயோகந், தங்களாணவ மாயைகருமமலங்கள்போயுப தேசபாகுருசம்ப்ரதாயமோ டேயுநெறியது - பெறுவேனோ எ-ம். வரும்-மற்றும் வருவனவற்றுற்காண்க. (5)

ஒருமொழியாமே லெனனுஞ் செய்யுண்முதல் இந்நான்கு செய்யுளானும் ஒருமொழியாகிய சின்முத்திரை-இத்தன்மைத்தென்றும், அது ஆத்மஞான குருவினால் அநுக்கிரகிக்கப் படுமென்றுங் கூறினார்.

இச்சின் முத்திரைக்குச் சௌபான முத்திரைகளை மேலருளிச் செய்கின்றார்.

(அ-கை.) முத்திரைக்குச் சௌபான முத்திரைகளை மேலருளிச் செய்கின்றார்.

(அ-கை.) முத்திரை மூன்றெனல்.

(வேறு.)

முத்திரைகளோர் மூன்றுமொழிந்திடில்
சுத்தசாம்பவி சொல்லும்பயிரவி

கின்ற அந்தமௌனநிலையை அடைந்து விளங்குவதொன்றாங் கூறுவான் றொடங்கினவைத்த முறைப்படியே, சின்முத்திரையை அதிதீவிரபக்குவர்க்கு அருளப்படுமெனல்.

முத்திரையை மொழியப் போகாது கண்
டுத்தமர்க் கேயுரைக்கும் பொருளது
புத்தியினர் புலப்படமயங் கியே
பித்தமே வாயப் பிதற்றுவர் பேயரே.

(இ-ள்.) (மேற்சொல்லிய சோபான முத்திரைகளுக்கு அதீதமாகிய) சின்முத்திரையின் பொருளை யாவருக்குஞ் சொலத்தக்கதன்று, அது சற்கரும பரிபாகிகளுக்குச் சொலத்தக்க பொருளாம், விவேகஞானியர்களுக்குச்(சொன்னால் அவர்கள் மூடத்தன்மையால்) வாய்விட்டுளறி அறிவழிந்து பயித்தியகுணமேலிட்டுப் பேயராய்ப் பிதற்றுவார்கள் எ-று, காண்-முன்னிலை-அசை-எ-ன-அசைகள்.

(ப-ம்) சஷ்டைத்திரியனை ஜன்மங்களினின்றும் நீங்கி ஞானாசிரியனை அடுத்து அவரால் அனுக்கிரகிக்கப்பட்ட ஆத்மஞானத்தைப் பெற்று அதில் தாமாரூடராகுமுன்னந் தேக வியோகத்தையடைந்து அந்த ஸம்ஸ்காரபலத்தினால் மீண்டு திருவவதாரஞ்செய்தவர்கள் அதிஞான பக்குவரென்பார். உத்தமரெனக் கூறினார்.

(இ-ம்.) ஞான ஸம்ஸ்கார முடையவர்களுக்கே சின்முத்திரையைக் காட்டவேண்டுமென்பதாம்.

இதற்குப்பிரமாணம். (ஞானவாசிட்டம்.) இனிப்பிறவாமுடிவான பிறப்பிலேமெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம், பனிச்சுடர் வெண்ணித்திலங்களுத்தமமாமுங்கிலல்லாற்படுவதுண்டோ, செனித்தவரின்மே

லோராய் நல்லோராய் மித்திராய்த் தெளிந்தோராகி, யனித்தமறமுத் தாராய் ஞானிகளாங் குணமெல்லா மவரைச்சேரும்-எ-ம், (வாதவூரர் புராணம்.) வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றெனை திலம்பாடென்று, சிந்தையாகுல மூற்றுன்கைச் செழும்பொருளீதல் செய்வார்க், இந்த நாளளிக்கவேண்டு மெனவிதி யின்மையாலே, யந்தநாளிந்நாளாக வடிமைகொண் டருளவெண்ணி எ-ம். (ஒழிவிலொடுக்கம்.) அதிபக்குவத்தோர்க் கனுக்கிரகஞ்செய்யும், புதுமைக்குச் சாத்திரங்கள்போதா-வதுவென்றுப், பேறேயனந்த பிரகாரந் தந்தானும், வேறேயனந்த விதம்-எ-ம. வரும்-மற்றும் வருவனவற்றுங் காண்க.

(அ-கை.) இத்தன்மைப்பட்ட நிலையை அடைந்தோர் யாவரென்று கேட்க அதற்குத்தரங் கூறல்.

## வேறு.

இந்தநன் னிலையிலிருந்து சாதித்தோர்
ரெவரெனவுமை யவாவினவ
சுந்தரவாமதேவ யாமுனிவர்
சுகர்முதன் முனிவ ரென்றருளி
கந்துடுகரியின் கையிணைப்புறங்கண்ட
வாளுடை மலைதருமயிலே,
சிந்தையிலிட்டைக் குறியவாதனை மு
நிகழ்த்துவனலம் புடன்கேணமோ.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட நல்லநிலையிலிருந்து சாதனஞ்செய்தவர்கள் எவர்களென்று தேவியார்கேட்கப் (பரமசிவனுர்.) கட்டுத்தறியை முறிக்கும் மதயானையின் துதிக்கையை புறங்கண்டதொடையினை

யுடைய இமயமலைபெற்ற உமையவளே, அழகிய பெருமைபொருந்திய வாமதேவர்-சுகயோகி-முதலாகிய முனிவர்கள் சாதனஞ் செய்வர்களென்றறிவாய். (மேலும்.) துதிக்கப்படுகின்ற நிஷ்டைக்குரிய ஆசனத்தையுஞ் சொல்லுவேன் அன்போடும் நீகேட்பா (யென்றருளிச்செய்வார்.) எ-று.

(ப-ம்.) அவ்வியக்த மஹாதஹங்காரங்களும், அவ்வஹங்காரத்தில் முக்குணங்களும், அக்குணங்களினுடைய சொரூபமே நாமரூபாத்மகப் பிரபஞ்சங்களாய் விகற்பித்த காரணகாரிய உபாதி முதலியவைகளும், தோன்றியொடுங்குவதற்குரிய இரண்டறச்சேவித்துநின்ற சுபஞ்சைதன்னியமாகிய பிரம்மானந்த போகபூமியென்பார்-இந்த நன்னிலையெனக்கூறினார்.

(இ-ம்.) மூல அடியார்களால் அநுபவித்த பிரம்மாநுபவநிலை ஈதென்றுணர்த்தியதாம்.

இதற்குப்பிரமாணம்: (ஞானவாசிட்டம்.) தன்னுள் விகற்பத் தெழுந்த விகற்பம்போகிற் றவர்க்கிடுமாயையிற் பயனேனார்சற்றுமில்லை இன்னவகைத்தோருண்மை யிரம்பவேண்டு மியாவர்மயக்கமுமாற்றுமிறைவனென்ன, மன்னவைத்தற் குறைசெய்வான் முனிவனீயே மதித்துணர்ந்தும் பிதாவுரைக்க மறந்துக்கேட்டாய், அந்நிலையே நிச்சயமாங் கண்டஞான வாகாயபுருடனுள னபலொன்றில்லை எ-ம். (தாயுமானசுவாமிகள்.) முந்நிலைச்சுட்டொழுதி யெனப்பலகாலு நெஞ்சேநான் மொழிந்தேனேநின், றன்னிலையைக்காட்டாதே யென்னையொன்றாச் சூட்டாதேசரணஞ்போந்த, அந்நிலையேநிலையந்தநிலையிலே சித்திமுத்தி யனைத்துந்தோன்றும், நன்னிலைபீதன்றி யிலைசுகமென்றே சுகர்முதலோர் நாடினரே-எ-ம். வரும்-மற்றும் வருவனவற்றுற் காண்க. (8)

(அ-கை.) ஆசனங்களிவையெனல்.

ளர். மனமானது சத்ததன்மாத்திரைச் சாத்வீக அம்சம் அரைக்கால் மாத்திரையாய்த்தோன்றிப் பரிசதன்மாத்திரை ரஜோஅம்சம் அரைமா த்திரையாகிய வியானவாயுவுடன் சேர்ந்துநின்றதால் சலனத்துவ மடைந்து விஷயங்களைப் பற்றிக்கோடலே அதற்குச் சங்கற்பரூபம் ஆதலால் அம்மனம் அச்சலனத்தன்மையைவிட்டு நீங்கித் தன்னிஜாம்சமான அருள்வடிவாய் நிற்கவேண்டுமென்பார். மனமது வடிவினையுரும லென்று ரெனப்பொருள்கூறுதலும் சிறப்புடைத்தாம்.

இன்ப சுகத்தைப் பெறவேண்டு மென்கிற இச்சைத் நினைவான முன்னிலைச்சுட்டுப் பற்றறவிட்டு ஒன்றையுங் கருதாது கருதுவதென் பார். உன்றுதன்னி யெனவும், சகலகேவலமாகிய அறியாமையை அசத்தமெனவும், அவ்வறிவுங்கழன்று ஞானாகாசமாகிய பரையீக்கத் தில் விளங்குகின்ற பிறிதொன்றில்லாத நிகரற்ற துரியாதீதமாகிய சின்மாத்திரநிலையை அசலாத தனிநிலையெனவும், அருள்வடிவமாகிய மனமானது - அந்நிலையில் இரண்டறக் கலந்திருத்தலே பொருந்துதல் சமாதியெனவுங் கூறினார்.

(இ-ம்.) ஞானசாதகன் ஏகாந்த ஸ்தானத்தில் ஸ்தம்பம்போலத் தேகத்தை அசைவறநாட்டி நிர்விகற்பசித்தனாய்த் தனதாத்ம சொரூப நிலையிற் பிரிவறத்ததாகாரமாக நிற்பதுவே சுகசமாதியென் றுணர்த்தி யதாம்.

ஸ்தம்பத்தைப்போலச் சிரமுதலியவை நெறித்தென்பதற்குப் பிர மாணம். (அமுதசாரம்.) செவ்வேயுடலுங் கழுத்துஞ்சிரமுமுற, வெல் லாதனத்தே யிருந்தெவர்க்குங்-கைவந்தால், வாதமுதனோய் நலியா மதியுடையோ, ராதனமென்ப தது-எ-ம். (பகவற்கீதை,ரு,) தலையுங்கழு த்து முடம்புமிவை செவ்வேதளராதேயிருக்கு, நிலையிருந்து கண்களைத் தன் மூக்குநுனிமேலே நிறுத்தி, அலையுங்கடல் போற்காமமுமெய்ப்

பயமுந்தன்னை விட்டகல, உலையுமனமுள்ளடங்கவெனை யுணர்ந்தே யிருக்கு மதியோகம்-எ-ம்.) பிரமகீதை.) தக்கஞானத்தைத்தான்பெற ற்பொருட்டுத் தனியிடந்தனை யடைந்திதய, துக்கமேவாமற்சுகாசனத் திருந்து தோடலைகழுத்துடம்பிவைநே, ரொக்குமாறிருத்திப் பூதிகொ ண்டிந்த வுடம்பையுந் தானம்பண்ணி, மிக்கவாய்வருமிந் தியங்களை யெல்லாம் விடையமே லெழாவகைவிட்டும் எ-ம், (ஞானிகள் நிலைமை.) அத்தனுமெய்ஞானியரு முறைத்தவாறே யாகமுடியிடைய சையாத்தறி போலாகிப், பத்திரங்கோமுகம்வீரம் பதுமத்தோடு பகர்குலவுமாதனத் திற் படிந்தேகாந்த, முத்திரைசாம்பவிவான நோக்கதாகி முயல்கருத்து நடுநிலையிலிருந்திநாளு, மித்தகைய சிவபோகத்திருப்பர் ஞானியினிய வற்குப்பிறவியு முண்டென்னலாமோ எ-று, வரும மற்றும் வருவன வற்றுற்காண்க.

மனத்தின்வடிவு சங்கற்பமென்பதற்குப் பிரமாணம். (ஞானவாசிட்டம்.) சடசூனியமாமெய்யங்களுஞ்சேர் தனிநெஞ்சுகருப் பேரொழிய, வுடனுங்ககனந்தனைப்போல வுள்ளும்புறம்புமுருவிலதாம், படர்ந்தமெய்பொய்யெனும பொருளிற்பயிலுற்றாமேவமனமாகும், தொடர் சங்கற்பமெனவுளதாந் தோன்றுமனமுமவுளதே. (அன்றியும்.) மனத் தின்வடிவுசங்கற்பமற்றிவ விரண்டுமொன்றுரு, மனர்த்தமோகமலபந்த மவித்தைமாயை தம்முதலா, மினைத்த பெயர்சங்கற்பத்துக்கேற்ற பெய ராய்த்துகழுவிற், கனத்தசகக்காட்சியும் போகுங்கதிர்விட்டெறிக்கும் பர வடிவம். என வருதலாற்காண்க.

மனமானது நிர்மலத்துவமான தன் எதார்த்தவடிவமாயிருந்து அருள் நிலையைப்பற்றவேண்டு மென்பதற்குப் பிராமாணம். (ஞானவாசிட்டம்) உன்னுருவைநீகாணு ஞானக்கண்ணிலொன்றலாவாசையெ னுங் காசமூறுங், அன்னதுதீர்த் துளக்கமலத் துள்ளேநொய்ய வறிவு

டைய வுன்மனத்தாலுன்னாலுன்னை, இன்னபடியென்னை நோக்கி மயக்க மெல்லா மிறையுமறவொழித்தின்ப மெய்திநிற்பாய், பின்னவனை யென்முன்னே னுரைத்தானென்று பெருந்தகைக்கு வசிட்டமுனி பேசினானே. என வருதலாற்காண்க.

உன்னாதுன்னியென்பதற்குப் பிரமாணம். (திருவருட்பயன்.) ஓராதே யொன்றையுமுற்றுன்னாதே நீமுந்திப், பாராதே பார்த்ததனைப் பார். என்பதனாற்காண்க.

தனிநிலையைப்பெற்றிருத்தலே சமாதியென்பதற்குப் பிரமாணம் (ஞானவாசிட்டம்) ஜனகனென்னு மன்னவர்கோனிவ்வாறே ரதத் தன்னிலையாம் பரம்பொருளிற் றளர்ச்சியறி, அனகசுகன் பயநீங்கிச் சோக மாறி யார்வகன்று செயலடங்கி வையத்தீர்ந்து, கனகவரையேறி நிருவிகற்பமான கலக்கா தசயாதியிற்சிற்சனைத் துற்றான், இனகானைச்செறி வருடமீரைஞ்ஞாற்றிற் றிரியொடு நெய்ம்மாண்டவிக்க தீபம்போன்ற எ-ம். (சிவப்பிரகாசம்.) பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும், நேசனையறியவொண்ணா திறையருள் ஞானக்கண்ணிற், தேசுறுமதனான் முன்னைச் சிற்றறிவொழிந்துசேர்ந்து, நேசமோடியர்பாத் துணிற்பது ஞானநிட்டை எ-ம். (சகிதிமுறை.) அலையிலாதசாகரம்போ லனிலஞ் சேராவிளக்கதுபோ, லருஞ்சவிரும் பொன்சமமாகிய தானதாசினனிய துபோல், நிலையொன்றிய நற்சாதியுற்று நின்றாட்கமலத்தெழும்பிரகாச நிறைவாரிதியிற் புகுந்ததனிமேல் சித்தடியேனிருப்பேனே, யிலையின் மகுடத்திருமுடியாய் மிளிர்குண்டலங்கள் செறிகாதா, வியன்கேயூரத் திருத்தோளா விஞ்சுஞ்சதங்கை சூழ்தாளா, புலையுங்கொலையுங் களவு மில்லாப் புனிதத்தவத்தோர் தொழுநீதத்தும், புராரிகுமாரவுமைசிறு வாபோரூர் முருகப்பெருமானே எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

(அ-கை) மனமடங்கில் வாயுமொடுங்குமெனல்.

(திருமந்திரம்.) மனமடங்கிடில் வாயுவடங்கிடும். (அன்றியும்.) மன மனமங்குண்டு வாயுவுமங்குண்டு, மனமனமங்கில்லை வாயுவுமங்கில்லை எ-ம். (சிவவாக்கியம்) மனங்குவிந்து நின்றிடம் வாயுபஞ்சபூதமாம், மனங்குவிந்து நின்றிடம்வாயுமன்னுயிரதா, மனங்குவிந்துநின்றிட மகாஸ்தலங்களாயிடும், மனங்குவிந்து நின்றிடப் வண்மையாகுமுத்தியே எ-ம். (பிரபுலிங்கலீலை.) இந்தியமோரொன்று விட்டிடின்மற்றையொன்றுசாரும், முந்தியமான மழிப்பமுற்றும் போமணியபாம்பி, னைந்தலைகளினுமொன்றை யரிந்திடின்மற்றொன்றலஞ், சிந்திடுமட்டறிந்தாற் றீந்திடுமொருங்குமாதோ எ-று. (தேவிகாலோத்ரம்.) வாயுவெனமறுகுகின்ற மனமடங்கும் வகைதப்பா, னியாவனவனரிபிரமனிந்திரன் சண்முகன் குருவும், பலதேவதைகளியோகித போதனைனறிஞன், ஆயினெலாமுடையானு மவன்வணங்கு நுணங்கிடையாய் எ-ம். வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

(அ-கை.) சரிதைமுதலாகிய நான்கிற்குமுரிய அதிகாரிகள்மனோலயமடைதலால் அதிலதில் உயர்ந்தோர்களெனல்.

அலையுமனத்தை யகத்தடக்கு
மவனே சரியை கடந்தோரும்
அலையுமனத்தை யகத்தடக்கு
மவனே கிரியை முடிந்தோரும்
அலையுமனத்தை யகத்தடக்கு
மவனேயோக தத்பரனும்
அலையுமனத்தை யகத்தடக்கு
மவனேஞானி யதிசூரன்.

(இ-ள்) அலைகின்ற மனத்தை உள்ளடக்கத் தக்கவனே சரிதை முழுதும் நிறைவேற்றினவனாவன். அலைகின்றமனதை உள்ளடக்கத் தக்கவனே கிரியைபூரணப்பட்டவனாவன். அலைகின்ற மனதை உள்ளடக்கத்தக்கவனே யோகீசுவரனாவன். அலைகின்றமனதை உள்ளடக்கத் தக்கவனே ஞானிகளில் பிரதந்திரனாவான் என்று.

(பதம்.) சரிதையை விதிப்படிசெய்கின்ற ஒருவன்தான் இயற்றுவதிற் பல சங்கற்ப மனதுடையவனாயினுஞ் சரிதையை ஒருங்கேதெரிந்து செய்யினுங் கடைத்தவனன்று. எவன் தனக்குக்கிடைத்தமட்டும் மனதிருப்தியாய்ச்செய்து எவ்வாராதனை பண்ணினானோ அவனே அச்சரிதைக் கதிகாரியாமென்பார். அலையுமனத்தையகத்தடக்கு மவனே சரிதைகடந்தோனென்றும், கிரியையை முறைப்படி செய்கின்ற ஒருவன் தான் பூசிப்பதில் வருங்குறைவு நிறைவுகளில் இதாகிதமாகியசித்தத்தையுடையவனாலும் அல்லது கிடைத்தமட்டும் பூசித்துத் திருத்தியடைந்து அப்பூசையினிடத்தில் காமிய மனதுடையவனாயினும் அக்கிரியா மார்க்கமுழுதுந்தெரிந்து பிறருக்கும் போதிக்கத்தக்கவனாயினும் அதற்குரியவனன்று. எவன் நிஷ்காமியமனத்துடன் ஆராதனை பண்ணினானோ அவனே அந்தக் கிரியாபூசையிற் சிறந்தவனாமென்பார் அலையுமனத்தை யகத்தடக்குமவனே கிரியைமுடிந்தோனென்றும். துறவின்கணின்று அஷ்டாங்கயோக விதிப்படி தேகத்தைச் சுஷ்கிப்பித்துக் கற்பகாலத்தியானஞ்செய்கின்ற யோகியானாலும், அவனது சித்தமானது பூர்வம்விட்டு வந்தவாசனையில் ஒன்றையேனுங் கருதுமாகில் அவன்முடிந்த யோகியன்று. எவன் தனது தியானசமாதியில் வைத்திருக்கிற சித்தமானது திரியாமல் சுத்தமடைந்து அவ்விடத்தில் பொருந்தியதே சாக்ஷாத் பரமசிவமென்று நிற்பானோ அவனே பரம யோகிகட்கெல்லாங் கடவுளாமென்பார். அலையுமனத்தை யகத்தடக்குமவனே யோகதற்பரனென்றும், சர்வம் பிரம்மமயமாகச் சுருதிகுரு

ஸ்வானுபவத்தாற்பார்க்கின்ற ஆத்மஞானி இதாகிதப் பிராரத்துவசவத்தில் அற்பமும் பேதமில்லாமல் சுயம்பிரகாசமாய் ஜொலிக்கின்ற பரிபூரணமான மனதுடன் விளங்கிடின் அவனே பரஞானிகளுக்குத் தலைவனுமென்பார். அலையற்ற சமுத்திரத்திற்கு மவனே ஞானி யதிசூரனென்றுங் கூறினர்.

௯௪. (இ-ம்.) மனோலயமுற்ற பரமாதிகாரிகளே முறையே நான்கு பதங்களினது சிறந்த பிரயோசன மடைவோர்களென்பதாம்.

மனோலய மடையவேண்டு மென்பதற்குப் பிரமாணம். (தேவிகாலோத்திரம்.) அறிவுக்கே தவமடக்கம் புண்ணியந்தானங் குணங்களெறியுடைய முதற்றெற முத்திப்பயனை நினைக்கின், மறுமும் வழியினையமன யடங்குவதன்றி யாதொன்றே, யறிவுடையோரிவையனைத்து மாமென்றே யறைகுவாரால். எ-ம். (திருமந்திரம்) மனமாயை மாயை மாயையமாக்க, மனமாயைதானே பசுமற்றொன்றுமல்லை, பினமாயை வேண்டாம் பிதற்றவும் வேண்டாம் தனையாய்ந்திருப்பது தத்துவந்தானே எ-ம். (தேவாரம்.) வெள்ளைத்தாள் விருப்பசயரர்கள் விரும்பமே வெள்ளத்தைச் சடைவைத்த விகிர்தனார், கள்ளத்தைக் கழியமனமொன்றிநின், றுள்ளத்தின் றெளிவைக்கண்ட துள்ளமே (அனைறியும்) பொறிபுலன்களைப் போக்கறுத்துள்ளத்தை, நெறிப்படுத்து நினைத்தவாசிந்தையு, ளறிப்புறமுதாவனேகம்பங், குறிப்பினூற் சென்றுகூடித் தொழுதுமே எ-ம். (ஞானவாசிட்டம்) பேதிக்குமனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்துவென்றோன், வாதித்துயரெல்லா மாற்றிமேலுபசாந்த வாழ்வுபெற்றோன், சாதித்தவிவேகமே யுனை வணங்கினேனென்று சனகர்கோமான், சேதித்த மனவலை யெல்லா மொழித்துத்தானே சித்திரம்போலின்றனன் எ-ம். (பிரபுலிங்கலீலை.) விரிந்தநெஞ்சங்கருவியாம் விடயமுணரவிரியாம, லொருங்குநெஞ்சங்

கருவியாந் தன்னையுணரவொருங்காமல், விரிந்தநெஞ்ச முடையானை விடாதுபிறவியென்றுணர்க, வொருங்கு நெஞ்சமுடையானை யுறுது பிறப்பென்றுணர்கவே எ ம். (பரணதேவராந்தாதி.) நினையடைந் தேன் சித்த நிலையாகும் வண்ண, நினையடைந்தேன் சித்த நிமலா நினை யடைந்தேன், கண்டத்தாய் காளத்தியானே கனலாரும், கண்டத்தாய் காபாலிகா எ ம். (கைவல்யநவநீதம்) மனதுசத்துவசொரூப மற்றிரண் டும் வந்து கலந்தனவற்றை மாற்றிநிற்றெப்போந், தனது சன்மார்க்கத்தை விடாதிருந்தபோது தாமதமுமிராசதமுஞ்சமிக்கும்பின்னைக், கனபரிணு மஞ்சலனம்போம் போனக்காற் களங்கமற்றுநின்ற வாகாயம்போலும் நினதுளமப்படியாமப்பிரமத்தொன்றாய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே எ ம். (மோகவதைப்பரணி.) வீயுமோகினை வேரறுமல்விடுஞ் செய்மோகன் விவேகனுன், மாயுமோவுயர் மாயையாரு மனத்திருரு மிருக்கவே, எ ம். (திருவாய்மொழி) பலனைந்துமேயும் பொறியைந்து நீங்கி, நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர், அலமந்து வீயவசுரரைச்செற் றான். பலமுந்து சீரிற் படிமிேேவாதே எ ம். (திருவாசகம்.) உத்த மனத்தநுடையானடியே நினைந்துருகி, மத்தமனதொடுமாலிவனென் னமனநினைவி, லொத்தன வொத்தன சொல்லிடவூருர்திருந்தெவருந், தத்தமனத்தன பேசவெஞ்ஞான்றுகொல் சாவதுவே எ ம். (திருக் களிற்றுப்படியார்.) அன்றிவருமைப்புலனு நீயுமசையாம, நின்றபடியே நிற்க முன்னிற்குஞ் சென்று, கருதுவதன்முன்னங் கருத்தழியப்பாயு, மொருமகடன் கேள்வனுனக்கு எ ம். (கந்தரலங்காரம்.) தடுங்கோண் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்று, மிடுங்கோளிருந்த படியிருங்கோளெழு பாருமுய்யக், கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் துளைக்கவைவேல், விடுங்கோனருள் வந்து தானேயுமக்கு வெளிப்படுமே எ ம். (தாயுமானசுவாமிகள்.) தன்னிலேதானுக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக சமாதியாகப், பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமேயுன புரைகடீர்த்தா, யென்னிலே யான்பிழைப்பே

னெனக்கினியா ருன்போல்வாரில்லையில்லை, உன்னிலோ திருவருளுக் கொப்பாவாயென்னுயிர்க்கோ ருறவுமாவாய். (அன்றியும்) சினமிறக் கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலு, மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே எ ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

பேதாகிதமான மனத்துடன் விளங்குகின்றவனே ஞானியென்ப தற்குப் பிரமாணம். (ஞானவாசிட்டம்.) சிந்தனையாங்களங்கமறச் சுத் தனுகித் திரைக்கடலிற் செறிந்சொன்றாந்தியலைபோல, வந்துறுவா தனைபோய்த் தற்பதத்தொன்றானுன் மாயாமோகந்தீர்ந்து வருத்தந்தீர்ந் தான், அந்தநெறியுனக்குமாமறிவதெல்லா மறிந்தமனத்திற்குரியவடை வேதென்னிற், சந்ததமுமகிட்கிசெறி போகமெல்லாந் தனதென்னுஞ் சுதந்தரத்தைத் தவிர்ந்துநிற்றல், என்பதனுற்காண்க.

(அ-கை.) உள்ளத்தின்கண் எழுகின்ற சங்கற்பங்களை அழிக்கத் தக்கவர்களே சர்வத்திற்கும் அதிகாரிகளெனல்.

அடக்கிக்கருத்தினலை வறுப்போனவனே
சகலதி யாகியாம்
அடக்கிக்கருத்தி னலை வறுப்போனவனே
பொன்றுப் பொருளுடையோன்
அடக்கிக்கருத்தினலை வறுப்போனவனே
யின்ப வனுபவியாம்
அடக்கிக்கருத்தினலை வறுப்போனவன்
வீட்டின்ப மடைபவனே.

(இ-ள்) கருத்தை அடக்கி அதனுடைய சலனத்தை நீக்கத்தக்க வனே சர்வசங்கபரித்யாகியாம். கருத்தையடக்கி அதனுடைய சலனத்

தை நீக்கத்தக்கவனே அறியாத பொருளுடையவனும். கருத்தை அடக்கி அதனுடைய சலனத்தை நீக்கத்தக்கவனே சுகத்தையுடையவனும். கருத்தை அடக்கி அதனுடைய சலனத்தை நீக்கத்தக்கவனே மோட்சவின்பத்தை அடையத்தக்கவனும் என்றவாறு.

(ப-ம்) அந்தக்கரணத்திலெழும் விருத்திபேதங்களனைத்தையும் ஒழித்து விளங்குகின்றவனே துறவடைந்தவர்கட்கெல்லாம் மேலான சர்வபரித்தியாகியாமென்பார். அடக்கிக்கருத்தி னலைவறுபபோனவனே சகலதியாகியாமென்றும் அத்தியாகிகளுள்ளும் அறிவில்லாத ஆத்ம விசாரம் பெற்றிருந்தாலும் கருத்தென்னும் பஞ்சை அலைவென்னுங் காற்றினிடமாக விடாமல் உள்ளடக்கிப் பாதுகாப்பவனெவனே அவனே நித்தியத்துவமான பொருளுக்குடையவனு மென்பார் அடக்கிக் கருத்தினலைவறுப்போனவனே பொன்றாப் பொருளுடையோனென்றும், அப்பொருளுக் குடையவர்களுள்ளும் சுருதிகுரு ஸ்வானுபவம் ஒற்றுமைப்பட்ட நிஷ்டாபரர்களாயினும், அவ்வனுபவத்தில் அற்பமும் பேதந்தோன்றாமல் திடப்பட்டிருப்பவனெவனே அவனே சுக போகியாமென்பார். அடக்கிக்கருத்தி னலைவறுப்போ னவனேயின்ப வனுபவியாமென்றும், அச்சுகபோகிகளுள்ளும் நினைக்கின்றவைகளனைத்தையும் அதுவாகவே நினைத்து அவையுங்கைவிட்டு நிரதிசயானந்தியா யிருப்பவனெவனே அவனே பேரின்பத்துக்குச் சுதந்தரனுமென்பார். அடக்கிக்கருத்தி னலைவறுப்போ னவன்வீட்டின்ப மடையவனென்றுங் கூறினர்.

(இ-ம்.) விஸ்ராந்தி அடைந்த கருத்துடையவனே சுகாதீதமாய் விளங்குவனென்பதாம்.

இதற்குப் பிரமாணம். (தேவிகாலோத்திரம்.) கருத்தடங்கின் முத்தியது கையாலிற்கட்டாகும், விரித்தபொருளிது வென்னவறிவு

டைய மேதக்கோர், திருத்தகு நல்லறிவாலே சித்தத்தைத்திறம்பாம லருத்தியுடனிலே நிறுத்துமது வறிவின்பயனுமால். (அன்றியும்.) மருவிய பொருண்மேலன்பாய் வானரம்போற்சரித்துத், திரியுமச்சித்தந் தன்னைத்திரித்துச் சூனியமதே நின்றால், மருவினோர் பிறிதலின்றி வானவரறிவுக்கெட்டாப், பொருவிலா நித்தசுத்தப் பொருளினையடைவான்றே எ ம். (ஞானவாசிட்டம்) சனனகருமங்களின் வித்தாய்த் தருவை யசைக்குங்காற்றேபோற், றினமுமுடலை யசைப்பதவுஞ்சித் தமிதனைத்தீர்வதுவே, யனகசகலதியாசமதாமதுவே பரமவானந்தம், வினவுபிறவெல்லா மிகவும் வெருவுகின்ற வெந்துயரே எ ம். (திருவாசகம்.) சித்தமுஞ்செல்லாச் சேட்சியன் காண்க எ ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

(அ-கை) பலவாயுதிக்கின்ற மனத்தைத்தன்னிலையிற் சேர்த்தவருக்கே முத்தியெனல்.

> வெறிகொள் குரங்குமயக்குங்கள்
> விளம்பியருந்தி யலைதலும்
> நெறிதான்மயங்கிச் சுழல்வதுபோ
> லிமிடமாத்திரை நிலாமனத்தைக்
> குறியிற்சமாதி யெனுங்கயிற்றாற்
> குறுகப்பிணிப்போ ரெவரவர்தாம்
> அறிவோடறியாமை கடந்த
> வரியமுத்திதனை யடைவார்.

(இ-ள்., வெறியைக்கொண்ட குரங்கானது அறிவைமயக்குகின்ற கள்ளைக்குடித்தால் அக்குரங்கும் வழிகெட்டு அலைவதுபோல நிமிஷமாத்திரம் நிலைபடாது அலைகின்ற மனத்தைக் குறிக்கத்தக்க நிலையிற்

சேரும்படி சமாதியென்னும் பாசத்தாற்கட்டத்தக்கவர்க ளெவர்களோ அவர்கள் அறிவும் அறியாமையுமாகிய இரண்டும் நீங்கிய அருமையாகிய மோட்சத்தைச் சேருவார்கள். எ று. தான் தான் தாம் சாரியைகள்.

(ப.ம்.) ஒரு இமைப்பொழுதிற்றுள்ளாக அளவின்றிய பேத அத்தியாசங்களை உண்டாக்கி அவற்றுள் ஒன்றைவிட்டொன்றுபற்றி ஒன்றிலும் இறையளவேனும் நிலைபடாது சஞ்சரிக்கும் மனமென்பார். வெறிகொண்ட கள்ளருண்ட வானரத்தைப்போல நிமிடந்தானு நிலா மனமென்றும், மனமுற்பத்தி ஸ்தானமென்பார். குறியிலென்றும், ஜடத்துவம் ஜீவத்துவம் ஈசத்துவம் சாக்ஷித்துவம் ஆகிய விந்நான்குமென்பார். அறிவோடறியாமைகளென்றும், யாவராலும் அறிதற்கரிய நிரதிசயானந்த வீடென்பார். அரியமுத்தியென்றுங்கூறினார்.

(இ-ம்.) மனமிறந்தவர்களே நிரதிசயானந்த மடைவர்களென்பதாம். மனங்குரங்கென்பதற்குப் பிரமாணம். (உபநிடதம்.) பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம். என்பதனாற்காண்க.

ஒருநிமிஷத்தில் மனம் பலவாயுதிக்குமென்பதற்குப் பிரமாணம் (கைவல்ய நவநீதம்) வஞ்சகமில்பரமார்த்த குருவே சொன்ன வழிகளை யிந்தேனினியோர் வசனங்கேளீர், சஞ்சலமற்றகண்ட பூரணமாய்ச் சித்தந் ததாகாரமாவதன்றே சமாதியோகம், உஞ்சலையொத்தலைவது தன் சுபாவமாகிய யொருகணத்திற் பலவுலகா யுதிக்குமிந்த, நெஞ்சகம் வஸ்திவில்லையா நிவாததீப நிலைபடைய தெப்படியோ நீர்சொல்வீரே எ ம். (தாயுமானசுவாமிகள்.) இமையளவு போதையொருகற்பகாலம் பண்ணுமிவ்வுலக மெவ்வுலகமோ, வென்றெண்ணம் வருவிக்குமாதர்சிற்றின்பமோ வென்னின்மகமேருவாக்கிச், சுமையெடுமினென்றுதான் சும்மாமோயெமைக் சுமையாளுமாக்கினாளுந், தூர்ப்புத்திபண்ணி

யுள நற்புத்தியாவையுஞ் சூறையிட்டிந்திரஜாலம், அமையவொருகூத்துஞ் சமைந்தாடுமனமாயை யம்மம்மவெல்ல வெளிதோ, வருள்பெற்றபேர்க்கெலா மொளிபெற்ற நிற்கு மிதருளோ வலாதுமருளோ, சமயநெறிகாணாத சாக்ஷிநிருக்ஷ்யமாத் தமயனேற்குளவுபுகல்வாய். சர்வபரிபூரண வகண்டதத்துவமான சச்சிதானந்த சிவமே எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

மனம் உதிக்குமிடத்திற் போயொடுங்க வேண்டுமென்பதற்குப் பிரமாணம். (தாயுமானசுவாமிகள்.) உறவுடலையெடுத்தவரிற் பிரமாதியேனுமுனை யொழிந்துதள்ளற், கறவுமறிதன்றே விகபரமுமுன்னையன்றியாவதுண்டோ, வறுதி லுனையசத்தென்னல் வழக்கன்றுசத்தெனவும் வாழ்த்துவேனென், சிறுமைகெடப் பெருமையினின் சென்மதேயத்தினிலே செல்லல்வேண்டும். என்பதனாற்காண்க.

மனது சமாதியின்கண் நிற்கப்பெற்றவனே முத்தி அடைவானென்பதற்குப் பிரமாணம். (தேசிகாலோத்திரம்.) மந்திரஞ் செபந்தியானம் பூசனை வணக்கம வேண்டாம், அந்தமிலாதமுத்திக் குபாயமேயறிதல்வேண்டுஞ், சிந்தனை புரமேசெல்லிற் றயாமேதிரியாரிட்கிற், பரதமாந்தன்பநீங்கிப் பரமான வின்பஞ்சேர்வாய் எனபதனாற்காண்க.

(அ-கை,) சாம்பவியின் விதியிதுவெனல்.

## வேறு.

பங்கயாதனத்திற் படியவேயிருந்து
பரமசற்குருவினைத் தொழுதே
இங்கிருவிழியும் விசும்புந்திறவி
யெழுங்கருத் தினையகமாக்கி

அங்குறு நிலையா லடங்கிடா மனத்தி
னலைவ றுத்தறி வறியாமை
துங்கமா யொழியச் சாதனைபுரிந்தே
தூங்காமற் றூங்குக மாதோ.

(இ-ள்.) பதுமபீடத்திற் பொருந்தும்படியாக இருந்து உயர்ந்த ஞாநாசிரியரை வணங்கி இவ்வுலகத்தின் (விஷயங்களை நோக்குதற் குரிய) இரண்டுகண்களையும் சிதாகாயத்தில் (இமையாமல்) பொருந்த நிறுத்தி உதிக்கின்றகருத்தை உள்ளடக்கி அங்ஙனம்பொருந்திய நெறி யாலே அடங்காதமனத்தின் அலைதலை யொழித்து அறிவும் அறியாமை யும் நீங்கச் சுத்தமாகச் சாதனஞ்செய்து நித்திரையைச்செய்யாமல் செய் யக்கடவர்கள் என்று. எ - ம. மாது ஓ இவ்விரண்டும் அசைகள்.

(ப-ம்.) இவ்வுலகத்தில் விஷயங்களென்னுங் காற்றில் மனமென் னுஞ் சூத்திரந்தாங்கி அலைகின்ற இரண்டுகண்களாகிய கறங்குகளை ஞாநாசிரியராற்பெற்ற சாம்பவியாகிய அருட்பார்வை யென்னுங் கையி னாற்சேர்ந்து இதயாம்பரமென்னும் ஸ்தானத்தில் நிலைபெற நிறுத்தி வைத்தலென்பார். இங்கிருவிழியும் விசும்புற நிறுவியென்றும், பிரம்ம நிஷ்டாசாதனஞ் சம்பூரணமான இடத்தில் உதயமாகின்ற தனவிற் சுழுத்திலய அடையவேண்டுமென்பார். தூங்காமற்றூங்குகவென்றுங் கூறினார்.

(இ-ம்.) ஞான அப்பியாசிக்குரிய பிரதான முத்திரையின் சாதக பக்குவங்களை அறிவித்ததாம்.

இமையாநாட்டத்துடன் சிதாகாயம்பற்றவேண்டு மென்பதற்குப் பிரமாணம். (கடவுளந்தாதி.) சுழுமுனை வட்டச் சுழுமுனையுச்சித்துவா

ரத்திலே, வழிபயமென்று மலைப்பர்களோமடைக் கொக்கதுபோற் றெளிவுறுபார்வை யசையாது சித்தடி தூக்கிநின்று, விழியிமையா தொளி பார்த்தாடுருவ வெளிப்படுமே எ ம். (திருவாசகம்.) பொய் யனேனக நெகப்புகுந்த முதாறம் புதுமலர்க் கழலிணையடி பிரிந்துங், கையனேனின்னுஞ் செத்திலேனந்தோ விழித்திருந்துள்ளக்கருத்தினை யிழந்தே, னையனேயரசே யருட்பெருங்கடலே யத்தனேயயன் மாறகறி யொண்ணச், செய்யமேனியனே செய்வகையறியேன் றிருப்பெருந் துறை மேவியசிவனே எ ம். (செல்காலத்திரங்கல்.) களித்திருந்த ஞானங்கண்ணலருந்தி யளித்ததனை யன்றேயருந்துதற்குப் பெற்றில மே. எ ம். (கைவல்ய நவநீதம்.) அசத்திலெம்மட்டெண்டம்மட்டும் பராமுகமாகிறையம்மட்டு, நிசத்திலுள்விழிப் பார்வையாயிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்திலுன்மனநின்று சின்மாத்திர வடிவமாகிடின் மைந்தா, கசத்ததேகத்தி லிருக்கினுமானந்தக் கடல்வடிவாவாயே எ ம். (சௌந்தரியந்தாதி) உமையே மூலத்துறைந்தபொருளுணர்ந் தேசுழியின் முனைதிறந்து, விமையோரறியவரிதாகு மெந்தாயுனது பதங்கருதி, யிமையாநாட்டத்துடன்காலை நீட்டிமுடக்கி நிலைபுகுந்து, தமையேயுணருந் தாமருளுந்தாயேயமலன் றனிவாழ்வே எ ம் (சௌந் தரியலகிரி.) இணைவிழியிமையா நாட்டமெய்தியதலரத் தோன்றும், பணைநெடும்புவனமிந்தப் பார்வைசற்றிமைக்குமாயிற், றுணையிழந்தறிவ தெண்ணித் துணிந்தநின் கருணையென்றற், கணையினுங்கொடியதென னக்கடவதோ கடவுண்மாதே. எ ம். (தாயுமானசுவாமிகள்) பொற்ற ஞெடுகைகாலில் வள்ளுகிர்படைத்தலாற் பொருதிடையொடுக்க முமி லாற், பொலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு பூரித்தவெண் ணீர்மையால், ஏற்படவிளங்குக னகத்திலிமையாவிழி யிசைத்துமே னேக்கமுறலால் எ ம். (ஔவைக்குறள்.) இமையாதநாட்டத்திருந்து ணர்வாருக்கமையாத வானந்தமாம். (அன்றியும்.) கண்ணுலுறப்பார்த் திக் காதலாற்றுனேக்கி, லுண்ணுமேயீசனெளி எ ம். (பத்திரகிரி

யார்.) அமையாமனதமைபு மானந்தவீடுகண்டால், இமையாமனோக்கியிருப்பதினியெக்காலம் எ ம். (ஒழிவிலொடுக்கம்.) தன்னையிழப்பார்க்கென்னசார்வூழிச்சங்கார, மென்னிலொளித்தெங்கே யிருக்கலா முன்னே புலிபார்க்கப்போனகதை போலிமையாநாட்டஞ், சலியாவன்மூடுன்னே. எ ம். (சோரூபத்தந்தாதி) நயனமுமேவடிவாஞ் சொரூபத்தை நண்ணிநின்றால், நயனஞ்செவிதொக்கு மூக்கெனுமிந்தியநாவினொடு, நயநண்சுழுத்தியவத்தை கனவினனவினுடன், நயனம்பிறிவற் றிருக்குமெல்லாங்கண்டு நாட்டதிலே எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

தூங்காமற்றூங்குக வென்பதற்குப்பிரமாணம். (மோகவதைப்பரணி.) ஆங்குணராமைபு முணர்வுமாகிய மேகாளரவிருந்து தூங்கினர். காண் சுகமடைவார் சும்மேமேலாகம் முலக்காய் எ ம். (கடவுளந்தாதி.) கண்டுகொண்டானந்தக் கூத்தாட்டை நேசக்கருணையினாற், கொண்டு நின்றான்பர வீதியிலே குருபாதமென்றுந் தொண்டுசெய்தந்தத் திருவாடுமூலவிற் றூங்கிக்கொண்டாற், பண்டுமென்சோதிப் பழம்பொருடோன்றுமணிந்தவர்க்கே எ ம். (பத்திரகிரியார்) கட்டறுக்கவொண்ணுக் கருவிகரணுநியெல்லாஞ் சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவதுமெக்காலம் (அன்றியும்.) ஆங்காரமும் மடக்கியைம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமற் றூங்கி சுகம்பெருவதெக்காலம், அன்றியும் ரீங்காரச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து, தேங்காக்கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம். எ ம். (பட்டினத்துப்பிள்ளையார்.) சிந்தனையற்றுப்பிரியமுந்தானற்றுச் செய்கைபற்று, நினைந்ததுமற்று நினையாமைபுமற்று நிர்ச்சிந்தனுப்ச், தனந்தனியேயிருந் தானந்தநித்திரை தங்குகின்றவனந்தனிலென்றிருப்பே னத்தனேகயிலாயத்தனே. (அன்றியும்) ஒத்தவிட நித்திரையென் றொத்துமிருந்தேண்டி எ ம். (திருவருட்பயன்) ஓங்குணர்வினுள்ளடங்கி வுள்ளத்திலின்பொடுங்கத் தூங்குவர்மறறே

தண்டுசொல் எ ம். (அவிரோதவுந்தியார்) ஆங்கறியாமையுஞ் சாரா தறிவொடுங் தூங்கு, வாய்நாளுமென்றுந்தீபற, தோன்றும்பரம்பொருளுந்தீபற எ ம். (கந்தரலங்காரம்) ஆங்காரமுமடங்கா ரொடுங்கார் பரமானந்தத்தே, தேங்கார்நினைப்பு மறப்புமறார்தினைப்போதளவு, மோங்காரத்துள்ளொளிக் குள்ளேமுருக னுருவங்கண்டு, தூங்கார்தொழும்பு செய்யாரென் செய்வார்யம தூதருக்கே எ ம். (ஞானவாசிட்டம்) தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற் சேர்ந்தசுக வறிவுமிகச்சிறந்த தாலும, தெரிபொருளால் வளைப்புண்டார் பந்தமாகுந் தெரிபொருளை விட்டகன்றுற் றிடங்கொள்வீடாம், தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும் போதிற் சேர்ந்தவனுபூதியிடர் தீர்ந்ததாகும, தெரிவுறவாங்கதுபற்றி நிற்பாய்நீநின்றிர நிலையின்சுருதந்தனைச் சேருவாயே எ ம். (சௌந்தரியந்தாதி) புரிந்தொழிலு மூவைத்திற் பொங்குஞ்சலதிப் பெருங்கடலைக், கரிகொண்டரிய சுனைமேற்பூட்புங் காற்றம்புகுந்து களங்கமல, மெரியுஞ்சுழினைத்தடமேறிச்சன் றிருத்தாளியமையடைந்து, துரியங்கடந்த பெருவெளிக்கேதுஞ்சத தருவாயதுணைமாதே எ ம். (தாயுமானசுவாமிகள்) தூங்கிவிழித்தென்னபலன் றூங்காமற்றூங்கிநிற்கும், பாங்குகண்டாலன்றோ பலன்காண்பேம் பைங்கிளியே. (அன்றியும்) தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுமா னின்னிறைவில், நீங்காமனிற்கு நிலைபெறவுங்காண்பேனோ எ ம். வரும் மற்றும வருவனவற்றுற்காண்க.

(அ-கை.) சதாநிஷ்டைசெய்யின் சர்வமுமொடுங்கி முத்தி அடையலாமெனல்.

ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
லடங்கிடாப் பொறிபுலனடங்கும்
ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா
லடங்கிடுமேனோ விடயங்கள்

ஆதனத்திருந்தே சாதனை புரிந்தா
லறிவறியாமைக ளொழியும்
ஆதனத்திருந்தே சாதனை புரிந்தா
லகண்டவீ டவை வதுநிசமே.

(இ-ள்.) மேற்சொல்லிய அங்காசனத்திலேயே யிருந்து பிரம நிஷ்டாசாதனஞ்செய்தால் அடங்காத இந்திரியங்களும் அவைகளின் விஷயங்களும் ஒடுங்கும். அங்காசனத்திலேயேயிருந்து பிரமநிஷ்டா சாதனஞ்செய்தால் மனோவிஷயங்கள் ஒடுங்கும் அங்காசனத்திலேயே யிருந்து பிரமநிஷ்டாசாதனஞ் செய்தால் அறிவும் அறியாமையுமாகிய விரண்டுநீங்கும் அங்காசனத்திலேயேயிருந்து பிரமநிஷ்டாசாதனஞ் செய்தால் அகண்டாகாரசின்மயானந்த வீட்டைப் பெற்றுக்கொள்வது சத்தியம் எ று. ஏ அசை.

எனவே சாயுக்கிய பதம் பெற்றுக்கொள்ள வேண்டிய பரிபாகிகள் சற்குருவை அடைந்து பிரம்ம நிஷ்டையைக் கைக்கொள்வாராயின் அவர்கள் ஓர் அங்காசனத்தில்நின்று அந்த நிஷ்டையை இடைவிடாமல் சாதனஞ்செய்து வந்தால் மாத்திரம் அருட்போதமாகிய ஞானக்கினி சதோதயமாய் மேன்மேலும் விளங்காநிற்கும் அதனாற் பொறிபுலனற்று மனோலயமுற்று ஜடத்துவம் ஜீவத்துவம் ஈசத்துவம் சாக்ஷித்துவம் ஆகிய விந்நான்குங்கழன்று அதீதமுத்தி அடைவார்கள். சாதனஞ்செய்யாவிடின் அத்தேகத்தில் முத்தியை அடையமாட்டார்களென்றதே துணிபெனப்பெற்றாம்

(இ-ம்.) வெளிப்படை.

ஞான நிஷ்டாசாதனையினால் இந்திரிய முதலியவை ஒடுங்குமென்பதற்குப் பிரமாணம். (சிவானந்தமாலை.) பூதஞ்சுழலும் பொறி

புலனந்தக்கரணம், போதங்கழித்துநாள் போக்காதே போதச், சிறையா நிறைவகலச் சின்மயநேயத்தே, நிறையா நிறைவாகிநில். எ ம். (ஞான வாசிட்டம். மனமணிபேதச்சேற்றின் மறைந்தொருவருக்குந்தோன்று கனமுறவிவேக நீராற் கழுவினுற்சித்திகாட்டும், வினவுருவிவேகவன் பான் மெய்ம்மையை மதியாற்கண்டு, சினமுறுபொறியைவென்று தீர் வரும் பிறவிநீர்வாய் எ ம். (மௌனதரிசனம்) அருமையென்றமௌ னத்தை மூட்டு மூட்டு வடங்காத காரணமைந்து மடங்கிப்போகும், இரு மையென்ற விந்திரியமாண்டுபோகு மிருண்மலம்போந்திரோதையில்லை மயக்கநீங்கும், வெருவுபலகோடிகன் மங்கணத்தினீங்கும் வெளியினுள் ளே யொளிதோன்று நாதங்கேட்கும், உரிமையுடன் மௌனசித்தியாக வர்க வுருவுமனக்கானந்த வுருவமாமே. எ ம். வரும் மற்றும் வரு வனவற்றுற்காண்க.

சமாதிநிலை குலையாதிருப்பவன் முத்திபடைவ னென்பதற்குப்பிர மாணம். (சாந்தலிங்கசுவாமிகள்) அருந்தவவிலக்கிவ் வுடம்பரிப்பது தானச் சமாதிகடருமூலர் திருந்துநந் சிந்தைசிவன் கலையார்வரினு மென்றமையிற் பேதிப்பான், பொருநிலும் வாளுேரெதிர் மூதிர் கொலைவெம்பூதமாதியவனைந்திடினு, மிருந்ததந்சமாதி நிலைகுலையா தோரெண்ணிய வெண்ணியாங்கடைவர் என்பதனுற்காண்க.

(அ-கை) சின்மயத்தில் அரைமாத்திரைப் போதேனும் நிலைபொ ருந்தினவர்களே முத்தரெனல்.

## வேறு.

உலையாப்பொறியும் புலனடங்கியொன்று மனத்திலுன்று தலையாகியபேரானந்தத்தலைப்பட்ட தனித்தான்மூழ்கி [தே

அலையாயோகமம்புவிடு நேரமரைமாத்திரையேனும்
நிலையாநிற்போர்வீடடைவர் நிலத்துதிப்பிறவாரிறவாரே.

(இ-ம்.) கெடாத இந்திரியங்களையும் விஷயங்களையும் அடங்கச் செய்து மனதில் ஒன்றையும் நினையாமல் சர்வானந்தத்துக்கும் முதன்மையான பேரானந்தகடலிற் பொருந்தி அதில் மூழ்கி அலைவற்ற ஞானயோக நிலையில் (வில்லிற்றெறிந்த) பாணத்தை விடுகின்ற நேரமாகிய அரை நிமிஷ மாத்திரமானாலும் தடஸ்தமாய் நிற்கத்தக்கவர்கள் மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்ளுவார்கள். (அன்னவர்கள்) இப்பூமியின்கண் சனனமான துக்கத்தை அடையார்கள். எ-று, தான் சாரியை ஏ ஏ அசைகள்.

(ப-ம்.) அலைநுரைகுமிழி நிவலைகள் போற்றோன்றி அழியாநின்றமனுடானந்தமுதல் இரணியகர்ப்பானந்த வரையிலுமுள்ள பதினோரானந்தங்களுக்கெல்லாம் மேலான பிரம்மானந்தக்கடலென்பார் தலையாகிய பேரானந்தமென்றார்.

(இ-ம்.) ஆத்மானுசந்தானத்தில் இறையளவேனும் சும்மா நிற்கவேண்டுமென்பதாம்.

பேரானந்த மென்பதற்குப்பிரமாணம். (கைவல்யநவநீதம்) மனுடன்மனுடகந் தருவன்றேவகந்தருவன் பிதிர்பிறவித்தேவன், தனுடன் கருமசுரன் சுரனிந்திரனுசான் பிரசாபதியாரேனன், கனவிராட்டனிரணியகருப்பன் கருதுமிப் பதினொருபேரின், பினவானந்தங்களுரையாம் பிரளய வெள்ளக்கடல் பிரமானந்தம். எ-று. (சந்நிதிமுறை) மன்னராவாருறு சுகமும்வானோர் மகிழ்ந்துபெறுசுகமு, மணிப்பைநாகத்தவர்சுகமு மற்றையோர்களடைசுகமும், பண்ணுமிடத்திற் சிவத்தெழுந்த பரமானந்த லேசமெனப், பகர்ந்தாய்குருவா யெழுந்தருளிப் படிறேன்மறந்திங் குழல்கின்றேன், கன்னலெழுந்த தெளிசேறேகட்டமொ

வின்றீங்கனியே, கதலிக்கனியே நற்பலவின் கனகச்சுளையே கதிமுனையே, பொன்னம்பொருப்பே யென்விருப்பே போதச்சுகமே கிஞ்சுகமே, பூரணவெளியே யுள்ளொளியே போரூர்முருகப் பெருமானே எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

அமைமாத்திரைப்போது நிலையில் நின்றவர்கள் முத்திபெறுவார்களென்பதற்குப்பிரமாணம். (ஒழிவிலொடுக்கம்) சுட்டுப்போதங்கழன்ற சுத்த மமைமாத்திரையின், மட்டுத்தான்ற்றநிட்டை வாய்க்குமாற் கெட்டேன், தலைச்செய்யுமானந்தஞ் சற்றே ரூபால்வாரி, மூலக்கண்ணிற் றோன்றுமுறை. யென எ-ம். (சாந்தலிங்கசுவாமிகள்) பொல்லாதனெஞ்சமோமைந்துபுல ன்கடம்பா, லல்லாதமைமாத் திரையுநின்னடிக்கணன்பாய், நில்லாதிதற் கென்செய்கேனிதைநின்றிடென்றே, சொல்லாய்திருத்தில்லை யுண்மெவிய சோதியே எ-ம். (குருநமசிவாயர்.) மாத்திரைப்போதாயினு நின்வாய்த்தமலர்ச்சேவடிக்கே, நேத்திரத்தைநெஞ்சினிருத்தாமற் சாத்திரத்தை, யெல்லாமறிந்துப னேதுமினிக்கண்டிலேன், வல்லாய்சிதம்பரதேவா. எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

(அ-கை) உண்மையாகிய சிவயோகமிதுவெனல்-

நிட்டைநிலையிதென் றுரைப்பர் நிகழும்வாயுத் தாரணையை
நிட்டையது தானலவென் றே நிலவுமேலோர் புகலுவர்
நிட்டையாதல் கருத்தடங்க நிறுத்தலதுவே சிவயோகம்
நிட்டைவிடாதுசாதிப்போர் நித்தமெய்வீடுறுவாரே.

(இ-ள்) செல்லுகின்ற வாயுவை அடக்குதலைச் (சிலர்) இதுவே ஞான நிஷ்டையினுடைய நிலைமையென்று சொல்லுவார்கள், பிரகாசிக்கின்ற ஞானவான்கள் அது ஞான நிஷ்டையல்ல ஞானநிஷ்டையாவது மனத்தினுடைய விர்த்திகளடங்க நிறுத்தலென்று சொல்

லுவார்கள். அப்படிச் சொல்வதே சிவயோகமாம் அந்தச் சிவயோகமாகிய ஞானநிஷ்டையைவிடாமல் சாதிக்கத் தக்கவர்களோ அழியாத உண்மையாகிய மோட்சத்தைப் பெற்றுக்கொள்ளுவார்கள். எ று. தான் சாரியை ஏ ஏ அசைகள்.

(ப-ம்.) மனமானது தொம்பத சுத்தார்த்தத்தைவிட்டுத் தத்பதத்தைச்சார்ந்த தெளிவாக மௌனநிலையிற் பேராமல் விளங்குகின்றதே ஞானநிஷ்டையாகுமென்பார் நிட்டையாதல் கருத்தடங்க நிறுத்தலென்றும், இடைவிடாமல் நடக்கையிலும் விவகாரவேளையிலும் யாதொன்றைச் சிரவணம் பண்ணுகையிலும் ஞானநோக்குற்று அசிபதமாகிய ஐக்கிய நிலைபொருந்தினவர்களே சுகாதமாய்ச் சீவன்முக்தி பதத்தைப் பெறுவார்களென்பார். நிட்டைவிடாது சாதிப்போர் நித்தமெய் வீடுறுவாரென்றுங் கூறினர்.

(இ-ம்.) மனமிறக்குநிலையேயல்லாது வாடித்தாரணையைச்செய்தல் பிரமநிஷ்டையல்லவென்பதாம்.

இதற்குப் பிரமாணம். (ஒழிவிலொடுக்கம்.) குறங்கு குத்திக்கொண்டு குமேரக்கை கத்திக்கூட்டணை, மறந்தழைத்தாற் றூக்கம்வருமோ வெறுங்கெடுவீர், தன்னையழித்தெழுந்த சச்சிதானந்தத்தை, யுன்னிலொளித்து விடாதோ. என்பதனாற்காண்க.

கருத்தடங்கினதுவே சிவயோகமென்பதற்குப்பிரமாணம். (சொரூபாசாரம்) சித்தம்பிறந்து செகம்பிறந்து தானெனவோர், கத்தன்பிறந்த வழி கண்டோம் சித்தம், அடங்காமையேமாயை யம்மாயைமாய்ப்பார், திடந்தானே சாயுச்சியம். எ ம் (உண்மைநெறிவிளக்கம்) எப்பொருள் வந்துற்றிடினு மப்பொருளைப் பார்த்திங்கெய்துமுயிர்தனைக் கண்டிவ்வுயிர்க்குமேலாம், ஒப்பிலருள்கண்டுசிவத் துண்மைகண்டிங்குற்றதெல்லாமதனாலே பற்றிநோக்கித், தப்பினைச்செய்வது மதுவே நினைப்புமது

தானேதருமுணர்வு புசிப்புமது தானேயாகும், எப்பொருளுமசைவில்லை யென வந்தப்பொருளோ டிசைவதுவே சிவயோகமெனு மிறைவன் மொழியே. எ ம். வரும் முற்றும் வருவனவற்றாற் காண்க.

சதாநிஷ்டடரே சீவன் முத்திபதத்தி லிருப்பரென்பதற்குப் பிரமாணம். (தாயுமானசுவாமிகள்) நடக்கினுமோடினு நிற்கினும் வேறொருநாட்டமின்றிக்; கிடக்கினுரு செவ்விதிருக்கினு நல்லருட் கேள்வியிலே, தொடக்கு மெல்லா மறுசு மனமற்ற பூரணத்தொட்டிக்குள்ளே, முடக்குவன்யான் பரமானந்த நித்திரை மூடிடுமே. என்பதனாற் காண்க. (18)

(அ-சை) சதாநிஷ்டையாலே மோட்சமடைதல் சத்தியமெனல்.

வேறு.

நிட்டைசாதித்தா னீங்குமைம்பொறியொடுபுலனும்
நிட்டைசாதித்தா னெஞ்சுபுகு புலத்திடையொடுங்கும
நிட்டைசாதித்தா னினைப்போடு கேவலமொழியும்
நிட்டைசாதித்தா னமலவீடடைவது நிசமே.

(இ-ள்.) ஞானநிஷ்டையைச் சாதித்தால் பஞ்சேந்திரியங்களுடனே அவைகளின் விஷயங்களும் ஒடுங்கும். ஞானநிஷ்டையைச் சாதித்தால் விஷயார்த்தங்களிற் செல்லுகின்றமனமும் உள்ளொடுங்கும். ஞானநிஷ்டையைச் சாதித்தால் சகல கேவலங்களொடுங்கும். ஞானநிஷ்டையைச் சாதித்தால் மலரகிதமான முத்தியைப்பெற்றுக் கொள்வது உண்மையாகும் எ று வ அசை.

(ப-ம்.) அனுர்த்த சடதுக்கமாகிய திரிபுடியை மெய்யெனக் கொண்ட மனமானது அவற்றைப் பொய்யெனத் தள்ளச்செய்கின்ற சமாதி யனுபவத்தில் அழுந்தப் பெறுமாயின் அம்மனம் அந்நிலை விடா

தென்பார். நிட்டைசாதித்தானெஞ்சமுமுளத்திடை யொடுங்குமெனவும், அவ்வனுபூதியின்கண் தன்னைத் தரிசிக்கின்ற தோற்றவொடுக்கம் நசிக்குமென்பார். நிட்டைசாதித்தா னினைப்பொடுகேவல மொழியுமெனவுங் கூறினார். (19)

(அ-கை) இதுவுமது.

வேறு.

நீங்காக்கருத்தை யகத்திருத்தி நிகழ்சாம்பவியாற் கரணமும்
நீங்காநிட்டைசாதித்தா னீங்கும்பொறியும் புலன்கரணம்
நீங்காநிட்டைசாதித்தா னினைப்புமறப்பு மறநீங்கும்
நீங்காநிட்டைசாதித்தா னித்தமுத்திப் பேறடைவார்.

ஒழியாத எண்ணத்தை உள்ளத்தில் நிறுத்திப் பிரகாசிக்கின்ற சாம்பவியினாற் சிதாகாயத்திற் பொருந்தப் பிரிவில்லாமற்பிரமநிஷ்டையைச் சாதனஞ்செய்தால் பஞ்சேந்திரியங்களும் அவைகளின் விஷயங்களும் அந்தக்கரணங்களும் ஒடுங்கும். பிரிவில்லாமற் பிரமநிஷ்டையைச் சாதித்தால் சகல கேவலங்கள் முழுதும் ஒடுங்கும் பிரிவில்லாமற் பிரமநிஷ்டையைச் சாதித்தால் அழிவில்லாத முத்திப்பேற்றைப் பெற்றுக்கொள்ளுவார்கள்-எ-று.

(ப-ம்.) நிஷ்டையின்கண் உதயமாகின்ற ஞாதிருஞான மிரண்டும் நழுவுமென்பார். நினைப்பு மறப்புமறநீங்கு மெனவும், பிரம்மானுபவத்தில் ஞேயமாத்திரமா யிருக்கப்பெறின் ஜீவன்முத்தர்களாவரென்பர். நிஷ்டை சாதித்தானித்தமுத்திப் பேறடைவானெனவுங் கூறினார்.

(இ-உ-க-ம்.) பிரம்மநிஷ்டர்கள் சாதனத்தினாலேயே பொறி புலன்களும் மனமுமொடுங்கப் பெற்று அறிவானந்தமாகிய மோட்ச வாழ்வை அடைவது சத்தியமென்றறிவித்ததாம். (20)

(சூ-கை.) நிவாததீபம்போலத் தன்னிலையில் நிலைபெற்றவனே சிவத்தை யடைவனென்னல்.

(வேறு.)

உத்தரமுகமாயாசனத்திருந்தே
 யுயர்குருபதமலர் தொழுது
முத்திரையனுபவ சாம்பவியினைப்
 பொருந்தியே மௌன மாமந்நிலைவழாமல்
சித்திரதீபமேபோலசைவறாமல்
 சிந்தைதன்னலைவறுப்பவனே
அத்தனடிகளை யடைவனென்றுரைக்கு
 மன்னுமாகம மெல்லா மியம்பிடுந்தே.

(இ-ள்) வடதிசைமுகமாகி ஆசனத்திலிருந்து உயர்ந்த ஞானாசிரியருடைய சரணாரவிந்தங்களை வணங்கிச் சாம்பவியென்னும் முத்திரையைப்பொருந்தி மவுனமாகிய அந்த நிலையில் வழுவுதலில்லாமல் சித்திரத்திலெழுதிய தீபத்தைப்போல அசைவில்லாமலிருந்து மனத்தினுடைய சலிப்பை அறுக்கத்தக்கவனே பரமசிவனுடைய திருவடிகளை அடைவானென்று பெருமைபொருந்திய ஆகமங்களெல்லாம் எடுத்துச் சொல்லும் எ-று. ஏ-ஏ-ஏ-அசைகள்.

(இ-ம்.) சித்தமசைவற இருந்த ஞானநிஷ்டாபரனே சிவனென்று வேதாகமங்கள் சொல்லுமென்பதாம்.

இதற்குப்பிரமாணம் (பஞ்சாட்சரப் பதிபசுவிளக்கம்) சித்தஞ் சிவத்தோடொடுக்கிச்சிவமான, முத்தன்சிவனெனை மொழுந்திடமாக மஞ், சத்தியசீவன் சங்கரனென்றே, குற்றமிறைன்மறை கூறும் வகுத்தே-என்பதனாற்காண்க.

(பு.ம்.) நிஷ்டையிலிருக்கு மொருவனைப்பார்த்து இப்பூலோகத்தார் இவன் நிஷ்டாபரனுகி யிருக்கின்றானென்று அருமையாகப் புகழ்ந்து கூறுவதைத் தன்செவியிற் கேட்டிருந்தும்- தனதாத்மசொரூபத்தை அறிகின்ற அறிவைப்பெற்ற இவன் இனி நம்மைப்போலாவனு வென்று நாள்தோறும் உள்ளத்தின்கண் உருகின்ற சுபாவசீலத்தையுடைய ஞானசிரியர், அந்நிஷ்டையைப் பெரும்பாலு முக்கியமென்று நினைத்து அதில் துரியமாய் நின்று சாதனவருத்தமடையாமல் யிருக்கிவிட்டானே யென்று இரங்குவரொன்பார், இருந்தான் சமாதிபோலென்றே யிந்த வுலகோரியம்பவுங் கேட்டிருந்துஞ், சமாதிதனிலுழையா தென்றேனென்றும், சின்மாத்திர நிலையில் அதிநுண்மை அறிவினுஞ்சென்று விளங்குங்காலையி் அங்கங்கு ஜனிக்கின்ற அறிவின்மையை விட்டொழிந்து போறிவோடு கலந்தொன்றாக வேறு தோன்றாமலிருந்தவனே சர்வானந்தத்துக்கும் மேலாகிய நிரதிசயானந்தியென்பார். சமாதிதனிலையிலிருந்தே யிலாமைதனை நீக்கியிருந்தானவனே யிருந்தானே யின்பமளவிலின்பத்தே என்றுங்கூறினார்.

(இ-ம்.) பிரம்மநிஷ்டையைக் கைக்கொள்வோன் வருத்தமுற்றுச் சாதனஞ்செய்து அத்வைத அபரோக்ஷானுபவ சாக்ஷாத்காரத்தில் விளங்கவேண்டுமென்பதாம்.

ஒருவன் நிஷ்டையிலிருக்கப்பெற்றும் அதன்கண் உழையாமலிருத்த லென்பதற்குப் பிரமாணம். (திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி.) கிடைத்தபொருள்காத் திருக்கக்கிடைத்தல வென்றயர்வார் போற், படைத்த நினதருள்பெற்றும் பெற்றிலன்போற்பரிவுற்றேன், மூடைத்தலையிற் பலிகொள்ளுமுகலிங்கா முகிழ்த்தநிலா, சடைத்தலையாய் நின்மாயமியானுணருந்தரத்ததோ. எ-ம். (திருவாசகம்.) செய்வதறியாச் சிறுநாயேன் செம்பொற்பாத மலர்காணு, பொய்யர்பெறும் பேறத்தனையும் பெறுதற்குறியேன் பொய்யிலா, மெய்யர்வெறியார்

மலர்ப்பாத மேவக்கண்டுங் கேட்டிருந்தும், பொய்யனேனுண்டுண்டுத் தின் றிருப்பதானேனென்போரேறே-எ-ம். வரும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

நிஷ்டையில் யாவும்மிறக்கப் பெற்றவனுக்குப் பேரின்ப போக முண்டென்பதற்குப் பிரமாணம். (கடவுள்தாதி.) திறந்தேயெடுக்கச் செகமாய் கைமோகத்திரைமருட்டி, மறந்தேவிடுவஞ்சநெஞ்சகமேமலை யேறவென்றாற், பறந்தேவிழவந்திமோ பந்தபூதச்சுமையுங்கொண்டே, பிறந்தேயெடுக்க வல்லார்க்கல்ல வாவெவ்வும் வான்சுவையே, என்பத னாற்காண்க.

(அ-கை.) ஞானசாதகனானுஷ்டிக்கும் விதிகளும் சாத்தியனது அனுபவமு மிவையெனல்.

வேறு.

அருந்துபோசனமுப் பாகியாநீரு
மதுவினிலும்பாதியதாகப்
பொழுதுநாளொன்றுக்கொரு
பொருதருந்தல்புரிகமற்றெவ்விடத்தினுந்தான்
இருந்திடினும்பின்னெழுகினும்புவிமீ
தேகினுமாதர்கடம்மைப்
பரிந்துகூடினு மெய்ஞ்ஞான
முத்திரையிற்படிவதுயோகிதன்பரிசே.

(இ-ள்.) (ஞானசாதகன்.) உண்ணத்தக்கபோசனம் அரைவயிறு கவும் ஜலம் அதிற்பாதியாகவும் (சாதனத்திலிருக்கிறநாளில்.) நாளொன்றுக்கு வொருபொழுது போஜனஞ் செய்யக்கடவன், வேறேயெந்த இடத்தில்தானிருந்தாலும் பின்னர் எழுந்து நின்றாலும் உலகத்தின்

தும் விண்போன் மிகநொய்தாஞேர், அகமெனவின்றிச் செயல்கள் செய்தாலுந்தவிர்ந்தாலு மழுத்தமற்ருேர், சகநெறிகள் செய்திடினு மன்னியர்போற்கண்டுகுளிர் தன்மைசான்ருேர், திகழ்மனமுநினைவு மிருத்துஞ் சிறிதுமில்லாதோர் சீவன்முத்தர்-எ-ம். வரும் - மற்றும் வருவனவற்ருேர் காண்க.

(அ-கை.) ஞானசாதகர்க்குத் தசநாதங்களும் உதிக்குமெனல். இத்திரமானயோகசாதனையிலிருந்து சாதிப்பவர் தமக்குச், சுத்தமா நாதத்தொனிகளும் பலவாத் தோன்றிடுமென்கிணிகடன்மேகம், மத்தளம் பேரியா ழொலிசிலம்பு வளையளிதாளமென்றுமையாட், தத்தனு மொழிந்தா னன்றியுமுராவோ ராய்ந்தெடுத்துரைத்தனயன்னே,

(இ-ள்.) இத்தன்மையான சிவயோகநிஷ்டையிலிருந்து சாத னஞ்செய்பவர்களுக்கு-கண்டா- சமுத்திரம்- மேகம்-மத்தளம்-பேரிகை-வீணை ஒலிக்கின்றசிலம்பு-சங்கு-வண்டு-கைத்தாளம்-ஆகிய இவைக ளின் சப்தத்தைப்போலப் பரிசுத்தமாகிய நாதங்களும் பலவாருக உண் டாகுமென்று தேவியாருக்குச் சுவாமியும் உபதேசித்தார். அல்லாம லும் அறிவுடையோர்களும் (பலநூல்களிலும்.) ஆராய்ந்து எடுத்துச் சொல்லியிருக்கின்ருர்கள்-எ-று. அன்று-எ-அசைகள்.

(ப-ம்.) தந்நிலையை அசைவற உணர்ந்தறிகின்றதாகிய கூடஸ்த சைதன்யசாக்ஷியென்னுஞ் சுமுகத்தில் தசநாதங்களும உதித்தொலிதமாய் முழங்குமென்றும், அந்நிலைவிட்டுப் பகிர்முகமாய்ப் பிரகாசிக்குங் காலை யிலும் தங்கள் சுவானுபவத்திற் கண்டபடி அத்தசநாதங்களுந் தாமே சப்தித்து விளங்காநிற்குமென்றுங் கூறுவார். யோகசாதனையிலிருந்து சாதிப்பவர் தமக்குச் சுத்தமாநாதத்தொனிகளும் பலவாத்தோன்றிடு மென்ருர்.

(இ-ம்.) ஞானசாதனத்தில் விளங்குகிறவர்களுக்கேயன்றி ஏனை யோர்க்கு நாதானந்த முதியாதென்பதாம்.

இதற்குப்பிரமாணம். (கடவுளந்தாதி,) அன்பருக்கன்பு தரும் பரஞ்சோதியை யாத்துமத்தோ, டென்புருகக்கலந் துள்ளேயுருகி யிரவு பகல், தம்புருவீணை சாமண்டலத்தொனி தாளதித்தி, மின்பெருங் கொலுச்சிங்காரங்கண்டிரு மெய்ம்மகிழ்ந்தே. (அன்றியும்) சிலம்பொலி யப்புற மிப்பாற்சிலம்பொலி தேவர்சபை, யலம்பொலியோசை யது வெகுநாத மதற்குமப்பால், வலம்புரிசுற்றிபவாசலுமுச்சிவழிதெரிந் தாற், புலம்பொலியாடலும் பாடலுமாகிய பூரணமே-எ-ம். (ஞானிகள் நிலைமை.) கந்தமுதலைம்புலனையடக்கிநாட்டமண் கருத்தமைத்துச்சாம்பவி நோக்கதனைமேவிச், சிந்தைபுறத்தான் சரிக்குமிடங்கன்னிற் செறிந் திடையாதிருந்திலையி னிட்டைகூட, வர்தெழும்புமணிசலதிசிலம்பு சங்கு வண்டிசையாங் குழல்பேரிமுழக்கங்காண, இந்தவகைசிவயோ கத்திருப்பான் ஞானியினியவர்க்குப் பிறவிபுறண்டென்னலாமோ-எ-ம். (அகஸ்திபமுனிவர்.) வையந்சலமங்கி கால்வான்பலவுயிர் வான்முடியோ, டெப்யும்பாமுதற் சார்வதெல்லா மெம்பிரான்முருகா, தெய்யனநின்றுநின் றட்சிலம்போசைத் திருவிளையாட், டையநின்னங் கயமென்னங்கூமாய்நின்ற வானந்தமே-எ-ம். (திருவாசகம்.) என்னணி யார்முலை யாகமளைந்துட னின்புறமாகாதே, யெல்லையின்மாக்கருணைக் கடலின்றினி நாடுநமாகாதே, நன்மணிநாத முழங்கியென்னுள்ளுற நண்ணுவதாகாதே.-எ-ம். (தாயுமானசுவாமிகள்.) கெஜதுரகமுதலான சதுரங்கமனமாதி சேனவிபிநிசைந்துநிற்பக், கொடிகொண்டதலமாறு மும்மண்டலத்திலுங் "கிள்ளாக்குசெல்லமிக்க," தெசவிதமாய்நின்ற நாதங்களோலிடச் சிங்காசனுதிபர்களாய்த், திக்குத்திகந்தமும் பூரண மதிக்குடை நிகழ்ந்திடவசந்தகால, மிசையமலர்மீதுறை மணம்போல வானந்த மிதயமேற்கொள்ளநம்வண்ண, மென்றைக்குமழியாத சிவராஜ யோகமா யிந்திராதிதேவர்களெலாம், விஜயஜயஜயவென்ன வாசி சொலவேசொலு விருக்குநம்பெருமையெளிதோ, வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற வித்தகச்சித்தர்கணமே - எ - ம்.) வாதவூரார் புராணம்.) முக்குணம்புலனைந்துடனடக்கி மூலவாயுவையெழுப் பிரு

வழியைச், சிக்கெனும்படியடைத்தொருவழியைத் திறந்துதாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த், தக்கவஞ்செழுத்தோ டொழுத்தருவாந் தன்மை கண்டருடரும்பெருவெளிக்கே, புக்கெழுந்தினரோமதருட் பெறுவார் புலியில்வேட்டுவனெடுத்த மென்புழுப்போ-எ-ம். வரும்-மற்றும்வருவனவற்றுள் காண்க. (24)

(அ-கை.) தமதுள்ளேதோன்றும் நாதவசப்படாது தம்மை அறி பவர்க்கு மயக்கமின்றென்பதையும் அந்நாதவசமுற்று மயக்கமடைந்த வர் அதில் நின்றும் நீங்குப் வகை சொல்லுதுமென்பதையுங் கூறல்.

ஒத்தவந்நாதந் தோன்றும் பொழுதே
பொலியிலு[illegible] படப்போல்
தத்துவஞ்சகல [illegible]
தன்னையறிபவர்க்கில் மூடம்
இத்திறமலா [illegible]
விம்பர்கேவல [illegible]
மத்தியத்தம் [illegible]
வகையதற [illegible]

(இ-ள்.) ஒற்றுமைப்பட்ட (சுவாநுபூதியில்) அந்நாதமுண்டான காலத்திலேயே புல்லாங்குழலின் ஓசையிலே ஒங்கிமயங்குகின்ற சர்ப்பத் தைப்போலத் தத்துவங்கள (வேறுபாடின்றி ஒற்றுமைப்பட்டு உதயமா கும். அப்போது அவைகளின் தொழிலாகிய) சகல கேவலங்கள் நீங் கிப்போகத் தனதாத்மசொரூபத்தை அறிகின்றவர்களுக்கு அஞ்ஞான மில்லையாம் இவ்வண்ணமான (அனுபவச்செய்கையை) அறிதலல்லா மல் இங்ஙனஞ் சகலத்திலும் பொருந்தி கேவலத்திலுஞ் சேர்ந்திருக்க நடுவிலே அந்த அஞ்ஞானமும் பொருந்துமாயின் அம்மூடத்தன்மை நீங்குவதற்கு வகைசொல்வோம்-எ-று. படம் - ஆகுபெயர்-அன்று-ஏ-அசைகள்.

(ப-ம்.) சிற்சபையிலெழுகின்ற தசநாடிகளென்பார். தத்துவ மென்றும். அத்தசநாடிகளா லுண்டாகின்ற சத்தங்களையுணர்தலென் பார். சகலமென்றும். அந்நாதங்களொடுங்குகையில் அவற்றின்பின் செல்லுமனமென்பார். கேவலமென்றுங் கூறினர்

(இ-ம்.) தசநாதங்களுந் தன்னைத்தவிர வேறின்றென்று சும்மா நிலைபெற்றவனே தன்னையறிந்தவனென்றும், அந்நாதங்களை யெதி ரிட்டறிபவனே மூடத்தன்மையுடையவனென்றும் தெரிவித்ததாம்.

மனம் நாதவழிச் செல்லாமல் துரியத்தில் நிற்கின் முத்தி பெறுவரென்பதற்குப் பிரமாணம். (கடவுளந்தாதி) மாறிநின்றாடிய வான்பொருளாடி மணியசைந்து, மீறிநின்றுணர்ந்து நிர்த்தத்திலோசை விளங்கிமனைந், தேறிநின்றுற்பானலைப்படுமென்னுந்தேனமுத, மூறி நின்றின்பாசர்க்குருவாய் நிறந்தண் அவர்க்கே-எ-ம். (தாயுமானசுவாமி கள்.) தாராதவருளெலாந் தந்தருள் மௌனியாய்த் தாயனையகருணை காட்டித், தாளிலென்முடிசூட்டி யறிவிற்சமாதியெ சாசுவிதசம்பிர தாயம், சூரியமந்திரமு முனைந்துமன்முகதிநிலையொன்றே டான் டெனும, வொளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா மொலியெனவு முணர்வுறாமல், பாராது பார்ப்பதே யேது சாதனமற்ற பரமவனுபூதி வாய்க்கும், பண்பென்றுணர்த்தியது பாராமலர்நிலை பதி ந்தநின் பழவடியர்தம், சீராயிருக்க நினதருள்வேண்டுமையனே சித்தா ர்த்தமுத்திமுதலே, சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே சின்மயானந்த குருவே-எ-ம். வரும்-மற்றும் வருவனவற்றுற்காண்க.

நாதானந்த முந்தானே யென்பதற்குப் பிரமாணம். (ரிபுகீதை.) அமலசின்மாத்தி சொரூபமாகுஞ் சித்துமறிவரிய நிரங்குசனுமுளக்கு ளானு, மமலமகல்நிற்கிடமா கானுமொன்றாய் முதிர்ந்தருளுமேகமே வாதவிதந்தான், விமலபரப்பிரமமெனும் பூசமற்றவிரிகண்டா மணிகரு,

நாதமுமாகி, நிமலசச்சிதானந்தமாகுவானுநினையலால் வேறுமுண்டோ நீயேயாவாய். என்பதனாற்காண்க.

(அ-கை.) அம்மூடநீங்கு முபாயமிவையெனல்.

துன்னியவந்தமூட நீங்கிடமெய்த்தூயசற்
குருவினைத்தொழுதே
மன்னுகாரணமாமனுவினைப்பெற்று
மனம்விடயத்துறாதிருந்தே
அந்நிலைப்பதினாயிரந்தரஞ்செபிக்கி
னகன்றிடுமகன்றிடாதுறுமேற்
பின்னுமச்செபத்தைப்பொருந்தபத்தாண்டளவும்
பெட்புடன்செபிக்கநீங்குமே.

(இ-ள்.) நெருங்கிய அந்த அறியாமை நீங்கும்படி உண்மையாகிய பரிசுத்தம்பொருந்திய ஞானாசிரியரை வணங்கி நிலைபெற்றகாரண பஞ்சாக்ஷரமாகிய மந்திரத்தைப்பெற்று மனத்தைவிஷயத்திற்பொருந்த விடாமலிருந்து அந்நிலைப்படி பதினாயிரந்தரஞ்செபித்தால் அவ்வறியாமை நீங்கும் அங்ஙனம் நீங்காமல் அவ்வறியாமை தங்குமாயின் மறுபடியும் அச்செபத்தைப் பத்துவருஷம் வரையிலும் அன்போடுஞ் செபஞ்செய்ய நீங்கிப்போகும்-எ-று. ஏ-ஏ-ஏ-அசைகள்.

(இ-ம்.) அஞ்ஞானம் நீங்கிப்போமாறு முத்தி பஞ்சாக்ஷரத்தைத் தைத் தியானிக்கவேண்டுமென்பதாம். (26)

(அ-கை.) மூடத்தன்மையுடையவர்கள் சதாஸ்மரணத்தினால் அடுத்த சநநத்திலும் பரிபாகிகள் எடுத்த சநநத்திலும் முத்தி அடைவார்களெனல்.

இந்தமெய்சசெபமுங்குருபதத்தன்பு
மிடைவிடாதேயுறுந்தறுவரேல்
வந்திடுஞ்சநநந்தனிலேயுறுவார்
மன்னுமெஞ்ஞானநிட்டையினை
உந்துமம்மூடமிலாதவர்தம்மை
யுத்தமபக்குவரெனலாம்
முந்துசற்குரவனல்குமுத்திரையான்
மோனவீடுவர்களன்றே.

இ-ள்.) இந்த உண்மையான செபத்தையும் ஆசிரியருடைய திருவடிகளில் அன்பையும் இடைவிடாமற் செய்வாராயின் மறுசநநத்தில் நிலைபெற்றசத்தியமாகியசிவயோக நிஷ்டையைப் பெற்றுக்கொள்ளுவார்கள். (அநந்தசநநத்திலேறி வந்தவாசனைகளாற்.) செலுத்தப்பட்ட அந்த மூடத்தன்மை இல்லாதவர்களைச் சற்கருமபரிபாகிகளென்று சொல்லலாம் தலைமைபெற்ற ஞானாசிரியர் அனுக்கிரகிக்கின்ற சின்முத்திரையினும் அப்பரிபாகிகள் (இச்சநநத்திலேயே) மௌனநிலையாகி மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்ளுவார்கள்-எ-று. ஏ-ஏ-அன்று-ஏ-இந்நான்கும் அசைகள்.

இ-ம்.) வெளிப்படை. (27)

(அ-கை.) சுவானுபூதியிற் றோன்றுகின்ற சிற்பிரகாசந் துரியாதீதப் பொருளன்றெனல்.

இயம்புநன்னிலை யினிட்டைசாதிபோர்க்
கின்னொளிகோடிகளொன்றாய்
வயங்குவபோலவகக்கணிற்றோன்று
மற்றதும்பொருளலவென்றே

தியங்குகிறவெந்தை யமைக்குரைத்திடவே
தேவிகேட்டதனைநீதெளிய
நயம்பெறப்புகறி யென்னவேவினவ
நாதனுந்தெளிவுறநவிலும்.

(இ-ள்.) சொல்லுகின்ற நன்மையாகிய நிலையில்நின்று நிஷ்டையைச் சாதிக்கின்றவர்களுடைய உளத்தின்கண் கோடிசூரியர்கள் ஒன்றாகக்கூடி பிரகாசிப்பதுபோல இனியபிரகாசமுண்டாகும் அதுவும் வஸ்துவல்லவென்று எமது ஆண்டவராகிய பரமசிவனார் தேவியாருக்குச்சொல்ல அதையத்தேவியார்கேட்டு மயக்கமுற்று, அந்தவஸ்துவை நான் தெளிவாக அறியும்படி தேவரீர் நயம்பொருந்தச் சொல்லவேண்டுமென்று கேட்கப் பரமசிவனாருந் தெளிவுபொருந்தும்படிச் சொல்லுவார்-எ-று. மற்று-ஏ-ஏ-ஏ-இந்நான்கும் அசைகள்.

(கு-ம்.) பிரம்ம நிஷ்டாசாதனத்தைப் பரிபாலனம் பண்ணுகின்றவர்களது கருத்து உள்ளே அடங்க அடங்கத் தோன்றுகின்ற சிவதரிசனத்துக்கு அதிஷ்டானமாகிய பொருள் வேறே ஒன்றுண்டென்பதாம்.

உளத்தின்கண் அருட்பிரகாசந் தோன்றுமென்பதற்குப் பிரமாணம். (பத்திராசிரியர்.) கடலிலொளித்திருந்த கனலெழுந்துவந்தாற்போல, வுடலிலொளித்தசிவ மொளிசெய்வதெக்காலம்-எ-ம். (காரைக்காலம்மையந்தாதி.) காண்பார்க்குங்காணலாந் தன்மையனைக்கைதொழுது, காண்பார்க்குங்காணலாங் காதலாற்-காண்பார்க்குச், சோதியாய்ச்சிந்தையுள்ளே தோன்றுமேதொல்லுலகுக், காதியாய்நின்ற வரன்-எ-ம். வரும்-மற்றும் வருவன வற்றுட்காண்க, (82)

(அ-கை.) சத்தநீங்கலாக ஞானவிஷயங்கள் சுவானுபவத்திலொடுங்குமெனல்.

இலங்கியமோன முத்திரையதனி
லிருந்திடும்பொழுதிலைம் புலனில்
நலங்கிளர்மூன்று புலனொடுங்கிடுதா
னவிலுந்தமையவை பெயர்சுவையில்
துலையவெயரூபரசகந்த
மென்றுரைப்பார்மற்றிரண்டி
புலனதிற்பரிசந் தரிசனந்தோன்றிற்
போய்டுமென்பர்புண்ணியரே.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற மௌனநிலையாகிய சின்முத்திரையில் இருக்கின்ற காலத்தில் சத்தாதி விஷயங்கள் ஐந்தில் நன்மையாய் விளங்குகின்ற மூன்றுவிஷயங்கள் அடங்கும் அங்ஙனஞ்சொல்வதாகிய அம்மூன்றும் சுவையென்றுஞ் சொல்லுவோம் ஒளிர்கின்ற நல்லரூப ரசகந்தமென்றுரைப்பார்கள், மற்றிரண்டுவிஷயங்களில் பரிசமானது பிரம்மதரிசனம் உதயமாயின் ஒடுங்கிப்போமென்று புண்ணியவான்கள் சொல்லுவார்கள் எ-று. ஆ-ம்-அசைகள்.

(ப-ம்.) விஷயங்களனைத்திலுந் தேர்ந்தமனமானது சமஸ்தமுந் தானாய் விளங்கிய சின்முத்திரையென்னும் சற்குருஞானத்திற் சரிதை யாகிய முதற்பஞ்சவர்ணசுந்தரம்பொருந்திய பஞ்சாட்சரநிலையிற் புகுந்து ஊடுருவித் தசநாதங்களும் முழங்குவதற்குக்காரணமாகிய சதாசிவத்தை யுந் தாண்டி, ஞானத்திற்கிரியையாகிய புருஷாகாரநிலையென்ற திரு வருட் சத்தியினது ஆதரிக்கையின் மகிமையைக்கண்டு அந்நிலையில் அசைவறநிற்குங்காலையில் அங்ஙனம் அநுபவத்திற்குரிய துரியவிஷ யங்கள் ஐந்தில் காட்சியாகிய அருட்டரிசனமும், பேரின்பமாகிய சுவை யுஞ்சுகமாகிய வாசனையும் ஒடுங்குமென்பார். இலங்கியமோனமுத்திரை யதனிலிருந்திடும்பொழுது நலங்கிளர்மூன்றுபுலனொடுங்கிடுமென்றும், அத்திருவருட்சத்தினது அருளாலே அதற்குமேல்ஞானத்தில் யோக

மாகிய சொரூப சித்தென்னும் பார்வையான லீலைக்கண்ணாடியிலறிந்த பஞ்சசடையின் அலங்காரத்துள் பரமகாஷ்டை அறிவாய்ச் சென்று சென்று தேய்ந்துதேய்ந்து முத்திசகலமும் முத்திகேவலமும்விட்டுச் சும்மாநிற்கச் சுயஞ்சோதிதானே மேலிட்டுவிளைந்து அகண்டாகார நிலைபொருந்துங்காலையில் ஞானத்தில் ஞானமாகியகூடஸ்த பிரம்மைக்கியமென்னுஞ் சிதாகாசமாகியசுபாவம் உதயமாகாததற்கு முன்னிருந்த பிரமானந்தகோஷநீங்கலாகத் தானேதானாகிய மெய்ப்போதமாகிய பரிசமும் ஒடுங்கிச் சின்மாத்திரமாய் விளங்குமென்று அருளிறைவடிவங் கொண்ட அடிகளால் கூறப்படுமென்பார். பரிசந் தரிசனந் தோன்றிற் போயிடுமென்பர் புண்ணியரே என்றுங் கூறினார்.

(இ-ம்.) சரிதையாதியாயவரும் நான்கில் நன்னான்காகிய பதினாறு சோபனங்களில் காரியப்பட்ட பனிரெண்டு படிகளையும்நீக்கி மேல் நின்ற காரணத்தின்பயனாகிய நான்குபதங்களுள் மூன்றுபதங்களினுடைய இலக்கணங்களை விதித்துச் சொற்றனனென்பதாய்,

எனவே ஞானத்தில் ஞானமாகிய பிரம்மவரிட்ட பதத்தில்மேற் சொல்லிய பிரம்மானந்தகோஷ மொடுங்குமென்பதே துணிபெனப் பெற்றாம்.

ஞானத்திற் சரிதைநிலை யீதென்பதற்குப்பிரமாணம் (திருவாசகம்.) உன்னற்கரியதிருவுத்தரகோசமங்கை, மன்னிப்பொலிந்திருந்த மாமறையோன்றன்புகழே-பன்னிப்பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பா, னன்னத்தின்மேலேறி யாடுமணிமயில்போ, லென்னத்தனென்னையுமாட் கொண்டானெழில்பாடிப், பொன்னொத்தபூண்முலையீர் பொன்னூசலாடாமோ (அன்றியும்.) நெக்குநெக்குள்ளுருகி நின்றுமிருந்துங்கிடந்து மெழுந்து, நக்குமழுந்தொழுதும் வாழ்த்திநானாவிதத்தாற் கூத்துநவிற்றிச், செக்கர்போலுந்திருமேனி திகழநோக்கிச் சிலிர் சிலிர்த்துப், புக்குநிற்பதென்று கொல்லோவென்பொல்லா மணியைப்

புணர்ந்தே-எ-ம், (சாந்தலிங்கசுவாமிகள்.) போற்றிநீறணிந்து ருத்திர சாதனம்பூண்டிடைந்தெழுத்துள்ளே, சாற்றிநீகுருவாதி மூவுருவையுந் தாழ்ந்திறைஞ்சிமலைவசெய்தான், மாற்றலாம் பிறப்பிறப்பினை நெஞ்சமே மன்றுளாடிய தாளுநம், சோற்றமுள்ளொளிக்குள் ளொளியாயதைத் தொழுது வாழ்தலுமாமே-எ-ம். (அகஸ்தியமுனிவர்) அண்டத்திலுள்ளதுபிண்டத்திலுமுண்டவ்வாறெழுத்தும், பண்டித்ததற்சநகோடி மகாசித்துபண்ணுதற்காய்த, குண்டத்துடனுயிராபரைசெய்த ருத்திரத் தாற்; கண்டிந்தமசியோபாசனையுருக்காட்டியதே-எ-ம். (பாலையானந்த சுவாமிகள்.) விந்துவிருந்த தலந்தனிலே-குரு-நந்தியிருந்தார் கொலுவாகச், சிந்தை தெளிந்து பரம்பரைவைத்தா-லந்தச்-சீமானைக் காணலா ஞானப்பெண்ணே எ-ம். (சச்சிதானந்தவிளக்கம்.) முச்சுடராகியொன் றாய் முடிந்தசோதீதுபாதம், அஞ்சுதனயுறும்காறு வகண்டமாயளவிலாத-சச்சிதானந்தஞான சதாசிவகுருவைப்பாட, மெய்ச்சுடருதயமான விளக்கொளி புண்ணைச்சேர்வாம். (அன்றியும்.) திருமருவுசோதியாய்க பிரபைமெயாளிவீசியே தெருவிலலாருபாசைபாதிலே, திரிகோணசுத்தியா யமுதகலசத்திலே தேனமுதமுறுசுவைநீர், வருமொருவர்காணவே திருகு சுழிகேணியில் வாவுசிறுவாசமேறளிவு, மயிர்ப்பாலமீதினி னேறப்பாறு தாவியே வந்தவழிகண்டதேவரோ, அருவுருவிலாகாச மிருசாணகீதமே யனேகசிவ சோதிநடனம், அபயவாவுபயசிவ சமயகுருநாதனே யத்து விதமுத்திபுரிவாய், தருமவுனசுழிமுனையி லணுவளவுகவனமே தரல் வேண்டுமிதுசமயமே-எ-ம். (திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி.) ஆண்டருளுவானை யல்லற்பிறவியறுப்பானை, வேண்டும்பதவிதருவானை வெளிவீட்டில்பமருப்பானைத், தாண்டல்செய்யாமணிவிளக்கைத் தொழின்மூன்றியற்றுந் தொல்லோனைக், காண்டற்கரியபேரொளியைக் களாவிநிழற்கீழ்க்கண்டேனே-எ-ம். (உடலறிவிளக்கம்.) நந்திகொலுவிருந்தவிடந்தானுமங்கே நற்கமலமாயிரத்தெட்டிதழுமங்கே; அந்திசந்தி பூசையனுட்டானமங்கே யறுத்தடைத்தவாசல்சிவயோகமங்கே. மந்திர

முஞ் சாத்திரமும் பிறந்ததங்கே யனுநீதிகுலவரவிதானுமங்கே; செந்தியொளி சிவன்சிங்காதன மும்மங்கே சிறந்தவிருடாதமடையாள முறைத்தோமே-எ-ம். (வாதவூரர்புராணம்.) இடம்படு முடம்பின் மூலத்தெழுந்த நற்சுழுனைநாடி, யுடன்கிள ரோலியோயாகி யொளியிலஞ்செழுந்து மொன்றாய்; நெடுங்குழலாலையாகி நிலவுமவ்வோசைபோயுங், கடங்கியவிடமேயென்று மமாடுமம்பலதாகும். (அன்றியும்.) எண்டரும்பூதமைந்து மெய்தியநாடிமூன்று; மண்டலமூன்றுமாசி மன்னியபுணர்ப்பினுலே, பிண்டமுமண்டமாகும் பிரமமேலுடைவராகக்; கண்டவர்நின்றவாறு மிரண்டினுங்காணலாகும்-எ-ம். (சர்நிதிமுறை.) விதையாயிருக்குமைந்தெழுத்தும் வேதாகமமுழுத்தமிழும் விளங்குஞ்சரிதாகிகணென்கும் வீருகியமெய்ச்சிமைதமுஞ், சுவைகயாதரிக்குந் திருநீருஞ் சோதிநயனத்திருமணியுந் துகளற்பத்திவிதிநெறியின் மொருட்புஞ்செடிதீர்மெய்யடியார்; நிதையாலயத்தைட பிரியாதங் கிருபர்ஞானமணிவிளக்கு மிலங்குமவுணந்துளும்பாத யின்பவௗனுஞ்சக்தமுஞ், சிதைதாகளிக்கு மோரிதையேசிறியேஞ்சிற்றில்சிதையேலே, தேருர்வீதிப்போருரா சிறியேஞ்சிற்றில்சிதையேலே-எ-ம். (பாரதம்) ஐவகைப்பொருளுநான்கு கரணமுங் குணங்கள்மூன்றுஞ். செய்வினையிரண்டுமொன்றி யாவருந்திகைப்பநின்ற, பொய்யிருளகலஞானப் பொருட்கதிர்விரித்தபுத்தேள், கைவளராழிச்செங்கட் கண்ணனைக்கண்ணுள்வைப்பாம்-எ-ம். (திருவாய்மொழி) ஏகமூர்த்தியிருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி, யாகியைந்து பூதமாயிரண்டுசுடராயுருவாகி. நாகமேறிநடுக்கடலுட் டுயின்றநாராயணனேயுன், னுகமுற்றுமகத்தடக்கி யாவியல்லன்மாய்த்ததே-எ-ம். (தேவாரம்.) மண்ணுகிவிண்ணுகிமலையுமாகி வயிரமுமாய் மாணிக்கந்தானேயாகிக், கண்ணுகிக்கண்ணுக்கோர்மணியுமாகிக் கலையாகிக்கலைஞானந் தானேயாகிப், பெண்ணுகிப்பெண்ணுக்கோ ராணுமாகிப் பிரளயத்துக்கப்பாலோரண்டமாகி, யெண்ணுகியெண்ணுக்கோ ரெழுத்துமாகி யெழுஞ்சுடராயெம்மடிக ணின்றவாறே. (அன்றியும்.) நற்பதத்தார்நற்பதமே

ஞானமூர்த்தி நலஞ்சுடரே நால்வேதத் தப்பாலின்ற, சொற்பதத்தாற்
சொற்பதமுங் கடந்துநின்ற சொலற்கரிய சூழலாயது வுன்றன்மை, நிற்
பிறிதொத்து நிலையிலா நெஞ்சந்தன்னு ளிலயாதுபுலாலுடம்பே புகுந்து
நின்ற, கற்பகமே யானுன்னை விடுவேனல்லேன் கனகமாமணி நிறத்
தெங்கடவுளானே. (அன்றியும்) திருவே யென்செல்வமே தேனேவா
னோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க, குருவேயென் கற்
பகமே கண்ணேகண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்காவாய், அரு
வாய் வல்வினைநோ யடையாவண்ண மாயவெண்டிசைக்கு மாதியுமா
னாயே. எ ம். (திருநாவுக்கரசர்.) ஆரங்கம் புலியூராய் நடுவாசி, சீரங்கஞ்
சிற்சபை சிவமானம் நூற்றுக்கு, போதுசுகம்பெற்ற பேதத்திரு நடனம்,
வோங்குஞ் சொல்வாய் விழுவார் நோதில் எ ம். (தத்துவராயசுவாமிகள்
கலிமடல்.) அறிவுருவமுடைய நயம்பொருந்த, வறிவுயமோவொளி
மணிபோ, முத்தி சேறுமோ வெனதுநிலை. (அன்றியும்) தெருவுதொறு
முலவுதென்றில்லைச் சேர்ந்தகுருமணியைக், காவத்தைக் கோயிலாக்
கொண்ட வருமருந்தை எ ம். (ஔவைக்குறள்) சுந்தரச்சோதி துலங்கு
மிடமது, மந்திரச்சக்கரமுமாம். (அன்றியும்) தற்பரமான சதாசிவத்தோ
டொன்றி, லுற்றறிவில்லையுயிர்க்கு எ ம். (தாயுமானசுவாமிகள்.) சரு
குசலாக்ஷணிக ளொருகோடி பல்லாற் சகோரபக்ஷிகள்போலவே, தவள
நிலவொழுகமிர்த தாரைபுண்டழியாத தன்மையானந்தகோடி, இரு
வினைகளற்றிரவு பகலென்பதறியாத வேதாந்தமோனஞான,
நிஷ்டையர்கோடி மணிமந்திர சித்திநிலை பெய்தினர்கள் கோடிசூழக்
குருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின்மிசை கொலுவீற்றிருக்கு நின்
னைக், கும்பிட்டனந்த முறைதெண்டனிட்டென் மனக்குறையெலாந்
தீரும்வண்ணம், மருமலரெடுத்துனிரு தாளைபர்ச்சிக்கவெனை வாவென்
றழைப்ப தெந்நாள், மந்திரகுருவேயோக தந்திரகுருவேமூலன் மரபில்
வரு மௌனகுருவே. (அன்றியும்) கண்ணுங்கண்ணிற் கலந்தகண்ணே
யுனைச், சேணும்பாருந் திரிபவர்காண்பரோ, ஆணும்பெண்ணுமது

வெனும்பான்மையு, பூணுங்கோலம் பொருந்தியுணிற்கவே, (அன்றி யும்.) குன்றிடாத கொழுஞ்சுடரேமணி, மன்றுளாடியமாணிக்கமேயுனை யன்றியார்துணை யாருறவாகதி, யென்று நீயெனக் கின்னருள் செய் வதே எ ம். (சிவப்பிரகாசம்) கண்ணொளிவிளக்களித்துக் காட்டிடு மென்னின்முன்னங், கண்ணொளியொன்றாமின்றுய் விளக்கொளிகலந்த வற்றைக், கண்ணொளியகலநின்றே கண்டிடும் வேறுகாணுக், கண் ணொளிவிளக்கின்சோதி கலந்திடுங்கருத்தொன்றன்றே எ ம். (சிவவாக் கியர்.) அண்ணலாயநாதியாயநாதிமுன்ன நாதியாய்ப், பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதாகு முன்னெலாங், கண்ணிலாணிசுக்கிலங் கருத்தொடுங்கிநின்றபின், மண்ணுளோரும் வந்தவாறதெங்ஙனே எ ம் (சௌந்தரியந்தாதி.) பயில்போல் திருக்குந் திருமேனி பணியோ ரூயி லோமறைமுடிவோ, வயில்போன்றிருகணருங்கணையோ வருளார்கட லோ யாதுரைக்கேன், வெயிலோ நிலவோ சோதிமின்னல் விளைவோ கனவிற்றுறே, பயில்வோருணது திருவமுலை யுமையோதொகுத்துப் பாடரிதே எ ம். (கடவுளந்தாதி.) மெய்ப்பொருளுச்சிக் குஞ்சிதமாக, விருக்குமப்பா, வைப்பினின் மாணிக்கப் பொக்கிஷமே மணிமாமகுடச், செப்புக்குளேற்றுந் திருவிளக்குள் ளொளிர்பமது, கைப்பொருடன் னினு மெய்ப்பொருளாமது கண்டவர்க்கே எ ம். (மவுனதரிசனம்.) அரசனென்ற மவுனவித்தைராஜயோக மறைகிடேனகார முதலைந்து மூட்ட, நிரமயமாமூலத்தி லிங்கந்தோன்று மிலிங்கமென்ன சுவரூப கந்திமேனி, குருமூலத்தட்டதளம் விரிந்துதோன்றுங் குண்டலிவாய் திறக்குமப்போ கோடிரவிதோன்ற, மாமணியிலமுதக பாடந்திறந்து வமுதமழைவருடிக்கு மருளிலன்றே. (அன்றியும்.) அன்றறியாதாரத் தின் மௌனமூட்ட வங்கங்கேசிவசத்தி வடிவுதோன்ற, நின்றவந்த தலத்திநிற்கும் வன்னந்தோன்று நிராகாரமாம் வாயுசுழியிலேறுங், குன்றுத சுழிமுனையில் மௌனமூட்டக் குலாவுமனத்தாநந்த கீர்த்தங் காணுஞ், சென்றேறி நடனத்தைப்பாருபாரு திருச்சிலம்பினொலிகேட் குஞ்சேர்ந்திகூடே எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

ஞானத்திற்கிரியை பீடென்பதற்குப் பிரமாணம். (திருவாசகம்.) உடையாளுன்றனடுவிருக்கு முடையாளடுவு ணீயிருத்தி, யடியேனடுவு ளிருவீருமிருப்பதானாலடியேனுன், னடியாரடுவுளிருக்கு மருளைப்புரி யாய் பொன்னம்பலத்தெம, முடியாமுதலே யென்கருத்து முடியும்வண் ணமுன்னின்றே எனம். (சவுந்தரியலகரி.) மாதுநின்கருணை ஞான, நித்திரைசெய் மஞ்சநாலு நீலோகாநகநும், வேதமாலுடனுருத்திரன் கனமயேச்சுரன்றலைவிதிதநபே, சதாநுபின்னனுறு கச்சுமானதொரு வுசிதத்துறைசதாசிவனை, நீபகண்டிலவல்லையுன்கிருபை யன்றவே யொருருவிருபமே. (அந்தாதியும்) இழைந்தமையாதிடை யழகுருவுண் முலை யிளவெயில்மேனியிலை, நிழலுசாமரை மணிவடமாடிய நில வெழுபூதியினுள, கலைபெறுதோளியை யழகொழுகாநிறை கருணையி னாமுதைத, தொழுமவர்சிவனடி வர்கரணிநு சுருதியினுளுரையே எனம். (தாயுமானசுவாமிகள்) பூரணிபுராதனி சுமங்கலைசுதந்தரி புராந் தகித்ரயம்பகிபெறிற் புநுகவிவிளங்குசிவ சங்கரி சகஸ்த்ரதள புஷ்ப மிசைவீற்றிருக்கும் நாராணிமனோதீத நாயகிகுணாதீத நாதாந்தசத்தி (யென்றியும்) பூசமொருபூதவான நிதிரியமாம்பேய்கள் புந்திமுதலான பேய்கள், போராடுகோபாதி ராக்ஷசபேய்களொன் போதத்தை யூ[illegible] றித ற, வேதனைவளர்த்திடச் சதுர்வேதவஞ்சன் விதிததானிவல்ல லெல்லாம், வீழும்படிக்குதனை மௌனமந்திராதிக்கிய வித்தையை [illegible] தருள்வையோ, நாதவடிவாகிய மகாமந்திரரூபியே நாதாந்[illegible] வெளியே, நற்சமயமானபயிர் தழைபவருமேகமே ஞானவானந்[illegible] வாதமிடுபரசமயமியாவுக்கு முணர்வரியமகிமைபெறு பெரியபொருளே வரைராஜநற்கிருகண் மணியாயுதித்தமலை வளர்காதலிப் பெண்ணுமையே எனம். (அகஸ்தியமுனிவர்.) ஓங்காரவட்டத்து ளாதாரமாறும்விட் டோங்கிபறி, றீங்காரவட்டத்துளே விந்துநாத முனைச்சுடர்மேற், பாங் காம்பரசிவமாகி யொன்றுபப் பரவெளியின், றுங்காரத்தாண்ட வியுற றெழுத்தாறு முகத்தம்மையே. (அன்றியும்) குண்டலிபார இலக்குமி

பார்வதிகோமளேபூ, மண்டலிசாம்பவி தேவிமனோன்மணி வாகினிப்பிர சண்டலிகாரிய காரியகாரி சடாக்ஷரிமா, விண்டலியாண்பெண் ணிசண் ணுருவாய் நின்ற மின்னொளியே எ ம். (ஔவைக்குறள்.) தற்புருடமா முகந் தன்னிற்றனியிருர், தற்பணமஞ்ஞைஞ்யுள. (அன்றியும்) ஓதியதற் புருடத்தடியொவ்வவே, பேதியாசோதியினை எ ம். (கைவல்யநவநீதம்) உன்முகம்போற்கண்ணாடிச் குள்ளொருமுகங்கண்டாற்போற், சின்மய வடிவின்சாயைச் சித்துபோற் புத்தியோன்று, நின்மலவிருத்தியந்த நிழல்வழியாயுலாவுந், தன்மநன்மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார் எ ம். (சடமெய்ந்நாதி.) பனையிடத்தேயுருத் தோன்றி யொடுங்கும்படி யறிந்தோர். புரையறக்கீறிப் புண்ணுற்றவரோபுத்தி மத்தியிலே, நிரயறவாசைத் திசைதிகையாறிற் றிருக்கறக்க, வரை திருநாதமலேக்குறப்பெண்சோடி வாய்த்திறியே எ ம். (சச்சிதானந்த விளக்கம்) ஆடல்புரி நடனவிருபாதங்கையோத மவதானசிவகோணமா, மருமறையிலெட்டாத திருநடனவிஸ்தார மாலேந்தொரு பாலுமந்தியே, நடவொருதிரிகோண வீடுதருவேகோண கோணமிசை திசைநாளுமே கோதையபிராமியிரு பாதவொளிநாதமே கோடானகோடிநடனம், பாட லதிசிதசபை யோகசிவகோசைவெளி பரமகயசத்திவடிவு, பாரமாயொரு சிறியூருவிமேலான பாலேயை பாதகமலஞ், காடவனுபோகசெய லேக [illegible]வாகவே தால்வேண்டுமிதுசமயமே, தற்பரானந்தசபை நிஷ்களா [illegible]சச்சிதானந்தருவே. (அன்றியும்) தற்புருஷநிலையிலே விற் [illegible]விலே எ ம். (பாலையானந்தசுவாமிகள்) ஓங்காரமானபிரண வத்தா லெங்குமுயர்ந்த சோமகலேநிறத்தாள், றீங்காரமானபராசத்தி தேவியை நேர்ந்துகும்பியடியுங்கடி எ ம். (சந்நிதிமுறை) மும்மையுல கெங்கும்பரந்தொளிபரப்பிடு முதற்பரைபொடுத்தீனத்து, மூதருட்புனி தநீர் நிறையவாட்டிப் பெருமைமொய்த்த நித்தியவாடையான், மெய்ம் மழுதமொத்திரு வேறற்றவத்துவித வெண்ணீறணிந்துமிளிரும், வீறுபூரணநிலப்பொட்டு மிட்டுப்பெரிய மெய்ஞ்ஞான தீபநட்டா, லம்

மருவுமாலத்தி சுற்றிமற்றிச்சையுடனுன ஞானக்கிரியையென், றருள் கெவிலியாயாங் கருக்கிலுறவாரு றகன்றசிவவாரியிலெழுஞ், செம்மை யாரமுதம் புகட்டவளருங்குழவி செங்கீரையாடியருளே எ ம். (சௌந் தரியலகிரி) ஆரமுதின்கடல் வேலிசெழுந்தருவாய் மணியம்பிய தீவூ டே, பாரகடம்படர் கானிலருங்கொடை பாய்மணிமண்டபவீடே, கோரசிவன்பா மேசனுமஞ்சமொர் கூர்பரியங்கமெனுமேலே, கீரடரும் பட ஞானமுறுங்கனி தேவரருந்துயர் பூமாதே எ ம். (பட்டினத்துப் பிள்ளையார்) அரிபிரமர்போற்ற வமரர்ஜயஜயவெனப் பெரியம்மை பாகம்வளர் பொழுதைப்பாமேனே. (அன்றியும்) கண்டார்க்குப் பெண் ணலவா காணார்க்குக்காமயமா, உண்டார்களுண்டதலா லூணல்லா துன்பர்களோ எ ம் (மவுனதரிசனம்) கூடுவது புருவமைய வெளியி லுள்ளே குறிப்பாக மௌனத்தைக்கூட்டுமூட்டி, வாடுவதும்றேன்மணி யுஞ் சிவனுந்தோன்றுமாகாசஞ் சர்வவியாபகமுந்தோன்றும், நாடுவ கனவொளிபோல் விந்துதோன்றும் நாதமங்கேகோடிமதிபோலேதோ றுந், தேடுவதுவனந்த வானந்தந்தோன்றுஞ் சிவசிவாமௌனவி செப்பொணாதே எ ம். (பத்திரகிரியார்.) நயனத்திடைவெளி நண்ணுமப்பாழ்வெளியில், சயனத்திருந்து தலைப்படுவதெக்காலம் வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

ஞானத்தில யோகமில்லை யென்பதற்குப் பிரமாணம். லத்திரங்கல்.) ஆகமசீலனைப்பாரீர் யேகனனேகனப்பாரீ னைப்பாரீர். (அன்றியும்) அறிவுக்கறிவனைப்பாரீ ரறிவுக்க னைப் செறிகைக்கினியானைப்பாரீர் தேசிகர் தேவனைப்பாரீர் ம். (பத்திர கிரியார்) அருவிமலைநடுவே யாயிரக்கால் மண்டபத்தி திருவிளையா டற்கண்டு தரிசிப்பதெக்காலம் எ ம் (சிற்றம்பலநாடி ஞானுபூதிவிளக் கம்.) ஆயவியமில்லா வகண்டபரிபூரணத்தே, தூயகுருவுருவந் தோன் றுமற்றோன்றியதே. எ ம். (திருவாசகம்.) இன்றெனக்கருளியிருள் கடிந்துள்ளத் தெழுகின்ற ஞாயிறேபோன்று, நின்றநின்றன்மையினை

பறநினைந்தே னியலாற்பிறிதுமற்றின்மை, சென்றுசென்றணுவாய்த்
தேய்ந்துதேய்ந்தொன்றாந் திருப்பெருந்துறை யுறைசிவனே, யொன்
றுநீயல்லையன்றியொன்றில்லை யாருன்னையறியகிற்பாரே. (அன்றியும்.)
பிறவிதனையறமாற்றிப் பிணிமூப்பென நிலையிரண்டு, முறைவினொடு
மொழியச்சென்றுலகுடைய வொருமுதலைச, செறிபொழில் சூழ்தில்லை
நகர்த் திருச்சிற்றம்பலமன்னி, மறையவரும் வானவரும் வணங்கிட
நான் கண்டேனே. (அன்றியும்) கட்டற்றதென்னையாண்டு கண்ணாநீ,
நிட்டவன்பரோடி யாவருங்காணவே, பட்டிமண்டப மேற்றினையேற்
றினை, யெட்டிரண்டும் மறியேனையே எ ம். (திருவாய்மொழி.)
நின்ற வொன்றை யுணர்ந்தேனுக்கு கதனுணோர் மையதுவிதுவென்
றொன்று வொருவர்க் குணரலாகாதுணர்ந்து மேலுங்காண்பதரிது,
சென்றுசென்று பரம்பரமாயாதுமின்றித் தேய்ந்தற்று, நன்றுதீதென்
றிவரிதாய் நன்றாய் ஞானங்கடந்ததே. (அன்றியும்) யாவருமெவையுந்
தயவரவர் சமயந்தோறுந் தோய்விலன்புலனைந்திற்குங் கொலப்படா
ர்வின்மூர்த்தி, யாவிசேருயிரினுள்ளலாதுமோர் பற்றிலாத, பாவ
னைகளூடிலவனையுங் கூடலாமே எ ம். (பஞ்சாட்சரப பதிபசு
சக்கம்) கானுறுபுலன்கள்போகக் கரிசுறு மனம்போம் போனும்,
போகும்போது லாருயாப்போதம்போகுஞ் சேனுறுமொளிக்
சிவபிரகாசந்தோன்றும், மாணனேயிதுவேமுத்தி நிலை
த்திடாயே எ ம. (சச்சிதானந்த விளக்கம்.) பாமண்டலங்
மண்டலம்படிக பதிமண்டலந் தலமதாய்ப், பரிவிண்டலம்
மதிமண்டலங்குழைகள் பணிகங்கணங்கிரணமே, உரமண்டலம்
பெரிய தலமண்டலந்தெரிய வுமைபங்கனன்புபுரிய, வெள்ளிமண்டலந்
தரிசு வெளிமண்டலம்பெரிசு யுகமண்டலஞ்சிரசதாய்ச், சிரமண்டலங்க
ளவை குடிகொண்டிலங்குசடை சிவசம்புசாம்பசிவனே, ஜெகமண்ட
லம் புகழ ரவிசம்பிரமங்களொடு திருவம்பலம்பரவவே, சரமண்டலங்க
ளொடு நடனம்புரிந்தகழல் தால்வேண்டுமிதுசமயமே எ ம். ( சத்திதி

(முறை) அடியார்நிமலத்திருவகத்து ளன்புபொருமை யவாவறுத்த, லடுப்பாங்கமைத்து மலங்காட்டத் ததிகஞானக் கனன்மூட்டி, மடியா திருந்த வுயிர்க்கலசம் வழியவருட்பேருலைவார்த்து, மாறுப்பெருமைச் சிவானந்த மதுரச்சோறுதினம்பொங்கி, விடியாச்சிவ போதவிருள் வீயமவுனச்சுடர்விளக்கு விளக்கியிருந்தபடியிருந்து மேலாஞ்சிற்றில் விளையாடுஞ், செடிநீரகத்தொர்புகழ்வாலை சிறுவாசிற்றில் சிதையேலே எ ம். (தாயுமானசுவாமிகள்.) பாராநுவண்டங்க ளத்தனையும் வைக்கின்ற பரவெளியினுண்மைகாட்டிப், பற்றுமனவெளிகாட்டிமனவெளியினிற்றோய்ந்த பாவியேன் பரிசுகாட்டித், தாரளமாய்நிற்க சிற்சிந்தை காட்டிச் சதாகால நிஷ்டையென்னவே, சகலநிலைகாட்டினை சுகாதீத நிலையுந் தனைக்காட்ட நாட்செல்லுமோ, காராரவெண்ணரு மனந்த கோடிகணின்று காலூன்றி மழைபொழிதல்போற், கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங் கம்மியானந்தவெள்ளம், சோராது பொழியவே கருணையின் முழங்கியே தொண்டரைக்கூவுமுகிலே, சுத்தநிர்க்குணமான பரதெய்வமே பரஞ்சோதியே சுகவாரியே. (அன்றியும்.) சென்றுசென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாகி, நின்றுவிடுமென்ற நெறிநிற்குநாளெந்நாளோ (அன்றியும்) அத்துவித வனுபவத்தையனந்தமற யின்னமின்ன மறியோமென்னும், நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னருளா நினைவுக்குள்ளே, வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தாநைகவெந்நாளும் வளர்த்துக்காக்குஞ், சித்தினை மாத்தூவெளியைத் தன்மயமாமானந்த தெய்வந்தன்னை. எ ம். (பெரியபுராணம்.) ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள வளப்பருங் கரணமோர் நான்குஞ், சிந்தையேயாக்கு குணமொருமூன்றுஞ் சிறந்தசாத்துவிதமேயாக, விந்துவாழ்சடையானாடுமானந்த வெல்லையிற்றனிப்பெருங் கூத்தில், வந்தபேரின்ப வெள்ளத்துட்டிளைத்து மாறிலாவின்பத்துட்டிளைத்தார் எ ம். (கடவுளந்தாதி.) "சிவமது முப்பத்து" முக்கோடிதேவர்கள் செய்யுமொரு, தவமது பொன்னகர் மின்னனை "தாமரைத்தாள்பணியப்

பவமறுசூட்சத்திற்பத்தியும் பாயும்பவமிகுந்த, நவமணிமண்டபமேடை யுங்காணுவர் நாட்டத்தில் (அன்றியும்) இன்பமிருந்த விடஞ்சுடுகோட டெடுத்துரைக்கத், துன்பம்வெகுதொலைசுற்றிலும் வன்னிதுருவமத்திக் கம்பமது நுனிகாணுதகாட்சி கனகசபை, விம்பம்பெருவெளி யுற்றுற் றுப்பார்க்க விளக்கொளியே. (அன்றியும்.) ஒளியாம் விளக்கொளிக் குள்ளேதெளிந்து கொண்டிடுருவை, வெளியாம்பராபர மாசோதியே விந்து நாதமொத்துத், தெளிவாயிருந்து பிரண்டமயவர்க்கே. எ ம். (ஞானவாசிட்டம்) உண்டான பிருட்டிதானென்றுப்பார்க்கி லொழிந்து மோமுறுதியாயுணராவற்றுற், கண்டார்கள் கயிற்றிலே பாம்பென்பாற் போற் காட்சியுறுங்கலை நூலாற்றுற்றோர்சார்வாற், றண்டாதபரிசயத் தாற் சிலகாலத்திற் றுவுமனமின்மலமாய சசிபோனிற்கிற், பண்டாய வனுபூதி மயமாய்த்தானே பாக்கியவான்களுக்கிந்த பார்வைதோன்றும். (அன்றியிம்) சொருபம்விட்டமலன் மோகமாய்வேறு கொண்டிடமுன்பு பின்பில்லை, ஒருபொருணினைவை யொழித்தும்பல்பாலொரு பொருணினைவுறிலந்த, விருபொருணினைவுணிவையறவிருக்கு மிதுசொருபத்தி யல்பிதுதான், மருவுகற்பனை பாண்டைசைவில்கற்போலாய் யருநனுச் சுழித்தி திர்வடிவாம். (அன்றியும்) மெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாத்தார் விளம்புமிதை, நெறியார் மன்னவன் கேட்டபடி யுரைப்ப னெடியவனே நினைவிற்கொள்வாய், அறிவானுமறி பொருளுங்கூடிய கூட்டரவிழ்பூ மறிவானந்தம், பிறியாதவான்மதத் துவத்தெழுந்த தாமதனைப் பேணல்செய்வாம் எ ம். (கைவல்ய நவநீதம்.) களங்கமற்ற கண்ணுடிதன் முன்வேறோர் களங்கமற்ற கண்ணுடிகாட்டும்போது, விளங்கிய தன்மயமாகிய பேதமாகி விகற்பமின்றி நிருவிகற்பமானாற்போல, அளந்தறியப்படாவிபுவாய்ச் சத்தாய்ச்சித்தா யானந்தமாம் பிரமத்தைக்யமான, உளந்தெளிந்தபடியிருந்தா லுலகமெங்கே யுலவெங்கே யென்றுசங்கை யொழித்திடாயே எ ம் (திருப்புகழ்.) இருவினையுமலமுமற விறவியொடு பிறவியற வேகபோகமாய்

நீயுநானுமா யிறுகும்வகைபரமசுக மதனையருவிடைமருதி லேகநாயகா லோகநாயகா யிமையவர்பெருமானே எ ம். (சிவவாக்கியர்.) கருக்கலந்தகாலமே கண்டிருந்தகாரணு, வுருக்கலந்தபோதலோ வுன்னைநானறிந்தனன், திருக்கலந்தசோதியை தெளிந்துநானறிந்தபின், இருக்கிலே னிறக்கிலே னிரண்டுமற்றிருந்ததே. (அன்றியும்.) மவுனமானவைந்தெழுத்தை வாசியேறி மெல்லவே, வானெலா நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின், அவனுநானுமெய்கலந்தே யனுபவிக்குமளவிலே, அவனுமில்லை நானுமில்லை யாருமில்லையானதே. எ ம். (அகஸ்தியமுனிவர்.) வடிவம்பொருளருண் முக்குணம் வாக்குமனமுமடி, முடிவுமில்லாத முடிவினைச்சூட்டி முருகனென்ற, படிகாத்தனைக்கண்ட காசிப்பிர பஞ்ச பார்வையற்றால், விடயம்பொருந்தி லிரண்டல்லமான்றே தெய்வம் வேறில்லையே எ ம். (தனிமைக்குறள்.) ஆர்க்குந்தெரியா வுருவந்தனை நோக்கிற், பார்க்கும் பரமாமவன் எ ம். (கந்தரலங்காரம்.) அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற், குராப்புனைதண்டையந் தாடொழல் வேண்டுங் கொடியவைவர், பராக்கறல்வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால், விராப்பகலற்ற விடத்தேயிருக்கை யெளிதல்லவே எ ம். (சௌந்தரியந்தாதி.) தெளிவாய முதப்பெருக் கெறிந்து தேங்குங்கடலிற் றினமூழ்கி, யொளிவாய்த்திருக்குங் கனகசபைக்குள்ளே புகுந்து வுமையோடுன், களிவாய்த்திருக்கு கணவனுடன் கனகத்தவிசின்வீற்றிருந்த, வளிவாய்த்திருகுங் காட்சிமங்கைக் கரசே கண்டார்க்கருள்வாயே எ ம். (மவுனதரிசனம்.) செப்பரிய வம்பரத்தைக் காத்தாயானூற், றேகமங்கே நிராமயமாய்க் கரைந்துபோகும் ஒப்பரிய வீசனிடமூலமான வுண்மையறிந்தறிந்தறிவில் மௌனமூட்டத், தப்பாது சீவன்முத்தி யடையும்பாரு சாரமங்கே கற்பூரதீபமாகும் அப்பாகே ளறிவென்னதேவிதேவி யானந்தவானந்தமென்ன சிவமுமாமே எ ம். (தேவாரம்) மைப்படிந்தகண்ணுளுந்தானுங்கச்சி மயானத்

தான்வார்சடையான் மாசொன்றில்லான், ஒப்புடையனல்ல னொருவ னல்லனோருரனல்ல னுவமையில்லன், அப்படியனல் வுருவனவ்வண்ணத்தனவனருளே கண்ணாகக்காண்பதல்லால், இப்படியனிவ்வுருவனிவ்வணத்தனிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே எ ம். வரும் மற்றும் வருவனவற்றுத்காண்க. (29)

(அ-கை.) ஸ்பரிசாநிகளிறந்த ஞானயோகத்தில் உள்முகப்பட்ட மனமானது நாதவசமுற்றிருக்கின் அந்நாதத்தின் சொரூபமாகிய பஞ்சாக்ஷரந் தோன்றுகின்றதென்பதையும் அதன் ஒடுக்க மெங்ஙனமென்பதையுங் கூறல்,

வேறு.

பேசரியவநுபோகமாகுநாதப்
பிறங்குசத்தக்கரந்தோன்றிடுமேயாயின்,
நேசமாம்பொறிபுலன்களைந்துந்தோன்று
நிலவுபொழுதகமுகமதாகவுமதே,
பாசமிலாசிரியன்முன்னம் பார்த்தவாறே
பதுமவாதனமும்பார்வையு நீங்காமல்,
ஆசிலங்கிலையிலுறவைந் தெழுத்துமிலை
யெனக்கேட்டவைபோமாறியம்புகென்றான்.

(இ-ம்.) சொல்லுதற்கரிய சுவானுபோக முண்டாகும்காலத்தில் விளங்குகின்ற நாதத்தில் பஞ்சாக்ஷரம் உதயமானால் இழிவாகிய அந்த இந்திரியவிஷயங்கள் ஐந்தும் உதயமாம். (ஆதலின்.) சத்தம்விளங்குங் காலத்தில் அந்தர்முகமாக அறிவைச்செலுத்திப் பற்றற்ற ஞானாசிரியர் முன்னனுக்கிரகித்தபடியே பத்மாசனமும் ஞானதிருஷ்டியுங் கெடா

மல் குற்றமற்ற அந்தநிலையிலிருந்தால் (சத்தாதிகளுக்குரிய.) பஞ்சாக்ஷரந் தோன்றுவதில்லையென்று பரமசிவனார் சொல்லக்கேட்டு அவைகள் ஒடுங்குகின்ற வகையைச் சொல்லுவீரென்றார் தேவியானவர்-எ-று எ-எ-அசைகள்.

(ப-ம்.) அருள்வடிவமான மனமானது எவையாலும் மதித்தறிதற்கரிய ஞானத்தில் யோகமாகியநிலையிற் பொருந்துங்காலையிற் சுபாவமுதயமாவதற்குமுன் புண்டான காண்பானுங்களிறந்ததாகிய மெய்ப்போதவொழிவில் உதிக்கும்பரையின் முழக்கமென்பார். பேசரிய வனுபோகமாகும். காலைப் பிறங்குசத்தமென்றாம் உன்முகப்பட்டிருந்த அம்மனம் அந்நாதத்தை எதிரிட்டறியவரின் மெய்ப்போதமாகிய பரிசமும், அருட்டரிசனமாகிய வொளியும், பேரின்பமாகிய சுவையும், சுகமாகிய வாசனையும், தோன்றும் அவைதோன்றவே அவைகட்குரிய சூக்ஷுமவடிவமாகிய பஞ்சாக்ஷரமும் அதன்காரியமான ஸ்தூலவடிவமாகிய பஞ்சேந்திரியவிஷயங்களுந் தோன்றுமென்பார். அக்காந்தோன்றிடு மேயாயினீசமாம் பொறிபுலன்களவையுந் தோன்றுமென்றுங் கூறினார்.

(இ-ம்.) அத்வைத அபரோக்ஷானுபவசுகத்தில் உன்முகப்பட்ட மனம் நாதவுணர்வில்வாராது அசைவற அந்நிலையிற்பொருந்துமாயின் யாவுமொடுங்குமென்பதாம். (30)

(அ-கை.) அப்பஞ்சாக்ஷரம் ஒடுங்குமுறைமை யிதுவெனல்,

(வேறு.)

நகரமொடுமகரமது சடந்தருங்காரணமா
நாடுமவை நீங்கியிடுவகையைநவிலுதுங்கேள்,
வகரமதினகர முதல்யகரந்திற்றனே
மகரமுநீங்கிடுமரியசிரமனுதன்னால்,

யகாரலயம்வகாரமுந்தான் சிகாரத்திலாகிக்க
மாகுமிறைநீங்கவுயிர் முத்தியெய்துமென்றே,
தகாரமுங்கரியகுழனாசமாகுக்கிறைவன்
றனதுதிருவுளமகிழ்ந்து சாற்றினேன்குமாரதேவ.

(இ-ள்.) * பிருதுவிதத்துவமாய்க் - கந்தவிஷயமாய் - வெண்ணிறமாய்ப் - பூமியமாய்ப் - நிவர்த்திகலையாய்ச் - சத்தியோஜாதமாய்க் - கர்மசாதாக்கியமாய் - நான்முகரூபமாய்ச் - சிருஷ்டியைத்தருகின்ற - மறைப்பையுடைய - திரோயக்ஷரமாகிய - நகாரத்துடனே, * அப்புதத்துவமாய்-ரசவிஷயமாய்க் - கருநிறமாய்ச் - சலமயமாய்ப் - பிரதிஷ்டாகலையாய் - வாமதேவமாய்க் - கர்த்துரு சாதாக்கியமாய் - விஷ்ணுரூபமாய்த் - திதியைத்தருகின்ற - மயக்கத்தையுடைய - மலாக்ஷரமாகிய - மகாரமானது ஆன்மாக்களுக்குத் தேகத்தைத்கொடுப்பதற் கேதுவாய்த் தோன்றும் தியானிப்பதற்குரிய இவ்விரண்டக்ஷரங்களும் ஒடுங்குகிறதற்கு வகையைச்சொல்லுகின்றோம் கேட்பாயாக, * வாயுதத்துவமாய்ப் பரிசவிஷயமாய்ப் புகைநிறமாய்க் காற்றுமயமாய்ச் சாந்திகலையாய்த் தற்புருஷமாய் அமூர்த்திசாதாக்கியமாய் மகேசுவரரூபமாய்த் திரோபவத்தைத்தருகின்ற சத்திவடிவத்தையுடைய பரையக்ஷரமாகிய வகாரத்திலேமுதலிற்சொல்லியநகாரமும் ஆகாயதத்துவமாய்ச் சத்தவிஷயமாய் நீலநிறமாய்ச் சுத்தவெளியாய்ச் சாந்தியாதீதகலையாய் ஈசானமாய்ச் சிவசாதாக்கியமாய்ச் சதாசிவரூபமாய் அநுக்கிரகத்தைத்தருகின்ற சிவவடிவத்தையுடைய சிவாக்ஷரமாகிய, யகாரத்திலே மகாரமும் ஒடுங்கும், அருமையாகிய தேயுதத்துவமாய் ரூபவிஷயமாய்ச் சிவந்தநிறமாய் அக்கினிமயமாய் வித்தியாகலையாய் அகோரமாய் மூர்த்திசாதாக்கியமாய் உருத்திரசொரூபமாய் சம்மாரத்தைத் தருகின்ற ஞானசூரியப் பிரகாசத்தையுடைய பதியக்ஷரமாகிய, சிகாரமந்திரத்திலே யகாரம் லயத்தை அடையும் (மேற்சொல்லியபதி

---

* பிருதுவி பொன்னிறமும் அப்பு வெண்ணிறமும். வாயு பசுநிறமும் ஆமெனக்கொள்க.

யக்ஷரமாகிய.) சிகாரத்திலே வகாரமும் ஒடுக்கமாகும், அந்தப்பதியக்ஷரந் தானேயொடுங்கச் சீவன்முக்தியுருவமொன்ற மயிர்ச்சாந்தையணிந்த வாசனைபொருந்திய நறுக்க கூந்தலையுடைய உமைக்குப் பரமசிவனார் தமது திருவுள்ளங்களிகூர்ந்து செவ்வையாக அறிந்தநுக்கிரகஞ்செய் தார்-எ-று. தான்-சாரியை-ஏ-ஈ-அசைகள்.

(இ-ம்.) பிறவிநோய்க்கிடமாகிய நகார மகாரங்களில் வகாரத்தில் நகாரமும், யகாரத்தில் மகாரமும் ஒடுங்கும், அந்த வகாரயகாரமும் பதியக்ஷரத்தில் ஒடுங்கும், அந்த பிரம்மாக்ஷரமுந்தானே ஒடுங்கச் சீவன் முக்திவருமென்றுணர்த்தியதாம்.

எனவே ஞானேந்திரியங்களுள் நான்கும் சக்ஷு இந்திரியத்தில் ஒடுங்குவதுபோலப் பஞ்சாக்ஷரத்துள் நான்கும் பதியாக்ஷத்துள் ஒடுங்கு மென்பதே சித்தாந்தக் கிரமமெனக்கொள்க. (31)

(அகை-ம்.) அந்நிஷ்டையின் மனந்திரியுமாயினது வொடுங்கு முபாயமிதுவெனல்.

ஆதலாற் றிருந்தே கசாதனை செய்யும்போ
 தலைதருமணைபட்டாசனமதற்
போதுமே யெனினுங் கேவலமயக்கம்
 புரியுமே யெனினுமங் கெழுந்து
நீதியினையிராடியுலாவந்தே
 நிலவுமா தனத்திற்பொருந்தி
யோது சாதனையி லுறுதியோடிருப்ப
 தியோகியர்க்கியல்பதாமன்றே.

(இ-ள்.) அங்காசனத்திலிருந்து சிவயோகசாதனையைச் செய்யுந் தருணத்தில் அலைகின்றமனம் அடங்காமற்போமாகிலும் முழுதும் மயக்கத்தைச் செய்யுமாகிலும் அவ்வாசனத்திலன்றி யெழுந்து முறைப்படி பத்தடிநடந்துவந்து பிரகாசிக்கின்ற அவ்வங்காசனத்திலிருந்து சொல்லுகின்ற சிவயோகநிஷ்டையில் நிலைகொண்டிருப்பது ஞானநிஷ்டாபாருக்குச் சுபாயமாம் எ-று. ஏ ஏ ஏ அன்று ஏ இவ்வாறும் அசைகள்.

(ப-ம்.) மயிர்ப்பாலத்தின்மேலேறிச் சென்றிருக்கு மனமானது ஞானாகாசமாகிய பரையின் பூரகத்திலே அமானனத் தனது பிரசைஞை தப்புமாயின் ஒடுங்கின வியானவாயுடன் சேர்ந்து அலைதலையுற்றுத் தன் காரியமாகிய விஷயங்களைப்பற்றி ப்ராந்தியடைந்து திரியுமென்பார். அலைதருமனமடங்காமற் சேவைமாச்சப் பரியுமெனிறு மெனக் கூறினர்.

(இ-ம்.) நிஷ்டையில் மனமயக்கமுமாயினு வெளிவந்துலாவிப் பின்னர் அந்நிஷ்டையில் உறுதிபெற்றிருப்பதுவே ஞானயோகிகளுக் குரியகுணமென்பதாம்.

(அ-கை.) ஞானத்தில் ஞானமயமாகிய கூடஸ்த பிரம்மைக்கியங் கூறல்.

இந்நிலையாகிய பரமகேவலத்திலுளமெழினிதித்தியாசனத்திலி ராமலிருந்திடுவோன், அந்நிலையேயுடலினொடு சீவன்முத்தியடைகுவ னெவ்விதமென்னிலறைகுதுநீகேளாய், துந்நியதோயத்தினொடுதோய் மூறல் போலுஞ்சுவைதருக்ஷீரத்தினொடு க்ஷீரமும்போற்கலந்தே, எந்நிலை யுந்தோன்றும விருந்திடவிவ்வுலகிலிறப்பினொடு பிறப்புமறுத்தனையி லின்பத்துறுவான்.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட நிலையாகிய மேலான துரியத்தில் ஞானசொரூபம் பொருந்திய (கைவல்யப்பட்ட.) ஞானநிஷ்டையினால் சதா இராமலிருக்கின்றவன அந்நிலையிலேயே தேகத்துடனே சீவன் முத்தியடைவான் அஃது எங்ஙனமென்னிற் சொல்லுகின்றோம் நீ கேட்கக்கடவாய் நெருங்கிய (அனேகநதி.) சலம் (கங்கா.) சலத்திலே கலந்து ஒன்றுபட்டு விளங்குவதுபோலவும் மதுரமாகிய பாலுடனே பால் கலப்பதுபோலவும் (பிரமத்துடனே கலந்து.) எந்தநிலையுந் தோன்றாமலிருக்க இந்த வுலகத்தின்கண் * பிறப்பிறப்பாகிய இரண்டையும் நீக்கி ஒப்பில்லாத பேரின்பத்தை அடைவான் என்று இராமலிருந்திடுவோனென்றதனால் கைவல்யப்பட்டவனென்று வருவிக்கப்பட்டது.

(ப-ம்-) ஆணவக்காலமறைபட்டிருந்த வுயிர்க்கு அனுபோகஞ் சொல்லக் கூடாததுபோல அருளாபரையாகிய ஞானாகாசத்தைக் கடந்து பரமசிவத்திற்கலந்த நிலையை மலரகிதமாய நிறைவான சச்சிதானந்தமென்னுந் திரிபுடியில்லாமல் நடக்கிற சுத்த சைதன்யமான நிலையி லெக்காலமுமென்று கூறுவார் இந்நிலையாகிய பரமகைவல்யத்தினாலுமென்றும். சொர்ணப்பிரகாசமாகிய மனதைச் செலுத்திவைத்திருப்பதற்குரிய ஞானநிஷ்டையிற் பொருந்தவென்பார். நித்தியாசனத்திலென்றும் அசமாதியோகத்தினன்ன முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நின்றவிடத்துப் பாசமிது அருளிதுவென்று பகுத்தறிந்த அறிவுதானென்று தன்னை யருளாலறிந்து பின்னர்த்தன்னையும் அவ்வருளையும் பிரித்துப்பார்த்த அருள தானுயிருந்து பின்னர்த்தன்னைச் சிறிதுந் தோற்றுவிக்காத அந்தப் பரிபூரணமாகிய பரையேயாகி யிருக்கின்றவனென்றும், அந்தநிலையிலெழுஞ் சுவானுபூதி, சாக்ஷாத்காரத்தைத் தானென்று சும்மாவிருந் திருக்கின்றவனென்றுங் கூறுவார். இராமலிருந்திடுவோனென்றும், அப்பரைநீக்கத்தில் தற்போதமிறந்து சதசத்

* புறப்பிறப்பென்பது - நினைப்பு மறப்பெனக்கொள்க.

தான ஆனந்தமயமாகி அவ்வானந்தத்தை இங்ஙனமென்றறியாது அத னுள் அதீதப்பட்டுச் சிவத்தில் இரண்டறக்கலக்கின்றவனென்றும், சாக்ஷிமாத்திரமாய் நின்றவன் சரீரத்தோடிருக்கும்பொழுதே பந்த நீங்கின கூடஸ்தபிரம்மைக்கியமான முத்தியைப் பெறுவானென்றுங் கூறுவார். அந்நிலையே யுடலினோடு சீவன்முத்தியடைவனென்றும், அவ்வருள்பரையென்னு மிரண்டில் அருள் ஆன்மாவிற்குத்தோற்ற லானும் பரைஆன்மாவிற்குத்தோற்றாமல் தோற்றலானும் அப்பரை நீக்கத்தில் தோன்றிய ஆனந்தமளவும் ஆன்மாவா லனுபவங்கூறலானும் அவ்வானந்தமும் அதனுள் அதீதப்படுவதாகிய பேதமறக்கலக்கின்ற சிவாதீதத்தைக் கூறுமென்பதே சாமவேதமுடிவாகிய * தத்துவ மசியென்னும் மகாவாக்கியார்த்த அனுபவம் அவ்வர்த்தத்தை யுணர்த் துங்கால் அது நீயா இருக்கின்றாயென்பதாம் அவ்வாக்கியத்தை அந்த வயப்படுத்துமிடத்துத் துவந்தசீவென்பர் அதற்கர்த்தம் நீ அதுவா இருக்கின்றாயென்பதாம். துவம்பதசுத்தார்த்தம் பரமாத்மாவாகிய அருள் பரையென்னுஞ் சித்தே நிசாங்கம் தத்பதசுத்தார்த்தம் பரமசிவனென் னுஞ் சித்களானந்தமே நிசலிங்கம் இந்த அங்க லிங்க சம்யோகமான ஆத்மார்ப்பணமாகத் தக்கவனே அசிபதசுத்தார்த்தமாகிய சித்களானந்தா தீத சுயம்பிரகாச நிராவஸ்தை நிஷ்பத்தியென்னும் நிர்ப்பாவ நிசலிங் கைக்கிய சிவாத்வைத பேரின்பக்கடலுள் மூழ்கப்பெறுவானென்பார்; எந்நிலையுந்தோன்றாம லிருந்திட வினையி லின்பத்துறுவானென்னுங் கூறினர்.

(இ-ம்.) கருவிகள் முப்பத்தாறையுங்கடந்து அவற்றின்மேல் நின்ற ஆன்மாவினது இச்சையைச்செலுத்தி ஞானக்கிரியைகளை யடக் கித் தற்போதத்தைச் சீவியாமற் பரிபாகஞ்செய்கின்ற அருளையும்

* தத்வமசியானது போதிக்கிற முறைமையில் அது நீயாகின்றா யென்றும் அது நீ யானாயென்றும் பொருள்கொண்டிருக்கும்.

அதற்குமேல் நின்ற பராபரையுந் துவிதநாட்டமின்றிக் கழன்று நின்ற விடத் துதயமான ஆனந்தபோத மிறந்ததாகிய சலத்துடன் சலமும் பாலுடன் பாலும் கலந்தது போல்வதாகி இரண்டற்ற ஐக்கியமான சுத்த அத்துவைத வேதாகம முடிவிற்றம் முடிவாய்விளங்கியதே அதீத மவுனநிலையென்று உமைக்குப் பரமசிவனார் குருதுரியமாக உபதேசித் தருளினாரென்பதாம்.

ஞானத்தில் ஞானநிலை யீதென்பதற்குப் பிரமாணம். (பத்திரகிரியார்) அப்பினுறைப்பு மானடியிற்சேர்க்கோருநாட் செப்பிலொன்றாய்த் தோன்றுமௌனச் செப்புவதுமெக்காலம். ( அன்றியும். ) நானாரோ நீ யாரோ நற்றபாமான, நானோர வென்றுணர்ந்து தவமுடிப்பதெக்காலம். (அத்துவிதக்கலி வெண்பா.) ஆறுகடற்சென்றொடுங்குமாபோற் சிவத்திலொடுங்கென்றொன்று மறவொன்றா யுருகென்றான் எம். (தாயுமானசுவாமிகள்) அப்புமுப்பும்போன்ற வயிச்யபானந்தர்தமக் கொப்புவமை சொல்லவும் வாயுண்டோ பராபரமே. (அன்றியும்) கூடுதலுடன் பிரிதலற்று நிர்விகாரந்தமாய்க் குவிதலுடன் விரிதலற்றுக் குணமற்று வரவுபோக்குமற்று நிலையான குறியற்று மலமுமற்று, தாடுதலுமற்றுமேல் கீழ்நடுப்பக்கமென நண்ணுதலுமற்று விந்துநாத மற்றைவகைப்பூத பேதமுமற்று, ஞாதுருவின் ஞானமற்று, வாடுதலுமற்று மேலொன்றிரண்டற்று வாக்கற்றுமனமுமற்று மன்னுபரிபூரணச் சுகவாரிதன்னிலே வாய்மடுத்துண்டவசமாய்த், தேடுதலுமற்றவிட நிலையென்றமௌனியே சித்தாந்தமுத்திமுதலே சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே சின்மயானந்தகுருவே. ( அன்றியும். ) நானெனதன்மயமேயல்லாலொன்றைத்தலையெடுக்கவொட்டாது தலைப்பட்டாங்கே, போனாலுங்கர்ப்பூர தீபம்போலப் போயொளிப்பவல்லாது புலம்வேறின்று, ஞானகாரத்தினொடு ஞேயமற்றஞாதுருவு நழுவாமனழுவி நிற்கும், ஆனாலுமிதன்பெருமை யெவர்க்கார் சொல்வாரதுவானாலதுவாவாது வேசொல்லும். (அன்றியும்) அதுவென்றாலதுவென வொன்றடுக்.

குங் கங்கையாதலினுலதுவெனவு மறவேவிட்டு, மதுவுண்டவண்டெனவுஞ் சனகனுதிமன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தாரென்றும்- பதியிந்தநிலையெனவு மென்னையாண்ட படிக்குநிருவி கற்பத்தாற் பரமானந்த, கதிகண்டுகொள்ளவு நின்னருள்கூர்ந்தக் கதியன்றி யுறங்கேன் மேற்கருமம்பாரேன் எ ம். (திருவாசகம்) நானுமென்னுள்ளமாம் ஞானங்களாமென்னையாரறிவார். (அன்றியும்.) பந்தவிகாரகுணங்கள் பறிந்துமறிந்திடுமாகாதே, பாவனையாய் கருத்தினில்வந்த பராவமுதாகாதே, யந்தமிலாத வகண்டமு நம்முளகப்படுமாகாதே, யாதிமுதற்பரமாய பரஞ்சுடரண்ணுவதாகாதே. (அன்றியும்) வான்கெட்டுமாருத மாய்ந்தழனீர்மண்கெடினுந், தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக், கூன்கெட்டுயிர்கெட்டுணர்வு கெட்டென்னுள்ளமும்போய், நான்கெட்டவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. எ ம். (ஒழிவிலொடுக்கம்.) தத்துவம்போய்க் கேவலம்போய்த் தான்போயருள்கழன்று, சுத்தபரையாய்த்தன் சுதந்தரம்போயச் சத்தி, யொழிவிலேபோதம்போயொன்றாகாவொன்றி, னழிவிலேவின்பவதீதம் எ - ம். (பிரபுலிங்கலீலை.) ஞேயஞான ஞாதருவெனுமிவை பலநிற்குமாயின் வேறுமுத்தி யன்றதுசகாயமாமென், றேயுமாறியதுவெனுஞ்சுட்டிலாவியல்பைமாயைமாறிய தேவிபாலருளினன்வள்ளல் எ-ம் (ஞானவாசிட்டம்) முடிவுகனவஞ் ஞானமில்லா நீடியிலதுவா மூம்மையாகு, மடர்தருஞாதிருஞான ஞேயமெழுந்தொடுங்கு மிட மதுவேயாகுர், திடவிசும் பன்றாயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சித்தப்புத்தி, படர்மனம்போய்த்தாவாவுள்ளறிவு பெறிலொப்பாமப்பரமரூபம் எ ம். (சிவநெறிப்பிரகாசம்) ஞானமுடன்ஞேய ஞாதுரு வென்னுமூன்று நாடாமறானதவாய் நண்ணியிடமுனே, யூனமிலாவுன்மனிக்கு மேலான முத்தியுற்றது நின்மலதுரியாதீத மெனவுரைப்ப, ரானவிதே சுத்தமாமுத்தியாகு மன்றிவேறுரைக்குமுத்தி யவைகளெல்லா, மீனமாமுத்தியது தன்னையெல்லாமியம்புவாமறிந்ததனை மிசையாவாறே. எ ம். (உண்மைவிளக்கஞ் சிந்

தனை.) ஆதவன்றன் சந்நிதியிலம்புவியினோர் சோதிபேதமற நிற்கின்ற பெற்றிபோல் நாதாந்தத், தண்ணல் திருவடியிலான் மாவனைந்தின்பக், கண்ணிலழுந்தியிடுங்காண். (அன்றியும்.) சென்றிவன்று னென்றிற் சிவபூரணஞ்சிதையும், அன்றிவன்றானென்று மெனிலன்னியமா, மின் றிரண்டும் அற்றநிலையேதென்னி லாதித்தனந்தன்விழிக், குற்றமறநின் றதுபோற்கொள் எ ம். (திருவிளையாடல்.) பார்த்தபார்வையாலிரும் புண்டரீகனைப்பருகுந், தீர்த்தந்தன்னையுங் குருமொழிசெய்த தூந்தம் மைப், போர்த்தபாசமுந் தம்மையுமறந்து மெய்ப்போத, மூர்த்தியா யொன்று மறிந்திலர் வாதவூர்முனிவர் எ ம். (நிகழ்காலத்திரங்கல்.) சிவமொழிந்தற்றமைபாரீர் சேர்ந்து கலந்தமைபாரீர் நவமொழிந்தற்ற மைபாரீர் நாமவரானமைபாரீர் எ ம். ( அவிரோதவுந்தியார். ) அந்தப் பரத்தொடிரண்டற் றயிக்கமாமந்தநன் னிட்டையேயுந்தீபற, அத்து வித வீடென்றுந்தீபற எ ம். (கடவுளந்தாதி) மூச்சில்லையேது மொழி வதுமில்லை முனைமொழியப், பேச்சில்லையம்பலம் பேருமில்லை பிறந் திறக்க, நீச்சில்லைபள்ள நிலையுமங்காச் சுதுநின்றநிலை, யாச்சில்லை யென்று சற்றங்கேயிருக்கின்ற தானந்தமே எ ம். (கந்தரலங்காரம்.) போக்கும்வரவு மிரவும்பகலும் பறப்புமுள்ளும், வாக்கும்வடிவு முடிவு மில்லாவொன்றுவந்துவந்து, தாக்குமனோலயந் தானேதருமெனைத் தன் வசத்தே, யாக்குமறுமுகவா சொல்லொணாதிந்த வானந்தமே எ ம். (சொரூபசாரம்.) நானோவதுவோ வதுநானோ நானதுவோ, ஞானோ தயமோ நாதாந்தமோ மோனமோ, சுத்தமோ சூனியமோ தோற்றுஞ் சுபாவநிலை, யித்தனையுமல்லவாமே எ ம். ( சச்சிதானந்தவிளக்கம். ) பரமுமிதுபொருளு மிதுவழியுமிது தெளிவுமிது பதினாலுலோகமிதுவே பாசவினையாலெனது மோசமேமோசமிது பாழுறவுபாழானதே, உரமு மிருகாலோசை யிரவுபகலன்றியே யுட்சராசரமுமதிலேயொளிவெளியி லொளியாகி யுபநிடதநடனமா ,யூழிவிதியாழியெனவே, சிரமகுடமுடி யிலே கனகமணியிசையிலே சிவஞானதீபமதுபார், திருமருவு சிவ

சோதி மதிபெருகு சுதிவீடு தெரிசனைகளாகி முடியும், சரமுமது பதி சேவை சகலகலையனுராகசாயுச்சி பாதமருள்வாய், தற்பரானந்தசபை நிஷ்களானந்தசிவ சச்சிதானந்தகுருவே எ ம். (பாலையானந்த சுவாமிகள்.) ஞானமாமோட்சமிது தாண்டி மற்றநியாயமெல்லா மாயமானதடி தானசங்கற்ப விகற்பசமயமும் தன்மயமானது ஞானபெண்ணே. அன்றியும்) அண்டமும் பிண்டமும் பாழாச்சு வதற்கப்பாலும் பெரும், பாழாச்சு உண்டிலை யென்றபராபரப் பிரமத்தை யுகந்து கும்மியடியுங்கடி எ ம். (ஞானகுமி) அன்னியமற்றதே தானென்னில் ஜீவத்தோடே தடிதுபோய்த் தெளிவுவரிலாகாயத்தின் வடிவேதானாய்ப், பேசுமாந்தனுகாரணம் வாயுவைப் போலியங்கப் பொருந்துமவனை யீசனப்பெயலிவுதன்னி, லேகமாயண்டமெலாங் கடுகளவாய்த் தோன்றுமவை யகண்டாகார மதுவேயீசத்தெய்த, மாசமாயகண்டாகாரமு நீங்கிக்கடுகாவண்டமும் தோன்றுதவிடத் தத்துவிதநிலையே எ ம். (கைவல்லியநவநீதம்) இந்த நிச்சயமுத்தருளனுபவ மிருப்பதெப்படியென்று, சிந்தையற்ற பூமண்டலவிராஜனுஞ் சுகவும்போற் சுகமாவர், பந்தமுத்திகண் மறந்துபோமுண்டென்றுபலர்சொலினகையாவ ரந்தரதனையுண் டுமிழ்ந்ததோர் கொசுகெனுமவர்களை நகையாரோ எ ம். (அன்றியும்.) பிறந்ததுண்டானலன்றோ பிறகுசாவது தானுண்டாம், பிறந்ததேயில்லையென்னும் பிரமமாவதுவுநானே, பிறந்ததுநானென்றுகிற் பிரமமென்ற தந்ததானே, பிறந்தது மிறந்ததற்ற பிரமமானானே நானே எ ம். (தத்துவராயசுவாமிகள்.) உள்ளாய்ப்புறப்பா யுருவாயருவாகி, வெள்ளவெளிதானாய் வெறும்பாழாய் நள்ளிருளாய், அல்லாய்ப்பகலா யனைத்துமாயப்பாலாயெல்லாமாய் நின்றேனுமியான் எ ம். (திருவம்மானை) சத்தியமர்னது சத்தேகாணம்மானை, தற்போதம் போனவிடந்தற்பரமா வம்மானை எ ம் (செஞ்சொலமெகிழ்தல்) நீரொடுதண்ணளிவீண்டு நீரானவாரே போலுமொருபேரில்லாளேடொன்றிஞய் நெஞ்சமே எ ம். (திருப்புகழ்) அஞ்சுவித பூதமுங்கரணநாலு மந்திபகல்யாது மறியாத, வர்தநடுவாதி யொன்றுமிலதான தந்தவொருவீடு பெறுமாறு, மஞ்சுதவுசார லஞ்சயிலவேடர்

மங்கைதனைநாடி வனமீது, வந்தசாரூர விந்தமதுபாட வண்டமிழ் விநோத மருள்வாயே (அன்றியும்) சுட்டதுபோலாசை விட்டுலகாசாரத்துக் கமிலாஞான சுகமேவி, சொற்காரூரீத நற்குணமூடாடு சுத்தநிராதார வெளிகாண, மொட்டலர்வாரீச சக்ரசடாதார முட்டவுயீதேற மதிமீதாய், முப்பதுமாரூற முப்பதுவும் வேறான முத்திரையாமோன மடைவேனோ எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

முத்திரையை என்னுஞ்செய்யுண்முதல் இவ்விருபத்தேழு செய்யுளாலுஞ் சின்முத்திரையையும், அதை அனுபவித்தோரையும் அதைப்பெறுதற்குரிய ஆசனமுதலியவைகளையும், சாம்பவி நிஷ்ட்டையின் விதிகளையும், அதன்கண் அடைகின்ற நாதாந்தமுதலிய காட்சிகளையும், அவைகட் கதீதமாகிய மௌனநிலையின் இலக்கணங்களையும், அப்பியாசி அர்த்தாரூடன் பூரணாரூடன் ஆகிய இம்மூவர்கள்மேல் வைத்துக் கூறினார்

ஆத்மஞான நிஷ்ட்டையில் மயக்கமற ஏறமாட்டாதோர் அம்மயக்க நீங்கச் செபித்தற் குரியதாயும், ஆத்மாக்களுடைய மலங்களைப்பரிகாசஞ் செய்வதற்கு மூலமாயும், விளங்கிய பஞ்சாட்சரத்தின் முறைமையை மேலருளிச் செய்கின்றார்.

(ஆ-கை.) பஞ்சாட்சரம் இருவகைப் படுமென்பதையும் அவைகளை உபதேசிப்போ ரிவரென்பதையுங் கூறல்.

## வேறு.

அறைவேன்பஞ்சாக்கரவிதியை யதுதான் றூலசூக்குமமாம்
உறவேதிரோபமாதியா யுயிரீறுதற் றூலமதாம்
இறைமுன்ன சமலம்பின்ன விசைத்தல் சூக்கமிவைகடமை
முறையேசமயகுருஞான குருவான்மொழியப்படுங்காணே

(இ-ள்.) பஞ்சாட்சரத்தை (உச்சரிக்கு.) முறைமையைச் சொல்லு கின்றேன். (நீகேட்பாயாக.) அந்தப்பஞ்சாட்சரமானது ஸ்தூலபஞ் சாட்சரமென்றும், சூஷ்மபசாக்ஷரமென்றும் இருவகைப்படும். (அவற் றுள்.) திரோபர்க்ஷர முதலிலும் ஜீவாக்ஷரங்கடையிலும் பொருந்த (உச்சரிப்பாது) ஸ்தூலபஞ்சாட்சரமாம், பதியட்சரமுதலிலும் மலாட் சரங்கடையிலும் பொருந்த (உச்சரிப்பது.) சூட்சமபஞ்சாட்சரமாம். இவ்விருவகைப் பஞ்சாட்சரங்களைக்கிரமமாகச்சமயாசாரியராலும், ஞானா சிரியராலும். சொல்லப்படும். எ றுபின்னுகவென்பது, பின்னுவென விகாரமாயிற்று. தான் சாரியைகாண் முன்னிலையசை ஏ ஏ ஏ அசைகள்.

எனவே மொழிக்குமுதலில் நகாரமும், அதற்குமுன் மகாரமும், வரத்தொடுப்பது ஸ்தூலபஞ்சாட்சரமாம் இது சமயகுருவினுல் உபதே சிக்கப்படும் மொழிக்கிறுதியில் மகாரமும், அதற்கயலில் நகாரமும்வரத் தொடுப்பது சூட்சம பஞ்சாட்சரமாம். இது ஞானகுருவினுல் உபதே சிக்கப்படுமெனக் கொள்க

அவைவருமாறு, பக்தபஞ்சாட்சரத்தை உச்சரித்து நின்றதனுல் நவ்வென்னுந் திரோபதை இல்லையென்னும் பொருளைச்செய்வதாகக் கண்டுதானுக்; தான்சேடடிக்கிற ஆணவமும் ஆணவமிழப்பித்தசிவ மும், அருளும், இந்தவேறுபாடுகளெல்லாம் அறமயங்கின ஆன்மாவு மறச், சர்வசூன்யம்பண்ணுதலால் நவ்வாகிய திரோதையில்லை மவ்வா கியமலமில்லை சிவ்வாகியசிவமில்லை வவ்வாகிய அருளில்லை யவ்வாகிய ஆன்மாவில்லை இத்தூரபஞ்சாட்சரம் நின்றமுறைமை இவ்வாறுதரி சித்து இதில் ஆன்ம உபாதியாகிய மலத்தையும், சிவவாதியாகிய திரோபதையும், அறிந்து முன் கீழானசிவமும், அருளும், மேலாகத் திரோதையும் ஆணவமுங் கீழாக ஜீவாட்சரம் அருளினிடமாக நடுவே நிற்பது சூட்சமபஞ்சாட்சரம் உண்மையால் சிவானந்தம்மேலீடாவது. சிகாரம் இச்சிவானந்த வருளாவது வகாரம், இச்சிவானந்தமாகிய

சுகத்தைத்தான் அறநின்றனுபவிப்பது யகாரம் கீழான ஆணவத்தை யும், மேலானசிவத்தையும் அனுபவிப்பதான ஆன்மாவை மறைத்து நிற்பது நகாரம் ஆனந்தம் வாராமைக்குத்தான் கெட்டுச் சொல்லுவது மகாரம் எனவறிக. . . . . . .

(இ-ம்.) ஸ்தூலசூட்சம பஞ்சாட்சரங்களின் முறைமையையும் அவைகட்குரிய போதகரையும் அறிவித்ததாம்.

ஸ்தூலபஞ்சாட்சரம் ஈதென்பதற்குப்பிரமாணம். (திருநாவுக்கரை யர்.) இல்லகவிளக்கது விருள்கெடுப்பது, சொல்லகவிளக்கது சோதி யுள்ளது, பல்லகவிளக்கது பலருங்காண்பது, நல்லகவிளக்கது நமச்சி வாயவே எ ம். (திருவாசகம்.) நமச்சிபாயவாழ்க எ ம். (சிவவாக்கி யர்) ஓநமசிவாயமே வுலகமாவதுலகெலாம், ஓ நமசிவாயமே வுணர்ந்து மெய் யுணர்ந்ததும் எ ம். (பஞ்சாட்சரபதிபசுவிளக்கம்.) அஞ்செழுத் தினிலொருவிடை பதியெனவமரும், வஞ்சமுற்றுள வொருபுடை பாசமாய்வதியும், துஞ்சலின்றிய விடையினிற் பசுவெனத்துலங்கும், அஞ்செழுத்தினின் முழுமுதலறிந்தவர்பிறவார் எ ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

சூட்சமபஞ்சாட்சரம் ஈதென்பதற்குப்பிரமாணம். (வாதவூரர்புரா ணம்.) எவர்க்குமெய்ஞ்ஞானமா மஞ்செழுத்தைமுணர்த்தவேண்டி, யவத்தொழிலகற்றியாளுஞ் சிவத்தைமுன்னுகமாறித், தவப்பெருவடி வங்கொண்டார் தண்டமிழ்பாடுமென்பர், செவிப்புலன்வழியேசிந்தை புறைத் திருவாய்மலர்ந்தார் எ ம். (உண்மைவிளக்கஞ்சிந்தனை.) சிவ னருளாவிதிரோதம லமைந்து, மவனெழுத்தஞ்சினடைவாம் இவ னின்று, நம்முதலாயோதிலரு ளூடாதுநாடொருட், சிம்முதலாயோதுநீ சென்று. (அன்றியிம்.) அண்ணன்முதலா யழகாரெழுத்தஞ்சும், எண் ணிலிராப்பக லின்பத்தே நண்ணி, அருளானதுசிவத்தை யாக்குமணு

வை, யிருளானவைதீர வின்று. எ ம். திருவருட்பயன்.) சிவமுதலே யாமாறுஞ்சேரு மேற்றீரும் பவநீயோதும்படி எ ம். (திருவிளையாடல் சூக்கமாமஞ்செழுத்தினிற் சுற்றியபாசவீக்க, நீக்கியமெய்யானந்த விளை விலத்துய்த்துப், போக்குமிட்சியுட் புறம்பிலாப் பூரணவடிவ, மாக்கினு ளொரு தீவகம்போல் வருமண்ணல் எ ம். (திருவாசகம்.) நானேயோத வஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன், தேனாயின்ன முதமு மாய்த் தித்திக்குஞ் சிவபெருமான், தானேவந்தெனதுள்ளம் புகுந்தடி யேற்கருள்செய்தான், ஊனாருமுயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத் திடவே எ ம். ( பஞ்சாட்சரப்பதிபசுபாச விளக்கம். ) பானுவாமிறை யெழுத்து வதனொளிபரையெழுத்து, ஊனமில்கண்ணே யாகுமுயிரெ னுந் தனியெழுத்துத், தீனமில்விளக்கேயாகுஞ் செப்பியதிரையெ ழுத்து, நானெனுமிருளேயாகு நவையுருமவ்வெழுத்தே எ ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க. (34)

(அ-கை.) சூட்சமகாரண பஞ்சாட்சரங்களைத் தியானிப்பவர்களிவ ரெனல்.

(வேறு.)

பதின்மரிலொருவர் நூற்றினிலொருவர்
பகருமாயிரத் தினிலொருவர்
அதிசமாமிலக்கந் தன்னிலேயொருவ
ரறியகோடிகளினிலொருவர்
கதிதருசூக்கவஞ்செழுத்தினையே
கருதிடுபவர்களென்றறிதி
விதிதருபருவத் தவர்கள்காரணத்தை
விளங்குறச் செபித்திடத்தகுமால்.

(இ-ள்.) பத்துப்பேரில் ஒருவர் நூறுபேரில் ஒருவர் சொல்லு கின்ற ஆயிரம்பேரில் ஒருவர் அதிகமாகிய லட்சப்பேரில் ஒருவர் அருமையாகிய கோடிபேரில ஒருவர் மோட்சத்தைத் தருகின்ற இந்தச்சூட்சமபஞ்சாட்சரத்தைத் தியானிப்பார்களென் றறிவாய் கிரமமாகப் பரிபாகம் பட்டவர்கள் காரண பஞ்சாட்சரத்தை ஞானோதய மாகும்படி செபஞ் செய்யத்தகும் எ று. வ வ ஆல் அசைகள்.

எனவே, பெரும்பாலும் ஸ்தூலபஞ்சாட்சரத்தையே ஆசிரியர் உபதேசிக்க மாணக்கர் செபிப்பார்களென்றும், சூட்சமபஞ்சாட்சரத்தை உபதேசித்தல் அருமையென்றும், உபதேசித்தபோதிலும் மாணக்கர் சபித்தல் அருமையென்றும், இவ்விரண்டிலும்சிறந்தது காரணபஞ்சாட்சரமென்றும், அதுபரிபாகிகள் அல்லாத மற்றையோர்கள் செபித்து பரிக்கக்கூடாதென்றுங் கூறினாராயிற்று.

(ப-ம்.) சற்கருமங்களாலுஞ் சாந்திமுதலிய சாதுசங்கத்தாலும் ஜீவன்முத்தர்களைத் தரிசித்தலாலும், அவர்கள் பிரசாதத்தாலும் அடைந்து வராநின்ற மலபரிபாகிகளென்பார். விதிதருபருவத்தவர்களெனக் கூறினார்.

(இ-ம்.) முத்தியைத் தருகின்றதற்குரிய சூட்சமகாரண பஞ்சாட்சரங்களின் மகிமையைச் சொற்றென்பதாம். (35)

(அ-கை.) காரணபஞ்சாட்சரம் இன்னதென்பதையும் மகாகாரணத்தையுங்கூறல்.

(வேறு.)

அஞ்செழுத்தின்விதியெவ்வித
மென்னிலாியதூலமொடுசூக்குமமேவும்
பிஞ்செழுத்தினைத் தள்ளியேனின்ற
பெரியெழுத்தினைப் பினுமுனுநிறுவி

எஞ்சவில் லுயிர்கடுவிணி ளிலவவிசைத்தல்
காரணமாகுமென்றறிதி
விஞ்சுகல்லருளிறையதா மிதனைவிளங்கு
பக்குவர்க்கருள்வதுவிதியே.

(இ-ள்.) (மேற்சொல்லிய.) காரணபஞ்சாட்சரத்தின் முறை எப்படியென்றால். (சொல்லுவொங்கேளாய் உமையே.) அருமையுற்ற ஸ்தூலபஞ்சாட்சரத்தின் (முன்னும்) சூட்சம பஞ்சாட்சரத்தின் (பின்னும்) பொருந்தியிருக்கின்ற (அழியத்தக்கதாகிய) திரோப மலாட்சரங்களைநீக்கி மிகுதி பெற்றிருக்கின்ற பெருமைபொருந்திய பதி அட்சரஞ்சத்தி அட்சரமாகிய விரண்டையும் முன்னும்பின்னும் நிறுத்தி குறைவில்லாத ஜீவாட்சரத்தை மத்தியிற் பிரகாசிக்க இசைத்தல் காரண பஞ்சாட்சரமாகும் என்றறிவாய் இதற்கும் மேலிட்டுவிளங்கத் தக்கதாகிய மோட்சநன்மையைத் தருகின்ற அருளட்சரமும் இறை (அட்சரமுங் கூடியதே.) மஹாகாரணமாம் இந்த மஹாகாரணத்தை (இருவினையொப்பு மலபரிபாகஞ் சதுர்த்தாசத்திநிபாதம்.) விளங்கிய பக்குவர்களுக்கு உபதேசிப்பது கிரமமாம் எ று. ஒடுவென்பது இசை நிறை-ஏ-அசை,

ஸ்தூல பஞ்சாட்சரத்தின் விதிவிலக்காலாகிய காரணபஞ்சாட்சரத்தையும் மகாகாரணத்தைத் தீவரதரபரி பாகிகளுக்கே போதிக்க வேண்டுமென்பதையுங் கூறினரென்பதாம்.

காரணபஞ்சாட்சரம் ஈதென்பதற்குப் பிரமாணம். (பஞ்சாட்சரப் பதிபசுபாசவிளக்கம்.) நகரமாகிய சேதியை நெஞ்செனவெறுத்து, மகாமாகியமயமெல்லாம் வேறொமெறுத்து, வகரமாகியவனத்தினி லிருந்தினைப்பாறிச், சிகரமாய நகரினை யடைந்தனன்சீவன் எ ம். (கண்ணுடையவள்ளல்.) அஞ்சக்கரமன்றி வேறொருமந்திரமாயினில்லை, அஞ்சிவிறைபருளாவிதி ரோதை சில்லாணவமற், றஞ்சிவிரண்டையருளால

கற் றிடிலாவியந்த, வஞ்சிலிரண்டையனையுமென்றான் கச்சியேகம்பனே. (அன்றியும்.) ஒரு தலைமாணிக்கமுன்னரெனக் குபதேசஞ் செய்தான், இருதலைமாணிக்கம் பின்னரும்பேசி யிருளறுத்தான்; இரி தலைமற்றறை யயயன்றலைகுட்டிய கங்கையின்மூ, வெரிதலைச்சூலத் தொடுநடிப்பான் கசசியேகம்பனே எ ம். (திருமந்திரம்.) அஞ்சுநடுவே யழியாத்தலங்காட்டி, நெஞ்சிநடுவே நிறுத்தினென்னந்தி, பஞ்சாக் கரத்தைப் பகாந்துபதிகாட்டி, அஞ்சிலிரண்டை யறுத்தனனந்தியே எ ம். வரும் மற்றும் வருவன வற்றாற் காண்க.

மஹாகாரணம் ஏதென்பதற்குப்பிரமாணம். (திருமந்திரம்.) வாசி வர்வென்று வாசியைவைத்து, வாசியோடோன்றவகையறிவாரில்லை, வாசியோடோன்றவகையறிவாளர்க்கு, வாசியோடீசன் மகிழ்ந்திருந் தானே எ ம். (பஞ்சாக்ஷரப்பசுபதிபாசவிளக்கம) பாசமாகியவிரண்டை யும்படிறெனத்தள்ளி, தேசமாகியவிரண்டையு நெஞ்சிடையழுத்திக், காசநீங்கியகண்ணெணமுத்தியைக் காண்பாய், ஆசைநீங்கியநிலையிது விதற்கிலையையம் எ ம். (கண்ணுடையவள்ளால்.) மந்திரமாவது மஞ் செழுந்தேயர்ந்த மந்திரத்தில், ஐந்துபொருளையுங் காட்டியிரண்டின் வழியடைத்து, மூன்றுமிரண்டின் வழியைசதிறந்துயர்முத்திதந்தான், கந்தன் கணபதிக்கப்பன்கலிக்கச்சிரேகம்பனே எ ம். (தாயுமானசுவாமி கள்.) ஆரணமார்க்கத்தாகமவாசி யற்புதமாய்நடர்தருளும், காரணமு ணர்த்துங் கையுநின்மெய்யுங் கண்கண்மூன்றுடையவென்கண்ணே, பூரணவறிவிற்கண்டிலமதனாற் போற்றியப்புந்தியோடிருந்து, தாரணி யுள்ளமட்டுமேவணங்கத்தமியனேன்வேண்டிடத்தகுமே எ ம். (திரு வருட்பயன்.) வாசியருளியவைவாழ்விக்கு மற்றதுவே, மாசிலுருவமு மாமங்கு எ ம். வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

(அ-கை.) மேற்சொல்லிய பஞ்சாக்ஷரத்தில் இரண்டெழுத்தை நீக்குவது என்னையென வினவுதலும அதற்கு உத்தரமுங்கூறல்.

## வேறு.

இந்தவஞ்செழுத்தி லிரண்டெழுத்தொழிப்ப
தென்னையென் றுமையவள் வினவ,
அந்தமி லின்ப துன்பவேதனையி
லழுத்துவ திரண்டெழுத்தாமல,
சிந்தனைக்கரிய சிவமிருபாலுஞ்
சேர்ந்துயிர் நடுவணைந்திலகும்,
ஐந்தெழுத்திதனைப் போதகாரணமா
மதுமுத்திக்குறு துணையாமே.

(இ-ள்.) இந்த இந்நாலசூக்ஷ்ம பஞ்சாக்ஷரங்களிலிருக்கின்ற நகார மகாரங்களிரண்டையும் நீக்குவது என்னகாரணமென்று தேவியானவர்கேட்கப் (பரமசிவனார்.) அநுக்கிரகிக்கின்றார்: முடிவில்லாத சுகதுக்கத்தாலாகிய பவரோகத்தில் முழுகச்செய்வது அவ்விரண்டெழுத்தாகும் (அவைநீங்க.) மகைச்சால் நினைப்பதற்கரிய பரசிவாக்ஷரஞ் சத்தி அக்ஷரமாகிய இரண்டும் முன்னும்பின்னுமாகச்சேர்ந்து ஜீவாட்சரம் நடுவிற்பொருந்திப்பிரகாசிக்கின்ற அஞ்செழுத்தையே காரணபஞ்சாட்சரமென்று சொல்லப்படும். அதுவேமோட்சத்துக்கு மிகுந்த துணையாகும் எ-று. ஆல் ஏ அசைகள்.

(ப-ம்.) ஒருவன் தன தாத்மசொரூபத்தை அறிகின்ற பரிபாக காலம் வருமளவும் சுழல்காற்றிலலைகின்ற பஞ்சுபோல எக்காலமும் பவசாகரத்தில் மயக்கமுற்று மூழ்கிநிற்பதற்குரிய ஒழிவின்றிய அகங்கார மமகாரங்களைத் தருகின்ற உபயாட்சரமென்பார். அந்தமிலின்ப துன்ப வேதனையிலழுத்துவ திரண்டெழுத்தென்றும், அக்கடலுள் மூழ்கிக் கிடக்கின்றவனை முத்தியாகிய கரையிற்சேர்ப்பதற்கு முத்திபஞ்சாட்

சரமாகிய தெய்வமே மூலமாகுமென்பார். ஐந்தெழுத்தினையே காரணமெனலாமென்றுங் கூறினர்.

(இ-ம்.) பஞ்சாட்சரத்தினது சலட்சண விலட்சண வர்ணங்களின் குணங்களை அறிவித்ததாம்.

பவசாகரத்தைக்கடக்க முத்திபஞ்சாட்சரமே தெய்வமென்பதற்குப்பிரமாணம். (திருவாசகம்) தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெய்வத் தடர்திரையா லெற்றுண்டு பற்றொன்றின்றிக் கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற் கலக்குண்டு காமவான் சுரவின்வாய்ப்பட்டினி யென்னேயுய்யுமாறென்றென்றெண்ணி யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை, முனைவனே முதலந்த மில்லாமல்லற் கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே. என்பதனாற்காண்க.

(அ-கை.) மஹாமநுவின் பெருமையைக்கூறல்.

விதிசேர்பஞ் சாட்சரத்தனை
விளங்கவுரைத் தோமினியம்பல்
பதியின்மனு வாமந்த்ரமுளத்திற்
பதித்தோர் பரமபதமடைவார்
கதிசேர்செபமு நீங்காதோர்
கருதப்படுவனை யடையாரோ
மதிசேர்சடை யெம்மானுமையை
மகிழவுரைத்தான் வாய்மலர்ந்தே.

(இ-ள்.) (கேளாய் உமையே.) கிரமமாக ஸ்தூலசூட்சுமகாரண பஞ்சாட்சரத்தை (மஹாகாரணத்துடன்.) விளங்கும்படி (விவரமாகச்) சொன்னோம் இனிமேற் சொல்லவேண்டியது பதியட்சரமாகிய மஹா மந்திரமாகும் அப்பதியட்சரத்தை உள்ளத்திற் பொருந்தச்செய்தவர்கள்

மேலான மோட்சத்தை அடைவார்கள் நன்மார்க்கத்திற் சேர்க்கத்தக்க அந்தமனுவைச் சதாதியானிப்பவர்கள் விரும்பிய நற்பயனையே பெற்றுக்கொள்ளுவார்களென்று பார்வதியார் சந்தோஷிக்க இளம்பிறையணிந்த சடையினையுடைய எமையாண்டவராகிய பரமசிவனார் திருவாய் மலர்ந்து அநுக்கிரகித்தார் எ று. இன் சாரியை எ அசை.

(ப-ம்.) கிரியாதியாணங்களில் இளைத்திளைத்து நிஷ்காமியத்தையடைந்த மனமானது மேலடையவேண்டியது ஆத்மவிசாரமென்பார், கருதும் பலனென்றார்.

(இ-ம்.) மஹாமனுவை இதயத்தில் அடக்கினவர்கள் முத்தியும் செபிக்கின்றவர்கள் ஆத்மவிசாரமும் பெறுவார்களென்பதாம்.

பதியட்சாமும் இத்தன்மைத் தென்பதற்குப் பிரமாணம். (திருமந்திரம்.) நாயோட்டுமந்திர நான்மறைவேதம, நாயோட்டுமந்திர நாதனிருப்பிடம், நாயோட்டுமந்திர நாதாந்தச்சோதி, நாயோட்டுமந்திர நாமறியோமே, என்பதனாற்காண்க. (38)

(அ-கை.) அம்மனுவை உள்ளடக்கத்தக்க பேறிவுடையோனே சாட்சாத்சிவமெனல்.

சினைத்தினிடத்து மூவகைகாரியனுந்
சிலேசனிடத்து மனையிடத்தும்
மனைத்தான்மொழியாற் கூறத்திடையும்
மருளுஞுமலியிடத்தினுந்தான்
எனைத்துணையுமவ விடாதத்தி
னிடையேயுப்பானிறைபெயழுந்தை
மனைத்துக்கரிய யாமவனே
யென்றான்பரமன் மலைமகட்கே.

(இ-ள்.) பதியக்ஷரத்தைக் கோபத்தினாலாயினுஞ் சந்தோஷத்தினாலாயினும் (பகைவனிடத்தாயினும்.) சினேகனிடத்தாயினும், இல்லாளிடத்தாயினும், குழந்தையினிடத்தாயினும், பயங்கொள்ளச்செய்யும் நாயிடத்தாயினும், மற்றும் எத்தன்மைப்பட்ட விடத்தாயினும் மனத்தினாலும், சொல்லினாலுஞ் சோரவிடாமல் நெஞ்சினிடத்திலேயே செலுத்தத்தக்கவனே மனத்தாலும் நினைத்தற்கரிய நாமென்றுசொன்னார் பரமசிவனார் உமாதேவிக்கு எ-று. ஏ ஏ அசைகள். சினேகனென்றமையால், பகைவனென்ன வருவிக்கப்பட்டது.

(இ-ம்.) வெளிப்படை (39)

(அ-கை.) அம்மனுவை யுள்ளத்தி லடங்காதவர்கள் செய்வன பயன்படாவெனல்.

## வேறு

பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணும்பூசை யவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுஞ்சபமு மவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுந்தவமு மவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுமறங் களவமாமே.

(இ-ள்.) பதியக்ஷரத்தை விட்டவர்கள் செய்கின்றபூசை வீணாகிப்போகும் பதியக்ஷரத்தை விட்டவர்கள் செய்கின்றசெபமும் வீணாகிப்போகும். பதியக்ஷரத்தை விட்டவர்கள் செய்கின்ற தவமும் வீணாகிப்

போகும், பதியக்ஷரத்தை விட்டவர்கள் செய்கின்ற ஆத்மவிசாரமாகிய தருமமும் வீணாகிப்போகும் எ று. ஏ அசை.

(இ-ம்.) வெளிப்படை. (40)

( அ-கை. ) அம்மனுவை மனதிலடக்கினோர்க்கே மஹா காரணத்தை உபதேசிக்கத்தகுமெனல்.

## வேறு.

இங்கிலையா மிறையெழுத்தை யுளத்தடக்குவோனே
யிவ்வுடம்பினோ டிருந்துமிலகுபரகதியை
அங்கிலையே யடைவனென வண்ணன்மலைமா
துக்கறைந்தனனு லந்தமோரண்டு ளத்திலடக்குந்
தங்கிலைமையுடையவர்க்குப் பரகுரவன்மகிழ்ந்தே
சாற்றுமா காரணத்தைத் தமதுளத்திலடக்கா
நன்னிலையாம் பக்குவமிலாதவர்க்குத் தானேநவின்
றிடவொண்ணா தனவேநவிலுவர் நல்லவரே.

(இ-ள்.) இத்தன்மையாகிய பதியக்ஷரத்தை மனத்தினிடத்தில் அடக்கத்தக்கவனே இத்தேகத்தோடிருந்தும் அங்கிலைப்படியே பிரகாசிக்கின்ற மோக்ஷத்தை அடைவானென்று பரமசிவனூர் உமாதேவிக்கு அநுக்கிரகித்தார் அந்தப் பதியக்ஷரத்தையும் ஒருவருஷம் மனத்தினிடத்தில் அடக்கத்தக்க தமது நிலையையுடைய பக்குவர்களுக்கே மஹா காரணத்தை உயர்ந்த ஞானசாரியர் சந்தோஷித்துச் சொல்லக்கடவர் அந்தப் பதியக்ஷரத்தைத் தமதுள்ளத்தில் அடக்காத நன்னிலைக்குரிய பரிபாகிகளல்லாதவர்களுக்கு அந்த மஹாகாரணத்தைச் சொல்லத்தகாதென்று சொல்லுவார்கள் மேலோர்கள் எ று. தான் சாரியை ஏ ஆல் ஏ ஏ ஏ இவ்வாறும், அசைகள்.

(இ-ம்.) ஆசிரியர் சற்சீடனுக்கு மஹாகாரணத்தை உபதேசிக்க வேண்டுமாயின் ஒருவருஷம் அவனைச் சோதிக்கவேண்டுமென்பதாம்.

(அ-கை.) காரண மஹாகாரணங்களை கிராசையால் போதிப்போர் ஆசிரியரென்றும் ஆசையால் போதிப்போர் அனுசாரியரென்றும் அவ்வகளை உபதேசித்தற்குரிய முறைமையோர் இவர்களென்றுங் கூறல்.

## வேறு.

ஞானதேசிகன் மாகாரணப்பொருளை
நவிலுதற்குரி யவனாமால்
ஈனமாம்பொருளி னிச்சையாலிதனை
யியம்புவோன்றே சிகப்பதாராம்
மோனதேசிகனே முத்தியின்பொருளை
மொழிதவனருளிறை முடிவில்
ஆனதேசிகன் மாகாரணந்தன்னை
யருளுவனாகம வழியே.

(இ-ள்.) காரண மாஹாரணப்பொருள்களைப் பரிபாகிகளையறிந்து கிராசையால் உபதேசித்தற்குறியவர் ஆத்மஞானகுருவாவர் அற்பமாகிய திரவியாபேட்சையினாலே இவற்றை சொல்லத்தக்கவர் ஆசிரியப்பிரஷ்டராவர் (இவற்றுள்.) காரணபஞ்சாட்சரத்தை மௌனாசிரியரே உபதேசித்தற் குரியவராவர் மஹாகாரணத்தை அருளிறைவடிவங்கொண்ட சிவஞானதேசிகருஞ் சிவாகமங்களின் முடிவிற்சொல்லிய முறைமைப்படி உபதேசஞ்செய்வார் என்று. ஆல் ஏ அசைகள்.

(இ-ம்.) மாணுக்கரது பரிபாகத்தையறிந்து இருவிதப்பொருள்களைப் போதிப்பவர்களே ஆசிரியர்களென்பதாம். (42)

(அ-கை.) கிஷ்டை அகிஷ்டை இவையெனல்.

இப்படியாயவுபய நன்னுமனை
யெழிற்குருவரு ளிடப்பெற்றுச்
செப்பருஞ்செபமுஞ் செபியா தஞ்செபிக்கச்
சிந்தையுமோயும தோய்ந்தாய்
அப்படிதானே யாதனங்கட்டி
யசைவறவிருப்பதே நிட்டை
துப்புறுகாரணமனை யுமேயாற்
றரிசுளவநிட்டை யென்றுணரே.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட இரண்டட்சரங்களாகிய நலமான மஹாகாரண மந்திரத்தை ஞானசுந்தரம் பொருந்திய ஆசிரியர் அநுக்கிரகிக்கப்பெற்றுச் சொல்லுதற்கரிய செபத்தையுஞ் செய்யாமற்செய்ய மனமும் ஒடுங்கும் அம்மனம் ஒடுங்கினால் அவ்வண்ணமே அங்காசனம் உண்டாக்கிக்கொண்டு சலனமில்லாமலிருப்பதுவே ஞானநிஷ்டையாகும் பரிசுத்தம் பொருந்திய அந்தக்கரணஞ் சலிக்குமாயின் குற்றமுள்ளதாகிய அநிஷ்டையென்று அறிந்துகொள்வாய் எ-று. தான் சாரியை ஏ அசை.

(ப-ம்.) மஹாகாரணப்பொருளைப் பெற்றவன் ஏகாந்தஸ்தானத்திலிருந்து மனதைக்கண்டத்தில் அசைவறநிறுத்தி அப்பொருளை நினையாமல் நினைக்கவேண்டுமென்பார். செபியாது செபிக்கவென்றும், (அங்ஙனம்) நினையாமல் நினைக்க அதிலெழுஞ்சுகத்தினால் அம்மனமும் உன்முகப் படுமென்பார். சிந்தையுமோயுமென்றும், தன்மாத்திரைகளின் சாத்வீக அம்ஸ சமஷ்டியில் தோன்றியதெனவும், எப்பொருளையும் அறிதற்குக் கருவியெனவுங் கூறுவார். துப்புறுகாரணமென்றுங் கூறினார்.

இ ம்.) மனத்தை நசித்து அறிவாய் விளங்குவதே பிரமநிஷ்டை
பதாம்.

சிந்தையானதுவோயின் அப்படியே அசைவற் றிருக்கவேண்டு
பதற்குப் பிரமாணம். (நாலடி) ஊக்கித்தாங்கொண்ட விரதங்க
ளுடையத், தாக்கருந்துன்பங் கடாந்தலைவந் தக்கால், நீக்கிநிறு
வோரேநல்லொழுக்கங், காக்குந்திருவத்தவர் எ ம். (திருவள்
.) எண்ணியவெண்ணியாங் கெய்துபவெண்ணியார், திண்ணிய
பெறின். (அன்றியும்) துன்பமுறவரினுஞ் செய்கதுணியாற்றி,
ம்பயக்கும்வினை எ ம். (அருட்பிரகாசம்.) கடைதருதீப்புகை கால்
தங்கொடு கைநெகிழ்ந்து, விடினவிந்தாக்கவொணுத்துய ரெய்த
வெம்பொறிவாய்ப், படர்தருசித்த மொருகாலடங்கிற் பிணைப்பட
தடைசெயல்வேண்டும் படர்ந்தாலெவர்பின் றடுப்பவரே எ ம்.
னவாசிட்டம்.) வருந்திமுயன்றுமனந்தன்னை மாற்றியில்லையுண்
ஞ, திருந்தபதத்திலிருந்திடுவா யிடர்தீர்நெஞ்சமிடரின்றிப்,
ருந்தல்வேண்டுமெனம்வென்றுற் புவனமூன் றுந்துரும்பாகுந், திருந்த
லென்றெனவெல்லாந் தீதாய்த்தோன்றின் மனமாளும் எ ம்.
விகாலோத்திரம்.) ஆராதசித்தமானதோர்காலத் தடங்குமாறுற்,
மல்வருந்திக்காத்தப்பின்னைச்சிந் தனைகள்சென்று, சாராமல்
வாறுதடுத்துச் சார்வானவெல்லாஞ், சேராமன்மயக்க நீக்கித்திர
செய்துகொள்வான் எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

இதிற்கூறிய ஸ்தூல பஞ்சாட்சரமாதியாய் வருவனவற்றைக்
ம்பிரதாயத்திற் கேட்டுணர்க.

அறைவனென்னுஞ்செய்யுண்முதல் இப்பத்துச் செய்யுளாலும்
ஞ நிஷ்டையிலுதிக்கும் மயக்கநீங்கும்படிச் செபித்தற்குரிய பஞ்
சாட்சரந் திரிவிதமா மென்பதையும் மஹாகாரணப் பொருளையும்
அவற்றுள் சலட்சண விலட்சண [illegible]ளின் பயன்களையும் அவற்

றுட் காக்கவேண்டிய அட்சரம் இத்தன்மைத்தென்பதையும் அ[illegible] குரிய ஆசிரியரையும் மாணுக்கரையும் நிஷ்ட்டையின் அனுபவ நி[illegible] தையுங்கூறினுர்.

(அ-கை.) முன்சொல்லிய மயக்கநீங்காத நிஷ்ட்டாபரர்கள் [illegible] டைவதை அருளிச்செய்கின்றுர்.

இந்நிலைமுத்தியடைந்தவர் சநந
　　மெடாதொழித்திடுவரேயானல்
முன்னமோதிடுமப்மூடநீங்காதோர்
　　முத்தியையுறும்வகையுரையென்
றுன்னியேயுமையாள்வினவிலுமவர்தா
　　முற்றசாதனையைநீங்காது
மன்னியேபிறந்தாலமறுசநநத்தில்
　　வளமைவீடுறுவரென்றிசைத்தான்.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட நிலையைப்பெற்று (மயக்கநீங்[illegible]) சீவன்முத்தியை அடைந்தவர்கள் மறுசன்மத்தைத்தாங்காமல் ஒழி[illegible] பார்களேயானுல் முன்சொல்லிய (அச்சிவயோகத்திற்சேருன்[illegible]) அந்தமயக்க நீங்காதவர்கள் மோட்சத்தைப் பெற்றுக்கொள்ளும்[illegible] யைக் கிருபைசெய்யவேண்டுமென்று தேவியானவர் யோசித்துக்[illegible] அந்தமயக்கநீங்காதவர் தாமடைந்தநிஷ்ட்டையில் இடைவிடாமல்[illegible] பெற்றிருந்து இறந்துபோவாராயின் மறுசன்மத்தில் சிவஞான[illegible] டையைப்பெற்றுமயக்கநீங்கி வண்மையாகிய மோட்சத்தைப் பெ[illegible] கொள்ளுவாரென்று சொன்னுர் பரமசிவனுர் எ று. ஏ ஏ அதை[illegible]

(பம்.) ஞானசமஸ்காரமுடையவர் தமக்குப் பரமசிவமேகுரு[illegible] தமாக வெழுந்தருளிக் காருண்யத்தால் திருவடிகளைச்சிரத்திற்[illegible] அஸ்தமஸ்தக சையோக[illegible] பார்த்து நினைத்து விபூதி[illegible]

த்திருந்தபடி யிருந்துகாட்டிய, மயிர்ப்பாலமீதிற் சுத்ததெளிவு ண்டேறிச் செல்லும், உண்மைநிலையில் முத்திசகலமும் முத்தி வலமும்விட்டு நீங்கிச் சும்மா அசைவறநின்று சீவன்முத்தராமே ன்பார். இந்நிலை முத்தியடைந்தவரெனக்கூறினர்.

(இ-ம்.) அர்த்தாரூடர்கள் பூர்ணாரூட ராவதற்கு முன்னம் தேகவி யோகத்தை யடைந்தால் மறுசநநத்தில் முத்திபெறுவர்களென்பதாம்.()

(அ-கை.) புமான்கள் நிர்மலநிஷ்டையைப் பெறுவதற்கேது வைக்கூறத்தொடங்கல்.

உற்றமெய்ந்நிட்டைவிடா துசாதித்தோ
ருருவர்நன்முத்தியைமேயவருறும்
மற்றவம்மூடநீங்கிலார்முத்தி
மறுபத்துறுவரென்றுரைத்தீர்
குற்றமினிட்டையடையுங்காரணத்தைக்
குறுகநீயுரையெனவினவப்
பற்றறுபரமனுமையவண்மகிழப்
பண்பொடுபகர்தன்மேயினனால்.

(இ-ள்.) மெய்ஞ்ஞானம் பொருந்திய நிட்டையை இடைவிடா சாதனஞ் செய்தவர்கள் நல்லமோட்சத்தை அடைவார்களென்றும் வருகிய அம்மூடத்தன்மை நீங்காதவர்கள் மறுசன்மத்தில் மோட் த்தைப்பெற்றுக்கொள்ளுவார்களென்றுந் திருவாய்மலர்ந்தீர் சவுந் ரிய சிரேஷ்டரே, தேவரீர்குற்றமில்லாத நிஷ்டையை (இனியு ர்கள்.) அடைவதற்கேதுவை அநுக்கிரகிக்க வேண்டுமென்றுகேட்க யாரகிதராய் பரமசிவனார் பார்வ[illegible] மகிழும்படி பரமசாந்த, குணத் டனே சொல்லத்தொடங்கினர் எ று. ஆல்

(ப-ம்.) பந்தமுத்திகள் தோன்றாமல் விளங்குகின்ற தன்மயச யென்பார் குற்றமி னிட்டையெனக்கூறினார்.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) ஆசிரியர் உபதேசித்ததிற் சந்தேகமடைந்தவனு முப்பத்தாறாவது சநநத்தில் முத்தியெனல்.

வேறு.

செய்யுநிட்டையைச் செப்பத் தெளிகிலா
தையமாக வகத்திற் காருமவன்
உய்யுமுப்பத் தாறும்பவத்தினில்
வையநீங்கியே மன்னுவன் முத்தியில்.

(இ-ள்.) மஹான்களாற் செய்யத்தக்க ஞானநிட்டையை ஆசி உபதேசிக்க. (உண்மையென்று) தெளியாமல் சந்தேகமாக மனத் நினைத்துச் செய்கின்றவன் (அச்சனனமுதல்) முப்பத்தாறாவது சன தில் இப்பூமியிற் பிறவியை யொழித்து உச்சீவிக்கும்படி மோட்சத் சேர்ந்து நிலைபெற்றிருப்பான் எ-று. ஏ அசை.

(இ-ம்.) சதாசாரியர் அநுக்கிரகிக்கப்பட்ட நிஷ்டையைச் தியமாகக் கொள்ளவேண்டு மென்பதாம்.

(அ-கை.) பிரம்ம நிஷ்டர்களுண்டென்று நினைப்பவனுக்கு பத்தினான்காவது சனனத்தில் முத்தியெனல்.

உண்மை நிட்டரு முண்டென் றுளத்திடை
திண்மையாகச் சிந்தனை செய்பவன்
நண்மைமுப்பத்தி[illegible]ம் பவத்தினில்
வண்மையா[illegible] மெய்ம் முத்தியின் நண்ணுவான்.

(இ-ள்.) மெய்ம்மையாகிய பிரம்ம நிஷ்டர்களும் (உலகத்தில்) உண்டென்று மனதினிடத்தில் நிச்சயமாக எண்ணி நன்மைபொருந்தத் தியானஞ்செய்கின்றவன் முப்பத்திரெலாவது சனனத்தில் வளமை பெறும்படி நடுநிலைமையாகிய உண்மை மோட்சத்தைப்பெற்று நிலை பெறுவான் என்று.

(இ-ம்.) மஹாகன்ளெங்கு முண்டென்று தியானிப்பவன் புமான்களுள் புண்ணியோத்தம னென்பதாம்.

(அ-கை.) சாதுக்கள் மஹாவாக்கியம் உசாவுங்காலத்தி லிருந்து கேட்டவனுக்கு முப்பதாவது சனனத்தில் முத்தியெனல்

ஞானநிட்ட ரிருக்குமந் நாட்டினில
மோனவார்த்தை மொழிந்திடக் கேட்டவன்
தானுமுப்பதா மாகநஞ் சனத்தினால்
ஆனமுத்திப் பதத்தை யடைவனால்

(இ-ள்.) பிரம்ம நிஷ்டர்களிருக்கும் அழகியநாட்டில் மோன நிலைக்குரிய மஹாவாக்கியத்தைச்சொல்ல (உணர்வின்றிக்) கேள்விப் பட்டவனும் முப்பதாஞ் சனனத்தில் (முன்) னேரிட்டதவத்தினால் மோட்சமாகிய பதம் அடைவான் என்று. தான் ஆல் அசைகள்.

(இ-ம்.) சத்துக்களிடத்தில் வேதாந்த சிரவணம் அவசியங்கொள்ளவேண்டு மென்பதாம். (48)

(அ-கை.) பிரம்ம நிஷ்டர்கள் வசிக்க இடங்கொடுத்தவனுக்கு இருபத்தெட்டாவது சனனத்தில் முத்தியெனல்.

செப்பநிட்டா பருக்குச் சிந்தையோ
டொப்பின்மாட மோடீக்ஷமுஞ் செய்பவன்
இப்புவிக்க ணிருபத்தெட் டாம்பவந்
தப்பிலாதமெய் முத்தியைச்சாருமால்

(இ-ள்.) சொல்லும்படியான ஞானநிஷ்டாபருக்கு அன்போடும் ஒப்பிலாத மாளிகையைத்தந்து சந்தோஷம் உண்டாகச் செய்கிறவன் இப்பூமியினிடத்தில் இருபத்தெட்டாவது சனனத்தில் குற்றமில்லாத உண்மையாகிய மோட்சத்தை அடைவான் எ று. ஆல் அசை.

(இ-ம்.) பிரம்மநிஷ்டர்களுக்கு அன்புசெய்யாதவன் இப்பூமியில் மானிடனாய்ப் பிறந்ததிற் பயனின்றென்பதாம். (49)

(அ-கை.) பிரம்மநிஷ்டர்களுக்குச்சதா அமுதுபடைத்தவனுக்கு இருபத்தைந்தாவது சனனத்திற் முத்தியெனல்.

ஞானநிட்டா பராருக்குநாடொறும்
போனமாதி பொருந்தவுதவுவோரய்
ஈனமிலலா விருபததைந்தாம்பவம
மானமுத்திமையை மனுதுயிண்ணமே

(இ-ள்.) பிரமநிஷ்டாபாருக்கு நாள்தோறும் போசனமுதலானவைகலைத் தக்கபடி கொடுக்கிறவன் இழிவில்லா இருபத்தைந்தாவது சனனத்தில் மேன்மைபொருந்திய மோட்சத்தைப் பெற்றுக்கொள்ளுதல் நிச்சயமாம் எ று. ஏ அசை போசனமென்பது போனமென நடுக்குறையாய் வந்தது.

(இ-ம்.) அறிவாலுயர்ந்த பெரியோர்களுக்கு அன்போடும் அமுதுபடையாதவனுக்கு நற்கதிகிடையா தென்பதாம். (50)

(அ-கை.) பிரமநிஷ்டர்கள் உடுக்க வஸ்திரங் கொடுக்கின்றவனுக்கு இருபத்திரண்டாவது சனனத்தில் முத்தியெனல்.

நிட்டைமேவு நிருமலயோகியர்
கட்டவேகற் கலைகளுதவுவோன்
இட்டமா யிருபத்திரண்டாம்பவத்
தெட்டரும்பத மெய்துவதுண்மையே.

(இ-ள்.) பிரம்மநிஷ்டையைப் பொருந்திய மலரகிதமாகிய யோகீஸ்வரர்கள் உடுக்கும்படி நல்லவஸ்திரங்களை இஷ்டமாகக் கொடுப்பவன் இருபத்திரண்டாவது சனனத்தில் அவரங் மனோகோசர மாகிய பதத்தைப் பெற்றுக்கொள்வது நிசமாம் எ று. ஏ அசை.

(இ-ம்.) நிஷ்டாபரர்களை வஸ்திராலங்காரஞ் செய்து பாராத வன் முகத்திற்படைத்த கண்புண்ணெண்பதாம். (51)

(அ-கை.) பிரம்மநிஷ்டர்களுடையபதத்திற் பணிகின்றவனுக்கு இருபதாவது சனனத்திற் முத்தியெனல்

சாதனைக்குள் முபலுந்தைகமியார்
பாதமுச்சிப் படியப்பணிபவன்
ஓதுமங்க மொருபதிற்றுடியில்
நீதில்வீடு பெறுவது நிண்மையே

(இ-ள்.) பிரம்மநிஷ்டையிற் முயற்சிசெய்யத்தக்கபெருமைபொ ருந்தினவர்களுடைய திருவடிகளிற் சிரசுபொருந்தும்படி வணங்கத் தக்கவன் சொல்லுகின்ற இருபதாவது சனனத்தில் குற்றமற்ற மோக்ஷ வீட்டைப் பெற்றுக்கொள்வது நிச்சயமாம் எ று. ஏ அசை.

(இ-ம்.) பிரம்மநிஷ்டர்களுடைய பாததாமரையில் வணங்கத்தக் கவனே மகாபுருஷனென்பதாம். (52)

(அ-கை) பிரம்ம நிஷ்டர்களிடத்தில் இலிங்கமூர்த்தியைப்பெற் றவனுக்குப் பதினேழாவது சனனத்தில் முத்தியெனல்.

ஒப்பிலாதநல் லுண்மைநிட்டாள்கையிற்
செப்புதாரணஞ் செய்துகொள்கிற்பவன்
தப்பிலோர்பதி னேழுந்தனுவினில்
எய்ப்பின்முத்தியை யெய்துவதுண்மையே.

(இ-ள்.) நிகரில்லாத நலத்தைப் பொருந்திய சத்திய ஞானநிஷ்டட்டாபாரிடத்திற் சொல்லும்படியான இலிங்கதாரணையைப் பெற்றுக் கொள்பவன் தவறுதலில்லாமல் ஒப்பற்ற பதினாறாவது சனனத்தில் அழியாத மோட்சத்தை அடைவது சத்தியமாம் எ று, ஏ அசை.

(இ-ம்.) பிரம்ம நிஷ்டட்டாபாரால் சிவபூசையைப் பெறுகின்றவனே தேவர்களுள் சிறந்தவனென்பதாம். (53)

(அ-கை.) பிரம்ம நிஷ்டட்டர்களிடத்திற் பணிவிடை செய்கின்றவனுக்குப் பன்னிரண்டாவது சனனத்தில் முத்தியெனல்.

சாற்றுநிட்டையைச் சார்ந்தமெய்ஞ்ஞானிபால்
ஆற்றுநற்பணியின் பொடுசெய்பவன்
ஏற்றுமீரா றியானநனுவிலிற்
போற்றும்வீடு பொருந்துவதுண்மையே.

(இ-ள்.) சொல்லும்படியான ஞானநிஷ்டட்டையைஅடைந்த உண்மையாகிய ஞானவான்களிடத்திற் செய்யத்தக்க நற்பணிவிடைகளைப் பக்தியோடுஞ் செய்கின்றவன் மேன்மைபொருந்தச் செய்யும் பன்னிரண்டாவது சனனத்தில் யாவராலுந் துதிக்கத்தக்க மோட்சவீட்டைச் சேருவது சத்தியமாம் எ று. ஏ அசை.

(இ-ம்.) சான்றோர்களுக்கு உள்ளன்போடும் பணிவிடை செய்கின்றவனே யாவராலுந் தொழற்குரியவனென்பதாம். (54)

(அ-கை.) பிரம்மநிஷ்டட்டர்களுடைய ஸ்ரீபாததீர்த்த முதலியவை கொள்ளுகின்றவனுக்கு எட்டாவது சனனத்தில் முத்தியெனல்.

ஓதுசாதனை யுற்றவர்சேவடிச்
சீதநீரொடுசேடமு மேற்பவன்
தீதிலெட்டாந் தனுவிற்றிகழ்தரும்
ஏதின்மேன்மைவீ டெய்துமினிதரோ.

(இ-ம்.) சொல்லுகின்ற ஞானசாதனத்தைப் பெற்றவர்களுடைய குளிர்ச்சிபொருந்திய பாதோதகத்துடனே பரிகலத்தையும் * அங்கீகரிக்கின்றவன் குற்றமில்லாத எட்டாவது சனனத்தில் பிரகாசிக்கின்ற நன்மையைத்தருகின்ற மேலாகிய மோட்சவீட்டை இன்பமாகச் சேரு வான் எ று. அரோ அசை.

(இ-ம்.) மேலோர்களுடைய பாததீர்த்த பரிகலபிரசாதத்துக்குடையவனே சிவசொரூப மென்பதாம். (55)

(அ-கை.) பிரம்ம நிஷ்டர்களுடைய திருவுருவங்களைப் பரிசித்துத் தொண்டு செய்கின்றவனுக்கு ஐந்தாவது சனனத்தில் முத்தியெனல்.

மன்னுயோக மருவுவோர் தேகமு
நன்னயம்பெறு பாதனளினமும்
பின்னமின்றிப் பிடித்தேவல் செய்பவன்
பன்னுமைந்தாம் பவத்தில்வீடெய்துவாம்

(இ-ள்.) நிலைபெற்ற சிவயோகத்திற் பொருந்தி யிருக்கின்றவர்களுடைய திருவுருவத்தையும் நல்லநயம்பெற்ற பாததாமரையையும் அபின்னபாவமாகப் பரிசித்துத் திருத்தொண்டு செய்கிறவன் சொல்லுகின்ற ஐந்தாவது சனனத்தில் மோட்சத்தைப் பெற்றுக்கொள்ளுவான் எ று.

(ப-ம்.) ஆன்மாக்களுடைய பாசபந்தங்களை ஒருங்கேகட்டறுத்து அவர்களைப் பரிசுத்தஞ்செய்து பரிபக்குவத்துக்குத் தக்கவர்களாய்த் தன்மயப்படுத்திக்கொள்ள நல்லவளமைதங்கிய சுயம்பிரகாசமான பரிபூரணானந்தசுகமே பிரத்தியட்சமாகத் திருவுருக்கொண்ட திவ்ய சரணங்க

---

* அங்கீகரித்தலென்பது - உட்கொள்ளுதல்-

ளென்பார். நன்னயம் பெறுபாதமென்பார். சிரசிற் சூட்டிக்கொள்ளவுங் கண்களி லொற்றிக்கொள்ளவும் மார்பி லணைத்துக்கொள்ளவுங் குளிர்ச்சிபொருந்தி மிருதுவா யிருக்கத்தக்கதாகையால் நளினமென்று திருவடிகளை யுருவகஞ்செய்தார்.

(இ-ம்.) மஹான்களுடைய அருள்மேனியையுந் திவ்ய சரணாரவிந்தங்களேயும் பரிசித்து இனிதாகச் சிசுருஷை செய்பவனுடைய ஆத்மானந்தசெல்வத்துக்குச் சமமானது ஜகத்தில் வேறின்றென்பதாம், ()

(அ-கை.) பிரம்மநிஷ்டர்களுக்கு நிதந் தொண்டுசெய்து பூசித்து அமுதுபடைக்கின்றவனுக்கு எடுத்த அத்தேகத்திலேயே முத்தியெனல்.

ஒப்பிலா துய ருண்மைநிட் டார்தமக்
கப்பொ டன்னமு பர்ச்சித் துதவியே
தப்பிலேவலுஞ் சான்செயும்புண்ணியற்
கெய்ப்பின்முத்தி யெடுக்கும்பவத்தினே.

(இ-ள்.) சமானரகிதமாகிய உயர்ந்த உண்மையாகிய ஞானநிஷ்டாபரர்களேப்பூசித்து அன்னபானுதிகளைக் கொடுத்துக் தவறுதலில்லாமல் திருத்தொண்டுசெய்யத்தக்க (ஞானநிஷ்டையையுடைய.) புண்ணியவானுக்கு எடுத்த அந்த ஜநநத்திலேயே அழியாத மோட்சங் கிடைக்கும் எ று, எ ஏ அசைகள். புண்ணியனென்றதனுல் ஞானநிஷ்டையை யுடையவனென்று வருவிக்கப்பட்டது.

(இ-ம்.) ஆத்மவிசாரம் பொருந்தினவர்களுக்குச் சர்வ உபசாரத்துடன் அன்னமிட்டு அர்ச்சித்துத் திருத்தொண்டு செய்கிறவனே ஞானசமஸ்காரத்தினுல் திருவுருக்கொண்டு சதாசாரியரால் ஆத்மஞானநிஷ்டையைச் சம்பூர்த்திசெய்ய வந்தவனென்பதாம். (57)

(அ-கை.) மேற்சொல்லியவண்ணம் அன்புசெய்கின்ற மாணாக்கர்களுக்கு ஞானகுருவானவர் சம்பூரண கிருபையோடும் அனுக்கிரகிப்பாரெனல்.

## வேறு.

இந்நிலைத்திருப்பணியெலாஞ் செய்பவர்க்கிசைய
அந்நிலைப்பரகுரு வருள்சுரந்தினிதாக
உன்னுதற்கருமொரு மொழியருளினாலுதவித்
தந்நிலைப்பரநிட்டையி லிருத்துவன்றனையால்.

(இ-ள்.) இத்தன்மைப்பட்ட திருத்தொண்டுகளெல்லாங் (குறைவறச்) செய்யத்தக்கவர்களுக்கு (பிரம்மானுபவம்.) பொருந்த அழகிய மௌனநிலையையுடைய ஞானாசிரியர் உளத்தில் அருளானந்த மூண்டாகி இனிமையாக நினைத்தற்கரிய மஹாவாக்கியப்பொருளைக் கிருபாநோக்கத்தால் அநுக்கிரகித்துத் தலையினால் தனதுசொரூபநிலையாகிய பிரம்மநிஷ்டையி லிருக்கச்செய்வார் - எ - று.

(இ-ம்.) ஞானாசிரியர் தமக்கு உள்ளன்போடும் பணிவிடைமுதலியவை செய்யத்தக்க மாணவர்களுக்குத் தமதுண்மை நிலையை அருள் செய்வதே அவருக்கு உரிய தர்மமென்பதாம். (58)

உற்றமெய்யென்னுஞ் செய்யுண்முதல் இப்பதினான்குசெய்யுளாலும் ஆசிரியருபதேசித்ததில் சந்தேகங்கொள்பவனாதியோரும் சாதுக்களையடுத்துச் சர்வபூசாவுபசாரத்தோடுந் திருத்தொண்டு செய்பவர்கள் முத்திஅடையுங் காலத்தையும் அவர்களுக்கே ஆசிரியர் ஆத்மஞானத்தைப்போதிக்கக் கடவரென்பதையுங் கூறினார்.

(அ-கை) நிஷ்டாபரர்களுக்குப் பூசை வேண்டுவதின்றென்றும் அவர்களின்பூசை இத்தன்மைத்தென்றும், கிரியாபூசைக் கதிகாரிகளிவ ரென்றும்; சிவயோகிகளிவரென்றும் கிரியாயோகமிதுவென்றும், அந்த யோகஞ் செய்பவர்களுக்குப் பிறவியொழியாதென்றும், சிவயோகிகளே முத்தியடைவரென்றும், அச்சிவயோகநிஷ்டையைப் புமான்களுக்கு உபதேசித்தற்குரிய பருவபிரமாணங்க ளிவையென்றுங் கூறுவான் தொடங்கிவைத்த முறைப்படியே நிஷ்டாபரர்களுக்குக் கிரியாபூசை வேண்டுவதில்லையேல் உலகோர் அப்பூசையைவிடுவரே யெனவினு வுதல்.

## வேறு.

இப்படியாய்நிட்டைசாதனைபி
 லிசைந்தினிதிருப்பவர்தாமும்
ஒப்பறும்பூசையொழித்திடல்வேண்டு
 மென்றுமைக்கிறையவனுரைப்ப
அப்படியாமேவெனியோரெல்லா
 மருச்சனைவிடுகுவரேயென்
றிப்படியிசைத்தாளுமையவடானு
 மிணையிலாவிறைவனைநோக்கி.

(இ-ள்) இத்தன்மைப்பட்ட பிரமநிஷ்டா சாதனத்திற்பொ ருந்தி இனிமையாக இருப்பவர்கள் ஒப்பற்ற கிரியாபூசைகளை நீக்க வேண்டுமென்று தேவியாருக்குப் பரமசிவனார்சொல்ல அதைக்கேட்ட அத்தேவியாரும் சமானரகிதராகிய பரமசிவத்தைப்பார்த்து நிஷ்டா பரர்களேபூசையைவிடுவார்களாயின் உலகோரெல்லாம் சிவபூசையை விட்டுவிடுவார்களேயென்று இவ்விதமாகச்சொன்னார், எ று. தாம் தான் சாரியைகள்,

பதுஞ்சொல்வதுமே உலகத்திற் கிரியாபூசைக் கதிகாரிவிதியுடன் செய்கின்ற கோடிபூசைக் கொக்குமென்பார். நிட்டைசாதகரர்ச்சனையென வறைவதே பூசையெனக்கூறினர்.

(இ-ம்) பூசாகோடி, தோத்திரம் தோத்திரங், கோடிசெபம். செபங்கோடி, தியானம் தியானங்கோடி, நிஷ்டை, நிஷ்டைகோடி, மனோலயம் என்றுவேதாகமங்களால் விதிக்கப்பட்டும் மேலோர்களால் கூறப்பட்டும் இருக்கின்றமையால் அம்மனோலயமபெற்ற சிவயோகிகள் மனோவாக்கினால் சிந்தித்துச்சொல்வதே பூசையென்பதாம்.

மேலோர்களுக்கு ஆத்மானந்தபூசையன்றி வேறுபூசை இன்றென்பதற்குப் பிரமாணம். (ஞானவாசிட்டம்.) தேகமுதற்பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத் தெய்வமுண்டோ பாகமறப்பணிதியற வடிமுடிவற்றுளவுணர்வே பரமபோத, மாகவினலதுதெய்வ மருச்சித்தற்குரித்தாகு மறிவிலாத, மூவருக்குவடிவமுதலருச்சனையே யியல்பென்று மொழியுமன்றே. (அன்றியும்) அறிவுசமபாவனைசந் தோடமெனுமலர்களா லர்ச்சித்தேவாம், பிறிவரியவாத்துமதத்துவத்தையருச்சிப்பதே பெரியபூசை, குறிவடிவிற் பூசனைபூசனையல்ல வகண்டமெனக் கூறுந்தெய்வ, நெறிகொள்புறத் தொழில்களா னோரதிங்கதனாலே நிறையுமின்பம் எ ம். (பசுபதிபாச விளக்கம்) சாத்திரஞ்சமயம் வேண்டார் தத்துவக்கத்தும் வேண்டார், கோத்திரங்குலங்கள் வேண்டார் கூறுமால் விரதம்வேண்டார், மூர்த்திசேவையுமேவேண்டார் முன்னவன் பூசைவேண்டார், தீர்த்தமும்வேண்டார் ஞானசின்மயமானமேலோர் எ ம். (சிவானந்தமாலை) எங்குஞ்சிவாலயமாமெங்குஞ்சிவமாகு, மெங்குஞ்சிவனடிமையெங்குமாய்ப் பங்கறவே, நிற்றல் சிவபூசை நின்ற நிலையாய்நிறைவிற், பற்றொழிதல் பூசாபலம் எ ம். (சிவப்பிரகாசம்) மண்முதற்கரணமெல்லா மறுவசத்தாக்கி ஞானக், கண்ணினிலூன்றியந்தக் கருத்தினலெலவையுநீக்கி, யெண்ணியஞ்

செழுத்துமாறி யிறைநிறை யுணர்ந்துபோற்றல், புண்ணியன்றனக்கு ஞானபூசையாப்புகலுமன்றே எ ம். வரும் மற்றும்வருவனவற்றுற் காண்க. (60)

(அ-கை) கர்மகாண்டிகளும் பத்திகாண்டிகளும் பண்ணும் பூசை இஃதெனல்.

இப்படிகிட்டாள் பூசனைபுரித
வியல்பதா மிவ்விதபூசை
செப்பிடுங்கன்ம காண்டியுங்கிரியா
காண்டியுஞ்செய் யொணாதவர்கள்
திப்பியசைவாகம விதிப்படியே
செயவேண்டுந்தலே மியல்பாம்
இப்படியன்றிச் செய்யொணாதென்றே
யிறையுமைக்கியம் பினனன்றே.

(இ-ள்) இத்தப்பிரகாரம் பிரம்ம நிஷ்ட்டர்கள் பூசைசெய்தல் முறைமையாம் இவ்விதமாகிய பூசையைச் சொல்லுகின்ற * கர்மகாண்டத்துக் குரியவர்களும் * பத்திகாண்டத்துக் குரியவர்களுஞ் செய்யக் கூடாது அவர்கள் தெய்வீகமான சைவாகமத்திற்சொல்லியிருக்கின்ற விதிப்படியே செய்யும்படி விரும்புதல் முறைமையாம், இந்தக்கிரமந் தப்பிச் செய்யக்கூடாதென்று உமைக்குச்சொன்னார் எ று. ஏ ஏ அன்று ஏ அசைகள்.

---

* கர்மகாண்டி, தேக - கிரக - கிருத்தியாதிகளில் யானென தென்னும் அகமமதை யுள்ளவனெனவும்.

* பத்திகாண்டி - சகலகிரியையும் ஈஸ்வரார்ப்பணஞ் செய்பவ னெனவுங்கொள்க.

(இ-ம்) சகல கர்மத்துக்கும் நாமே சாக்ஷியென்பவர்களாகிய ஞானகாண்டிகள் தவிர ஏனையோர் பூசைசெய்ய வேண்டுமென்பதாம்.

(அ-கை) சிவயோகிகள் இவரெனல்.

இப்படிநிட்டை தன்னிலேயிருந்து
மியல்பொடு தன்னனுபவத்தை
ஒப்பிலாவரசற் கமைச்சராப்பது
போலுயர்குருபற் குரைத்தளவில்
மெய்ப்படுஞானம் பின்னிகழ்வதனை
விளம்பிடக் கேட்டறிகுனரே
ஒப்பின்மாயோகராலாதவர்கிரியா
காண்டியென் றுரைத்திடப்படுமால்.

(இ-ள்) இந்தப்பிரகாரம் நிஷ்டையிலே யிருந்தாலும் இறைமாட்சி முதலிய வரசிலக்கணத்தில் தன்னோடொப்பாவா ரில்லாத அரசனுக்கு அவ்வரசனிவற்றைச் செய்கவென்று தனக்குக் கட்டளையிட்ட காரியங்களில் முயன்ற மந்திரியானவன் அவற்றால் உண்டாய குறைவு நிறைவுகளைக்கூறிப் பயன்படுத்து மாறுபோலக், கிரமமாகத் தங்களுடைய உயர்ந்த குருபரனுக்கு அவர் அநுக்கிரகித்தவண்ணம் தாங்கண்ட அனுபவப்பேற்றிலடைந்த சம்சயங்களை விண்ணப்பம் பண்ணிக்கொண்டு அளவுபடாத உண்மையாகிய அவ்வாசிரியர்மேல் நடப்பதைச் சொல்லக்கேட்டறிந்து கொள்ளத்தக்கவர்களே நிகரற்ற பெருமை பொருந்திய சிவயோகிகளாம். இத்தன்மைப் பட்டவர்களல்லாதவர்கள் கிரியாகாண்டத்துக் குரியவர்களென்று சொல்லப்படும் எ-று. ஆல் அசை இங்ஙனங் காண்டியென்றது இழிவின்கண்வந்த தன்மை வழுவமைதி.

(இ-ம்) பூரணருடராகுங்கால வரையிலுங் குருகுலவாசமாயிருந்து நிட்டைசாதித்தவர்களே ஆத்மஞானிகளென்பதாம்.

(அ-கை) தேவியாருக்குக் கிரியாயோக விதியைப் பரமசிவனார் சொல்லத்தொடங்கல்.

உன்னருஞான நிட்டையையடிக
ளுரைத்திடக் கேட்டுளமகிழ்ந்தேன்
பன்னருங்கிரியா யோகமென்றுரைக்கப்
படுவதையெனக்கு நீவிரித்தே
நன்னயமாகவுரைத்திடவேண்டு
மென்றுமை நாதனை வணங்க
இன்னமுதொழுகு மதியணிசடை
யோனிறைவியைப் பார்த்தினிதுரைப்பான்.

(இ-ள்) நினைப்பதற்கரிய சிவஞான நிட்டையைத் தேவரீர் உபதேசிக்கக்கேட்டு (அடியேன்) மனமகிழ்ந்தேன் சொல்லுதற்கரிய கிரியாயோகமென்று சொல்லப்படுவதை விரித்து நல்ல நயப்பாக அடியேனுக்குத் தேவரீர் கிருபைசெய்ய வேண்டுமென்று பரமேஸ்வரனை வணங்கிப் பார்வதியார் (கேட்க) இனிமையாகிய அமுதமொழுகின்ற (கிரணங்களையுடைய) இளஞ்சந்திரனையணிந்த சடையையுடைய பரமசிவனார் தேவியாரைப்பார்த்து சந்தோஷமாகச் சொல்லுவார் எ-று. ஏ அசை.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) கிரியாயோகமிப்படிப்பட்டதென்றும் அதுஞானயோகிகளுக்கில்லையென்றும் ஞானயோகிகளே முத்தியை அடைவார்களென்றுங் கூறல்

## வேறு.

பங்கமுறமனங்கொண்டு சுவாசமதுதன்னைப்
  பந்தனஞ்செய்தருங்கற்பம் பற்பலவயின்றே
அங்கமதைத்தான்சுழற்றி யபானவழிதன்
  னாலயம்வாங்கி யவ்வழியாலதை மீளவிடுத்தும்
இங்கிவைகள் பலவியற்ற லட்டமாயோக
  மென்பரிவைசிவயோக மியற்றுவோர்க்கில்லையால்
தங்குசிவயோகத்தா லாக்கமுடனழிவுந்தா
  னிலாப்பரமசாயுச்சியந் தாமடைவார்.

(இ-ள்) (உலகநடைக்கு) வேறுபாடாக மனதில் நினைத்துச் சுவாசத்தைப் பந்தனப் படுத்தியும். அருமையாகிய பலபலவித கல்பங்களை உண்டும் அவயவங்களைச்சுழற்றி யபானமார்க்கத்தில் இரும்பையுள்ளே வாங்கி மறுபடியும் அவ்வழியினாலே அவ்விரும்பை வெளியிலேவிட்டும் இவைபோல் வனவாகிய பலவிதகாரியங்களைச் செய்தல் அட்டமாயோக மென்று சொல்லுவார்கள். இக்கிரியைகள் ஞானயோகஞ் செய்யத்தக்கவர்களுக் கில்லையாம் (அவர்கள்) பொருந்திய சிவயோகத்தினாலே பிறப்பிறப்பில்லாத உயர்ந்த சாயுச்சியபதத்தைப்பெற்றுக்கொள்ளுவார்கள் எ று. தன் தான் சாரியைகள். ஐ ஆல் அசைகள்.

(இ-ம்) ஆத்மஞானத்தன்றி ஏனையவற்றால் முத்திவாராதென்பதாம்.

இதற்குப்பிரமாணம். (கந்தரலங்காரம்) திருத்தியெனும்படிக்கும் பித்தவாயுவைச் சுற்றிமுறித், தருத்தியுடம்பை யொருக்கிலென்னாஞ்சிவ யோகமெனுங், குருத்தையறிந்து முகமாறுடைக்குரு நாதன்சொன்ன, கருமத்தை மனத்திலிருந்துங் கண்டோர்முத்தி கைகண்டதே எ ம். (ஒழி

விலொடுக்கம்) அறிவடங்காவாயு வடங்கவசைவத்துத், தறியிருந்தாற் போலச் சமாதி பெருகி, னடந்தகுருட்டு மனஞ்சருந்திப்பாழூர், கிடந்த குழிப்புக்கதனுங் கேடு எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

(அ-கை) கிரியாயோகிகளுக்குச் சனனமரணம் ஒழியாவெனல்.

(வேறு.)

புத்திகொள்கிரியா யோகசாதனையைப்
புரிந்திடுபவர்க ளிவ்வுலகில்
எத்தனைகால மிருப்பினுமீண்டு
மிறப்பொடுபிறப்பினை யடைவார்
சத்தியமாக வறிதிநீயிந்தத்
தனிச்சிவயோக சாதனையை
இத்தனைவயதிற் போதிப்பமென்றே
யிறையவனுமைதனுக் கிசைப்பான்.

(இ-ள்) மனத்தில் எண்ணுகின்ற கிரியாயோக சாதனையைச் செய்பவர்கள் இந்தப் பூமியின்கண் எத்தனைகால மிருந்தாலும் மேலும் மேலும் சனனமரணங்களை அடைவார்கள் (சந்தேகமில்லை) உண்மை யாகநீ அறிந்துகொள்வா (யென்றுசொல்லி) இந்த ஒப்பற்ற சிவயோக சாதனத்தை இத்தனைவயதில் அநுக்கிரகிக்க வேண்டுமென்று (பருவப்) (பிரமாணத்தை) உமைக்குச் சொல்லுவார் பரமசிவனார் எ று. ஏ அசை.

(இ-ம்) தெய்வநாயகர் கிரியாயோகிகளுக்கு முத்தியின்மையென் றறிவித்துச் சிவயோகத்தை அநுக்கிரகிக்குங் காலத்தை அறிவிக்கத் தொடங்கின ரென்பதாம். (65)

(அன்க.) ஞானநிஷ்ட்டையை உபதேசித்தற்குரிய கால அளவைக் கூறல்.

இந்தநன் னிட்டையேழுநான் காண்டி
லியம்புத லுத்தமமாகும்
முந்தியவையாறைண்டினிலாசான்
மொழிகுதன் மத்திமமாகும்
அந்தமிலாறாறாண்டினிற்புகற
லறதருகநிட்டையதாமல்
உந்துமிப்பருவங்கடந்தவர்க்கதனை
யுரைத்திடத்தகாதெனவுணரே.

இத்தன்மையாகிய நன்மையைத்தருகிற ஞானநிஷட்டையைப் பிரதானமாகிய ஞானாசிரியர் (மாணாக்கனுக்கு) இருபத்தெட்டாம் வயதில் அநுக்கிரகஞ்செய்தல் உத்தமமாகும் முப்பதாம்வயதில் அநுக்கிரகித்தல் மத்திமமாகும் பருவப்பிரமாணமில்லாத முப்பத்தாறும் வயதில் அநுக்கிரகித்தல் அதமமாகும் மேற்சொல்லிய மோட்சசுகத்திற் சேர்க்கத்தக்க இப்பருவங்களைக் கடந்தவர்களுக்கு அச்சிவஞானநிஷ்ட்டையை அனுக்கிரகித்தல தகாதென்றறிந்துகொள்வாய் எ று. ஆல் ஏ அசைகள்.

(இ-ம்.) புமான்களுக்கு முப்பத்தாறு வயதுக்குமேல் ஞானநிஷ்ட்டாசாதனஞ் செய்வதற்குத் தேகவலி குறைந்திருக்குமாகையால் அவர்களுக்கு ஞானாசிரியர் அந்தநிட்டையைப் போதிக்கக்கூடாதென்பதாம்.

யௌவனபருவமே பிரம்மநிட்டை பெறுதற்குரிய தென்பதற்குப் பிரமாணம். (ஞானவாசிட்டம்.) எதிறத்தோறெவ்வனமா விடையூற்றைக்கடந்தெளிதினேறவல்லோ, ரத்திறத்தோரே புருடாவர்களே

தொழற்குரியோரவரேசான்ருேர், மெய்த்திறத்தோர்சேரிடமாய் விநய நிதிபடைத்தருளால் விளங்காநிற்குஞ், சுத்தகுணமெவ்வனமிவ் வுலகி லுளதோவிசும்பிற் சூழ்காடுண்டோ. என்பதனுற்காண்க. (65)

இப்படியாயவென்னுஞ் செய்யுண்முதல் இவ்வெட்டுசெய்யுளா லும் கர்மபத்திகிரியாயோகிகளாகிய இம்மூவர்களுக்குங் பிறவியொழி யாதென்பதையும் ஞானுசிரியருடைய கிருபைக்குப் பூரணப்பட்டவரே சிவயோகிகளென்பதையும் அச்சிவ யோகத்தை ஆத்மாக்களுக்குப் போதிப்பதற்குரிய பருவங்களேயுங் கூறினுர் இந்நூற்பொருளாகிய பிரம்மநிஷ்டையைப் போதிப்பதற்குரிய ஆசிரியரையும் மாணுக்கரை மேலருளிச்செய்கின்றுர்.

(அ-கை.) குருவே பரமசிவமெனல்.

வேறு.

ஞானநிட்டையா நற்குருத்தேசிகன்
மானமுற்றிடு மானிடனல்லனுல்
வானமுற்றுவளர்கயிலைப்பரன்
தானெனத்தினஞ் சாற்றிடலாகுமே.

(இ-ள்) பிரம்மநிஷ்டையை அனுக்கிரகஞ்செய்யத்தக்க நலம் பொருந்திய ஆசிரியர் அகங்காரம்பொருந்திய மனிதனல்லர் ஆகாய மளாவிவளர்கின்ற கயிலையிலெழுந்தருளி யிருக்கின்ற பரமசிவமே யென்று நித்தியஞ்சொல்லலாகும் எ று. ஆல் ஏ அசைகள்.

(இ-ம்.) ஆத்மகோடிகளுள் சிறந்து விளங்கிய மலபரிபாகிகளுக்கு ஞானநிஷ்டையை அநுக்கிரகஞ் செய்யும்படி பசுபதியே குருமூர்த் தமாக எழுந்தருளி வருவரென்பதாம்.

இதற்குப்பிரமாணம். (திருமந்திரம்.) குருவேசிவமெனக் கூறின னந்தி, குருவேசிவமென்பது குறித்தோரார், குருவேசிவமாகிக்கோனு மாய்நிற்கும், குருவேயுரையுணர் வற்றதோர்கோவே எ ம். (திரு வாசகம்.) அருபரத்தொருவ னவனியில்வந்து, குருபரனாகியருளிய பெருமையைச் சிறுமையென்றிகழாதே. (அன்றியும்.) சிவனெனயானுந் தேறினன்காண்க, சிவனெனையாட்கொண் டருளினன்காண்க எ ம். (திருவாய்மொழி.) துயரில்சுடரொளிதன்னுட்சோதி நின்றவண்ண நிற்கவே, துயரின்மலியும் மனிதர்பிறவியிற் றோன்றக்கண்காணவந்து, துயரங்கள்செய்து தன்றெய்வநிலையுலகிற்புகவுய்க்குமம்மான், றுயரமில்சீர்க்கண்ணன்மாயன் புகழ்துற்றயானோர் துன்பமிலேனே எ ம், (அமுதசாரம்.) உள்ளத்தினின்று மொளித்தான்பரன்குரவன், கள்ளந் தீனைத்தவிர்த்துக்கபட்டிஞன் வள்ளல், அருவானகோலமோ வக்கோ லங்காட்டுங், குருவானகோலமோ கூறு எ ம. (பாடுதுறை.) முகுந்தனு நாலுமுகனுந்தேடமூலமொருகுருமூர்த்தியாகிப்புகுந்தடியார்தொழவீற் றிருக்கும் பூங்கோயிலாகநான் பெற்றிலேனே எ ம். (நிகழ்காலத்திரங் கல்.) செப்பரியவுண்மைச் சிவஞானதேசிகரா, யிப்படியே வந்திங் கிருந்ததிசயமே (அன்றியும்.) என்றுமருவுருவா யெங்குநிறைந்த வர்தா, மின்றெனக்குத்தேசிகரா யெய்ந்ததிசயமே (அன்றியும்.) தேனடருமானந்தச் செங்கமலத்தாளருள, மானிடர்போல்மண்மிசை யில் வந்ததிசயமே. (திருவருட்பயன்.) அறியாமையுண்ணின் றளித் ததேகாணுங், குறியாகநீங்காதகோ. (அன்றியும்.) அருளாவகையா லருள்புரியவந்த, பொருளாரறிவார் புவி எ ம். (அத்துவிதக்கலி வெண்பா.) தற்பரமாய்ச் சிற்கனமாய்த் தத்துவாதீதமாய்ச், சிற்பரமாய் ஞானச் செழுஞ்சுடரா யற்புதமா, யறிவுக்கறிவா யகண்டிதமாயெங் குஞ், செறியும்பரசிவமாய்ப்பிறியாதவேதச் சினகரத்துள் வீற்றிருந்த தெய்வமே போதக்குருவாய்ப் புவிமீதுாதனென வந்தான்றிருவடியை மத்தகத்திற் சாத்தினன் எ று. (அதிரகசியம்.) இவ்வண்ணம்புலம்பும் வேலை யீசனுமுளத்திரங்கி, யுய்வண்ணமறியநின்ற வுவனையோர்

வசனத்தாலே, பொய்வண்ண நீக்கிநம்போற் புனிதனுக்குவமென்றுன்னி, மெய்வண்ணமுடையார்போல மேதினிவந்தானன்றே எ ம். (வாதவூரர்புராணம்.) உத்தமரின்னவாரிங் குரைத்தலு . மூவைந்து நாலாஞ், சத்திநிபாதமெய்தும் தன்மையராதலாலே, யத்திருமன்றுளாடு மையரிங்கென்னையாள, வித்திருமேனிகொண்டா ரென்பதுமனத்தி லெண்ணி எ ம். (தத்துவராயசுவாமிகள் கலிமடல்.) பங்கயக்கண்மாலயனுமய னுமறிதாரன்பால்வருமாரறியாதார் மானிடமாய்வந்ததிரு மேனியின்றன்மை தேராதார்தேரா வருளேவடிவென்றறியாதார் எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க. (67)

(அ-கை.) பசுபதியார் குருமூர்த்தங் கொள்ளுங்காலத்தில் மறைக்குஞ் சின்ன மிவையெனல்.

வேணியுறை நதிமதி தல்விழியுங்
களவிடமு மேனியெங்கும்
பூணுமணிபங்கதமுங் கரியுரிவை
மாதும்புயங் கநான்கும்
பாணியுறைமழுமானும் பதனகஞ்
சேர்மரமணியும் பலவுமற்றும்
மாணமறைத் திவ்வுலகின்
மானிடர்தம் பிறப்பறுக்க மனத்திலுன்னி

(இ-ள்.) இவ்வுலகத்தின்கண்ணுள்ள மனிதர்களுடைய பிறவியை யொழித்து (முத்தியைத்தரத்) திருவுளத்தில் நினைத்துப் (பரமசிவனவர்) சடையில் வாசம்பண்ணுகிற கங்கையையும் இளஞ்சந்திரனையும் நெற்றிக்கண்ணையுங் கண்டத்திற்பொருந்திய விஷத்தையுந் திருமேனி முழுதுந் தரித்திருக்கின்ற சிரோமணியையுடைய சர்ப்பங்களையும் யானைத்தோலையும் (வாமபாகத்திலிருக்கின்ற) இமயமலைபெற்ற

உமாதேவியையும் சதுர்புஜத்தையும் திருக்கைகளில் தரித்த மழுவையும் மானையும் புலிநகத்தையும் பெரிதாகிய எலும்பு மணியையும் இன்னு மிவைமுதலாகிய பலவற்றையும் பெருமைபொருந்த மறைத்து எ று, தம் சாரியை.

(இ-ம்.) பார்வையைக் கொண்டு விலங்கை வசப்படுத்துவது போலத் தெய்வநாயகர் அஞ்ஞானவிருளில் வசப்பட்ட ஆத்மாக்களை அருள்வசப்படுத்தத் தமது சொரூபத்தை மறைப்பரென்பதாம்.

இதற்குப்பிரமாணம். (திருவருட்பயன்) பார்வையென மாக்களை முன்பற்றிப் பிடித்ததற்காம், போர்வையெனகாணுப் புவி எ ம். (இருபாவிருபது) கன்னுதலுங் கண்டக்கறையும் கரந்தருளி மண்ணிடை யின்மாக் கண்மலமகற்றும் வெண்ணெய நல்லூர், மெய்கண்டானென் ஜெருகான்மேவுவரால் வேறன்மை கைகண்டாருள்ளத்திற் கண் எ ம் (போற்றிப்பஃறொடை வெண்பா) நன்னெறிவிஞ்ஞானகலர் நாடுமவ மொன்றினையு, மங்கிலையே யுண்ணின்றறுத்தருளிப்பின்னன்பு, மேலா விளம்புபிரளையாகலருக்குத் தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப் பூவலை யக், தன்னின்று நீங்காச்சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலந் தீர்த்தாட்கொள்கை யன்னவனுக், காதிகுணமாதலினு லாடுந்திருத் தொழிலுஞ், சோதிமணிமிடற்றுச் சுந்தரமும் பாதியாம், பச்சைமிட மும் பவளத்திருச்சடைமேல், வைத்தநதியு மதிக்கொழுந்து மச்சமற வாடுமரவு மழகார்திருநுதன்மே, னீடுருவன்னி நெடுங்கண்ணுங் கேடி லையங், கூட்டுந்தமரகமுங் கோலவெறியகலும், பூட்டரவக்கச்சும் புலிய தளும் வீட்டின்ப, வெள்ளத்தழுந்தி விடுந்தாளினுமடியா, ருள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்புங் கள்ளவினை, வென்றுபிறப்பறுக்கச் சாற்றியவீரக்கழலு, மொன்றுமுருத்தோன்றும வுள்ளடக்கி யென்று, மிற வாதவின்பத் தெமையிருத்தவேண்டிப், பிறவாமுதல்வன் பிறந்து நற வாருந், தாருலாவும் புயத்துச் சம்பந்தனுதனென்று, பேரிலாநாதனொரு பேர்புனைந்து பாரோர்தம், உண்டியுறக்கம் பயமின்பமுற்றொழுகிக்,

கொண்டுமகிழ்ந்த குணம்போற்றி எ ம். (தாயுமானசுவாமிகள்) காணா ரியவல்லவெல்லாந்தானே கட்டுக்கட்டாக விளையுமதைக் கட்டோடே தான், வீணினற்கற்பூரமலை படுதீப்பட்டவிந்தை யெனக்காணவொரு விவேகங்காட்ட, ஊனுறக்கமின்பதுன்பம் பேருராதி யெவ்விடத்து மென்னைப்போல வுருவங்காட்டிக், கோணறவோர்மான்காட்டி மானை யீர்க்குங் கொள்கையெனவருண் மௌனகுருவாய்வந்து எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

(அ-கை.) பசுபதியார் குருமூர்த்தங்கொள்ளுங் காலத்தில் தரிக்குஞ் சின்னமிவையெனல்.

திருச்சடையுறுதனிறிடு புண்டரமுங்
கண்டமதிற் றிகழுமார்பில்
உருத்திராக்கமணி யணியுஞ்
சிவலிங்கதாரணமு மொளிரக்கற்றோய்
அருத்திகொளுந் தூசணிந்து
வெண்டுகிற்கோவணவுடையுமரையிற்சாத்திக்
கரத்திலகுபுத்தகமு மழகுறுசின்
முத்திரையுங் காட்டியேதான்.

(இ-ள்.) அழகுள்ள சடையுந் திருநெற்றியில் தரிக்கின்ற விபூதியுங் கண்டத்திலும் மார்பிலும் பிரகாசிக்கின்ற சுந்தரம்பொருந்திய ருத்திராட்சமணி யாபரணமுஞ் சிவலிங்கத்தாரணமும் பிரகாசிக்க உலகத்தார் விரும்பத்தக்க காவிதோய்த்த வஸ்திரத்தை யுடுத்தி வெண்மை பொருந்திய வஸ்திரத்தினாலாகிய கோவணவுடையையும் அரையில் தரித்திருக்கையிற் பிரகாசிக்கின்ற புஸ்தகத்தையும் அழகுபொருந்திய சின்முத்திரையையும் (விளங்கக்) காண்பித்து எ று. ஏ தான் அசைகள். (69)

(அ-கை) பரமசிவந் திருக்கூட்டத்துடனே யெழுந்தருளுதல்.

தெண்டிறனுடுபலியொருகை பாத்திரமும்
விளங்கவே செய்யநாவில்
எண்டிகழுந்தெழுத்திலகச் சரணத்திற்
பாதுகையு மிலங்கவேதான்
மண்டுமிருவினையொப்பு மலபரி
பாகமும் வந்தமாணர்சூழ
அண்டர்பிரான் றிருவருளே
யொருவடிவமாகவெழுந் தருளுவானால்

(இ-ள்.) (ஒரு திருக்கையிற்றாங்கிய) தண்டத்துடனே (மற்றொரு) திருக்கையிற்றாங்கிய பலிப்பாத்திரமும் பிரகாசிக்கவும் அழகு பொருந்திய திருநாவில் (உலகோர்) மதிக்கவிளங்கிய பஞ்சாக்ஷரந் துலங்கவுந் திருவடிகளில் மிதியடிவிளங்கவும் நெருங்கிய இருவினை யொப்பு மலபரிபாகமுற்ற மாணாக்கர்கள் சூழ்ந்துவரவுந் தேவநாயகரே ஒப்பற்ற அருளிறைவடிவமாக எழுந்தருளுவார் எ று. தான் சாரியை ஏ ஏ ஆல் அசைகள்.

(இ-உ-க-ம்.) சமஸ்தத்திற்குங் காரணகர்த்தாவாகிய அகண்டாகார சிவமே இவ்வுலகத்தின்கண் சகளீகரித்து ஆத்மாக்களைப் பரிபாகப் படுத்தித் தமது திருவருளிற்கூட்டிச் சிற்சடலீலையைக்காட்டிச் சிதாகாச சொரூபமாக விளங்குவித்தற்பொருட்டுத் துவாதச முத்திரையோடும் அடியார்கள் சகிதராய் எழுந்தருளுவாரென்பதாம். (70)

வேணியுறையென்ற, செய்யுண்முதல் இச்செய்யுள் வரைக்குங் குளகம்.

(அ-கை.) ஞானகுருவின் தன்மையைக்கூறல்.

(வேறு.)

தேசிகவுருவமாக வந்துலகிற்
சீவர்கள் பக்குவந்தெரிந்தே
ஆசிலாதவருக் கொருமொழிமோன
வுண்மையையருளினு லுரைத்து
ஆசிலா ஞான நிட்டையிலிருத்தி
யெய்தருமுத்தியை யுதவல்
மாசிலாமணியா வொளிர்தருகயிலை
வள்ளனற்றே சிகன்கடனே.

(இ-ள்) குருமூர்த்தமாக எழுந்தருளிவந்து ஜகத்திலிருக்கின்ற ஆத்மாக்களுடைய பரிபாகத்தை அறிந்து பெருமைபொருந்த அவர்களுக்கு ஒப்பற்ற மஹாவாக்கியமாகிய மவுனநிலைக்குரிய சத்தியப்பொருளைக் கிருபாவீட்சண்யத்தால் அநுக்கிரகித்து குற்றமில்லாத ஞான நிஷ்டையி லிருக்கச்செய்து பெறுதற்கரிய மோக்ஷத்தைக்கொடுத்தல் களங்கரகிதமாகிய இரத்தினம்போலப் பிரகாசிக்கின்ற கயிலையங்கிரி வள்ளலாகி ஞானதேசிகருக்குரிய தருமமாம் எ று. ஏ ஏ அசைகள்.

(இ-ம்) மாணுக்கரது பக்குவத்துக்கேற்க அவர்களைச் சிவமாக்கிக் கொள்ளுதலே அருட்டேசிகருக்குரிய விதியென்பதாம்.

(அ-கை) வருணசதுஷ்டயருக்கு உபதேசஞ்செய்யும் பருவகாலமிவையெனல்.

மறையவர்க்கிருப தாண்டினுமூலகாண
மன்னருக்கொருப தோடைந்து
நிறைதருவணிகர்க் கொருபதாண்டினுஞ்
சொன்னிகாறு சூத்திரர்க்கைக்கிற்

பொறைதருபருவ முடையவர்க்கொன்றி
யிரண்டொன்றிற் பாகிபிற்போதம்
அறைகுதலாகு நல்லுபதேச
மாரியன்றனதுளமகிழ்ந்தே.

(இ-ள்) வேதியர்களுக்கு இருபதுவயதிலும் உலகத்தையாளுகின்ற அரசர்களுக்குப் பதினைந்துவயதிலும் பெருமைநிறைந்த வைசியர்களுக்குப் பத்துவயதிலும் ஒப்பிலாத புகழையுடைய சூத்திரர்களுக்கு ஐந்துவயதிலும் தீக்ஷாத்திரயங்களைச்செய்து அதற்குமேல் (முறையே) அப்பருவத்தவர்களுக்கு ஒரு வருஷத்திலும் இரண்டு வருஷத்திலும் ஒரு வருஷத்திலும் ஆறுமாதத்திலும் பாமசாந்தம் நிறைந்த (பரிபாகம் வரக்கண்டு) பிரம்மோபதேசஞ் செய்தற்குறிய ஞானாசிரியர் தமதுதிருவுள்ளமகிழ்ந்து ஆத்மஞானத்தை அநுக்கிரகிக்கத்தகும் எ று. ஏ அசை.

( இ-ம் ) பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் அடையும் ஞானபோதத்திற்குப பருவகாலங்களையும் பரிசோதிக்குங் காலங்களையும் அறிவித்ததாம்.

வருணத்திற்கேற்கச் சீடரைக்சோதித்த லென்பதற்குப் பிரமாணம். (சைவசமயநெறி) பண்ணிடுகதீக்கயினைப் பக்குவம் பார்த்தாரிரண்டு, ளெண்ணுமும்மூன்றுறின் மூன்றின். (அன்றியும்) சூத்திராதியர்க்குச் சொன்னமுறையாலாண்டு, பார்த்தே யனுக்கிரகம்பண்ண ம். (சிவநெறிப்பிரகாசம்) ஆதாவுஞ்சாந்தி நற்பொறுமை தானுமசத்திய மில்லாவுரையுமாசாரந்தவமுந், தீதான செயன்மறந்து நன்றியறிந்திடலுஞ் சிவாகமத்தைக் கேட்டதனைத் தெளிதருனும், போதலறப்பொறிவழியினிற்றலாதிப் புகன்றுடைய நற்குணங்கள் பொருந்திமேலும், ஒதலுறங்குகுணங்குற்றஞ் சோதித்தோர் வருடமுறுங் குணத்தினளவாகத் தீக்கைசெய்வா ருயர்ந்தோர் எ ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

(அ-கை) இத்தன்மைப்பட்ட மாணுக்கனுக்கு உபதேசிக்கத்தகு மெனல்.

உடற்குயிர்போலுங் கட்கிமைபோலு
மூசிபுநூலுமே போலும்
படப்பொறியாவைப் பிடியெனப்பிடிக்கப்
பாயும்வெம்புலி நனைத்தழுவத்
தொடற்கருங்கழலை யெடுவெனவெடுக்கத்
தும்பிமுன்னஞ் சுழுதிருக்க
விடற்கருஞ்சித்த மென்னவேயுதவும்
விவேகியற் களித்திடலாமால்

(இ-ள்) (ஒருமையில்) உடலுக்குயிரைப்போலவும் (பாதுகாத்தலிற்) கண்ணுக்கு இமையைப்போலவும் நடையில் ஊசியும் நூலுத்போலும் (பொருந்திப்) படத்தையும் புள்ளியையு முடையசர்ப்பத்தைப் பிடியென்று சொன்ன மாத்திரத்திற் பிடிக்கவும் பாய்கின்ற கரூரமான புலியைத் (தழுவென்று சொன்னமாத்திரத்தில்) தழுவவுந் தொடுதற்கரிய அக்கினியையெடுவென்று சொன்னமாத்திரத்தில் எடுக்கவும் மதயானைமுன் (நில்லென்று சொன்னமாத்திரத்துற்) பயப்படாது நிற்கவும்பெற்று (இவனது சித்தம்) திடசித்தமென்று சொல்லும்படியாக உதவிசெய்கின்ற விவேகமுடைய பக்குவனுக்கு (ஆத்மஞானத்தை ஆசிரியர்) அநுக்கிரகிக்கத்தகும் எ று. தன் சாரியை ஏ-ஏ ஆல் அசைகள்.

(ப-ம்) சீவன் தன்னுடலைத் தானுயபிமானித்து வருந்துன்பங்களை நீக்கி அதற்கு உபசாரஞ் செய்வதைப்போலும் ஞானசிரியருடைய திருமேனியைத் தன்தேகமாயபிமானித்து வுபசாரஞ் செய்யவேண்டு மென்

பார் உடற்குயிர்போலென்றும் இமையானது கண்ணோடொத்துமையா விருந்து அதனிடத்தில் தூசுமுதலியவைகள் அணுகுறாது பாதுகாத்தல் போலும் துஷ்டஜெந்துக்களால் அவரது திருமேனி துன்பமுறாமல் சதாகாக்க வேண்டுமென்பார், கட்கிமைபோலென்றும், ஊசிசென்ற விடந்தோறும் சரடுபின்சேறல்போலும் அவரது திருவுள்ளக் குறிப்பின் படிச்சென்று வழிபட வேண்டுமென்பார். ஊசியு நூலுமேபோலு மென்றுங்கூறினார், தேகாபிமானம்விட்டு வந்த மாணாக்கனாதலால் பாம் பாதிகண்மேற் செலுத்தினும் வீழ்வானென்பதாயிற்று. (73)

(அ-கை) இதுவுமது,

தேனிரம்புமலரையளி தேடல்போலெங்கும்
தேசிகனைப்பலநாளுந் தேடிக்கண்டளவில்
ஞானகுருவின்பாகஞ் சோதிக்கவேண்டி
னடுக்கங்கருநேரவே யெந்நாளுஞ்செய்வித்தும்
ஈனமாதொழிலதனிலேவி மிகவிடுத்து
மிரக்கமிலாதேயடித்து மிழிவுரையால்வைதும்
மானமின்றிச்செயும்போதுங் குருபத்திவழுவா
வாய்மையனுக்குயர் நிட்டைவழுத்திடவுந் தகுமால்

(இ-ள்) மாணாக்கன் தேன் நிறைந்திருக்கின்ற புஷ்பத்தை வண்டு தேடுகின்றதைப்போலப் பலநாளும் எவ்விடத்துந்தேடி ஞானாசிரியரைக் கண்டபொழுது அந்த ஞானாசிரியர் இம்மாணாக்கனுடைய பரிபாகங்களைச் சோதிக்கவிரும்பினால் பயப்படும்படியாக எந்நாளுந் தான்செய்வதுமன்றிப் பிறரைக்கொண்டு செய்வித்தும் மிகவும் அற்பமாகிய தொழில்களைச் செய்ய உத்தரவுசெய்து அனுப்பிவித்தும் இரக்கமில்லாதவனைப்போல அடித்தும் துச்சமான சொற்களால் வைதும் மானமில்லாமற் செய்ய அந்தக்காலத்திலுங் குருபத்திவழுவாமல் (நிலைகொள்

புவனேஸ்வரி பிரசுராலயம்,
**23,** பாளையப்பன் தெரு, தங்கசாலைபோஸ்டு, சென்னை.

---

# நாராஜீவ வாதக்கட்டளையின்

அரும்பொருள் விளக்க விசேட விருத்தியுரை என்னும்

# ரகசியார்த்த தீபிகை.

ஜீவர்கள் யதார்த்த சொரூபத்தை யறிந்து கிருதார்த்தர்களாகும் வண்ணம் ஸ்ரீ சேஷாத்திரி சிவனார் பெருங்கருணையா லருளிச்செய்த வேதாந்த கட்டளை யென்பதனுள் தத்துவரகசியத்தைத் தெள்ளிதில் விளக்கும் இவ்வசனநூல் அதி அத்தியாவசியமாக யாவரும் பிரதமத்தில் ஓதியுணரத் தக்கதாகும். இதன் மூன்னூலிலுள்ள ஆந்திரா (ரகசியா)ர்த்தத்தைச் சிறுவர்களும் எளிதிலறிந்துகொள்ளும் வண்ணம் இந்நூலில் மிகத்தெளிவாக விளக்கியுள்ளதுந்தவிர பலநூற்களினின்றும் திரட்டிய (மேற்கோள்) உதாரண கவிகளை ஆங்காங்கு குறிப்பிட்டு வியாக்கியானமுஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அன்றியும் காரிய சரீர பாவனை, பிரம்மஙியம சிவசைதன்ய பிரம்ம சன்னிதானதர்சோபடங்களும் சேர்க்கப்பட்டு தத்துவ நிலயவிமயங்களை நன்குவிளக்கி காட்டப்பட்டிருத்தலால் இந்நூல் யாவருக்கும் பெரிதும் பிரயோசனத்தைத்தர வல்லதான ஒப்பற்றதத்துவ ஞானசாஸ்திரமேயாகும். இத்தத்துவக்கட்டளையின் உட்பொருளை ஸ்பஷ்டமாக அறிந்துகொள்ள ஆசிப்பவர்களுக்கு இவ்விரகசியார்த்த தீபிகை யென்ற இருளைப்போக்கி அறிவைப் பிரகாசிப்பிக்கச் செய்யவல்லதென்று துணிந்து கூறலாம்.

இதன் விலை அணா 8

# சுப்பிரமணியர் ஞானம்

# நூா-பாடல்.

## இதன் விலை ரூ. 1—0—0

புவனேஸ்வரி பிரசுராலயம்,
23, பாளையப்பன் தெருவு, தங்கசாலைபோஸ்டு, மதராஸ்.

புதிய பதிப்பு! வெளிவந்துவிட்டது!!

-- வேதாந்தக் --

# கட்டளைக் கொத்து.

இதிலடங்கிய கட்டளைகள்.

| | |
|---|---|
| சிவப்பிரகாசக கட்டளை | நாநாஜீவவாதக்கட்டளை |
| திருவாலவாய்க்கட்டளை | பரிசுத்த உண்மைக்கட்டளை |
| வேதாந்தத்துவக்கட்டளை | வேதாந்த தசாவத்தைக்கட் |
| ஜீவோற்பத்தி சிந்தாமணி | வேதாந்தசகாரியக்கட்டளை |
| தத்துவதீபிகை | சித்தாந்தக்கட்டளை |
| ஞானக்கட்டளை | சித்தாந்த தத்துவலக்ஷணம் |
| தத்துவாமிர்தக்கட்டளை | |

அநாதிமுத்தனாகிய முதல்வன் ஜீவகோடி ஆன்மாக்களின் கன்மத்திற்கீடாகப் பலசமயங்களை வேதத்தில் வகுத்து வைத்தனர். அவ்வேதங் காரணமாகவே அவ்வச்சமயத்தினர்கட்கு ஏற்பட்டுள்ள சாஸ்திரங்களும் பலவாயின. அவ்வச்சாஸ்திரங்களிற் பிரதிபாதிக்கப்படும் ஆன்ம இலக்கணங்களையும், பரமான்ம இலக்கணங்களையும் தெரிந்துகொள்ளற்குக் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அவ்வச்சமயங்கட்கேற்றவாறு பரிபாஷா கலப்பினால் சுலபத்திலறிதற்கேலாதபடி யிருக்கின்றமையினைக்கருதி அவ்வச்சமயங்களில் வல்லவர்களாகிய பெரியோர்கள் தங்கள் தங்களுக்குரிய சாஸ்திரங்களுக்குச் சோபானமாக எளிய வசன நடையில் யெழுதி நல்ல காகிதத்தில் அச்சிட்டிருக்கிறோம்.

இதன் விலை ரூபா 1 0 0
மேற்படி கிளேஸ் காகிதம். 1 8 0

புவனேஸ்வரி பிரசுராலயம்,
23, பாளையப்பன் தெருவு, தங்கசாலைபோஸ்டு, சென்னை.

## வான்மீகர் ஆரூட சாஸ்திரம் 40-பாடல் மூலமும் உரையும்.

இதைவாசிக்கும் நேயர்கட்குத் தெரிவிப்பது யாதெனில், வான்மீகர் திருவாய் மலர்ந்தருளிய ஆரூடசாஸ்திரமென்னும் 40-பாட்டுகளுக்கும் இதுவரையில் உரையில்லாதிருந்ததினால் அதை எளிதில் தெரிந்துகொள்ள இயலாமல் ஜோதிட ஆரூட மறிந்தவர்களைத்தேடி அவர்களிடம் கேட்டு தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது, அக்குறை தீர வ்ஷி. பாட்டுகளுக்கு யாவரும் எளிதில் தெளிவாய் தெரியும்படி உரை எழுதி அச்சிடும்படி அநேகர் கேட்டுக்கொண்டதின் பேரில் வ்ஷி வான்மீகர் ஆரூட சாஸ்திரம் 40-பாட்டுகளுக்கு தெளிவாயும் சுலபத்தில் தெரிந்துகொண்டு பலாபலன்களை அடையும்படி உரையெழுதி நல்ல உயர்ந்த கடிதத்தில் அச்சிட்டிருக்கிறது.

சாஸ்திரம் பார்ப்பவர்கள் சுத்தியாய் கையில் ஏதாகிலும் ஓர் புஷ்பத்தை எடுத்துக்கொண்டு இதிலுள்ள ராசி சக்கரத்தில் ஓர் வீட்டைத் தொட்டு அதிலுள்ள எழுத்துக்களைக்கொண்டு அதற்கேற்றபாட்டையும் உரையையும் பார்த்து தாங்கள் நினைத்தகாரியம் ஜெயம் அபஜெயம் என்று தெரிந்துக்கொள்ளலாம். புத்தகம் 1-க்கு விலை அணா 3.

## உபதேசவுண்மை.

இது வேதசிரேணி சிதம்பரசுவாமிகள் அருளிச்செய்தது இதில் தண்டபாணிபேரில் பதிகமும், உபதேச உண்மைகட்டளையும் தோத்திரமாலையும் அடங்கியிருக்கிறது உலகப்பற்றை போக்கி பேரின்ப சுகவாழ்வைபெற குரு சிஷ்ய சம்வாதமாக வெகு தெளிவாய் சுத்தப்பதிப்பாக இயற்றப்பட்டிருக்கிறது. இதை இல்லற வாழ்க்கையை வெறுத்து பேரின்பவீடுபெற தவிக்கும் ஒவ்வொருவரும் அவசியம் இவ்வுபதேசவுண்மையின் லக்ஷணத்தை வாசித்து உணர்தல் வேண்டும். இதன் விலை அணா-12.

ளத்தக்க) சத்தியவானுக்கே உயர்ந்த பிரம்ம நிஷ்டையைப் போதிக் கத்தகும் எ-று. ஏ ஏ ஆல் அசைகள்.

(இ-உ-க-ம்.) பிரம்மநிஷ்டைக் கதிகாரியை அறிவித்ததாம்.

குருவின் திருவுளக் குறிப்பின்படி மானமின்றிப் பணிசெய்ய வேண்டுமென்பதற்குப் பிரமாணம். (சிவநெறிப்பிரகாசம்) தேசிகருமா ணவர்கள் செய்தியுணர்ந்திடவே சிறியோரைப் பெரியோர்செய் தொழிலதனிற் செறித்து, மேசிலராம் பெரியோரை யீனமாந்தொழிற் கேயிசைத்துமடித்தும் வைதுமிவ்வாறு செயவுங், கூசியிடாதிட்ட பணி செய்து குருபத்தி குறைவிலராய் நம்பினராய்த் துரோகமின்றி, மாசில ராய் மனவாக்குக் காயத்தாற் குருவின்வாக்கிய பாலனஞ்செய்யு மதி மானுமாயே எ-ம். (ஒழிவிலொடுக்கம்) உடற்குயிர்போர்கட் கிமைபோ லூசினூலொத்து, விடிற்புலிதீபாம்பிவை வீழ்வார்க்காஞ் சுடச்சுடினும் வாழைக்காகாவேதி மட்கலத்திற் காகவா, றுழைக்காகா திது எ-ம். (அருட்பிரகாசம்) குருபரனுக்கவனெஞ்சகம்போ லனுகூலத்தனாய்க் காசரணுதியினேவல் செய்தேகினங்கட் கிமைபோ, லூரியமனைமுதல் யாவையுங்காத் திண்மையாயொருதற், பரம்வனேயெனக் காண்பான் சற்சீடன் பகர்ந்திடினே. (அன்றியும்) தேசிகன்பாற் பற்பலதீக்குணங் கள் செறியினும்நம். பாசப்பிராந்திக்கிவை தோற்றியவிரை பாலியென், குருசருபத்தியினோர்ந் தெய்வீதத்து மவனருளைத், தேசங்குலவ வளர்ப் போன்சற்சீடன்றெரிந்திடினே எ-ம். (வருங்காலத்திரங்கல்) என்றுங் குருநாதரிட்ட பணிசெய்துமிக, நின்றபடி நில்லாத நெஞ்சவிடுநாளே தோ (அன்றியும்) குன்றாதஞானக் குருவானோர் சொற்கேட்டுப், பொன்றாதவாதனையைப் போக்கியிடுநாளேதோ எ-ம். (வீராகமம்) அடுத்ததின் றன்மையான்மா வாகுமென்றறிந்து நல்லோர், நடித்திடுஞ் சமயவாத நற்றவஞ் செபந்தியானம், படிற்றுலகியற்கையாவும் பாகதி விலக்காமென்றே, விடுத்தருட் குரவன்பாத மேவியே பணிசெய்வாரே எ-ம். வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க. (74)

(இந்நூலாசிரியரது மாணாக்கர் புகழ்ந்து கூறல்.)

திருவளர்கோவல் வீரட்டநாதர்
திருவடிக்கமலங்கள் வாழி
பெரியநாயகி பொற்கழலிணைவாழி
பெரியமா கணபதிவாழி
முருகனற் பதங்கள்வாழி
நந்தீசர் முளரி மென்பதங்களும்வாழி
பெரியசம்பந்த ராதியர்நாலு
பெரியர்தம் மடிகளும்வாழி.

(இ-ள்) செல்வம் விர்த்தியாகின்ற திருக்கோவலூரில் எழுந்தருளி யிருக்கும் திருவீரட்டேஸ்வரருடைய திருவடித்தாமரைகள்வாழி பெரிய நாயகியாரது அழகிய திருவடிகள்வாழி பெரியானைக்கணபதியின் திருவடிகள்வாழி சரவணபவனது நல்ல திருவடிகள்வாழி நந்தீஸ்வரருடைய மிருதுவாகிய பாதபங்கயங்களும் வாழி சிறப்புற்ற திருஞானசம்பந்த சுவாமிகள் அப்பர்சுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகள் மாணிக்க சுவாமிகள் ஆகிய பெரியோர்கள் நால்வர்களுடைய திருவடிகளும்வாழி என்று. (க)

வசணவர்பதங்கள்வாழி மாச்சென்ன
வசவணர் பதங்களும்வாழி
திசையுளார்வலஞ் சூழ்குசைநம
சிவாயதேசிக னடிகளும்வாழி
நசையுறுமவர்பாற் குருநமசிவாய
நற்பரனடிகளும் வாழி
அசைவுறுமனத்தை யறிவினுளடக்கு
மடியார்தம்மடிகளும் வாழி.

(இ-ள்) வசவேசர் திருவடிகள்வாழி பெருமைபொருந்திய சென்னவசவேசர் திருவடிகள் வாழி எட்டுத்திக்கினுமுள்ளோர் பிரதக்ஷணஞ்செய்து வணங்கத்தக்க குருநமசிவாய குருவின் திருவடிகள்வாழி அவரிடத்தில அன்புபொருந்திய நன்மையையுடைய குருநமசிவாய தேசிகா திருவடிகள்வாழி சஞ்சலப்படுமனதனை அறிவினுட்சேர்த்து அடக்குகின்ற அடியவர் உடைய திருவடிகள்வாழி என்று. (2)

கோவலவீரட்டானுக்கிரகஞ்செய்தா
கொடுத்திடு மாகமம் வாழி
பாவனைக்கரிதாம் பரகதியடையப்
பகருமோர் பொருள்வாழி
நாவலத்தீவோரநதந் திருளிரிய
நமசிவாதீதனுமாகி
தேவனுமாறு முகசிவஞான
தேசிகனடிகளும் வாழி.

(இ-ள்) திருக்கோவலூரிலெழுந்தருளியிருக்கும் திருவீரட்டேஸ்வரர் அநுக்கிரகஞ் செய்தருளிய ஆகமநூல்வாழி மனோவாக்கினால் பாவனை பண்ணற்கரியதாகிய உயர்ந்த மோக்ஷத்தை அடைய உபதேசஞ்செய்யப்படும் ஒப்பற்ற அர்த்தத்தையுடைய மஹாவாக்கியம் வாழி ஜம்புத்தீவி லிருக்கின்றவர்களுடைய உள்ளத்திலிருக்கின்ற அஞ்ஞான விருள்கெட நல்லசிவ சொரூபராகியும் மனோதீதபட்டவராகியுந் தோன்றிய தேவனாகிய ஆறுமுகசிவஞான தேசிகருடைய அடிகளும் வாழி என்று. (3)

இந்நூற்பெருமை.

பாவனாதீத நிட்டானுபூதி
பரமசிவனுமை தனக்கருளத்
தேவியுமகிழ்ந்தவட மொழியதனைச்
செஞ்சடைப்பிரான் றிருவருளால்
கோவல்வாழாறுமுக சிவஞான
குருபரன்றமிழி னுரைத்தான்
மேவுநற்பயனை யுணர்ந்துசாதித்தோர்
மேன்மைவீடடைவது நிசமே.

(இ-ள்) மனோவாக்குகளாலும் பாவனைபண்ணற்கரிய சிவஞான நிஷ்ட்டையின் அனுபூதியைப் பரமசிவனார் தேவியாருக்கு அநுக்கிரகிக்க (அதைக்கேட்டுத்) தேவியார் சந்தோஷிக்கப்பட்டதாய் விளங்குகின்ற வடமொழியிலுள்ள அப்பொருளைச் சிவந்த சடாபாரத்தைத் தாங்கிய ஈஸ்வரருடைய அநுக்கிரகத்தினால் திருக்கோவலூரில் வாழ்கின்ற ஆறுமுகசுவாமிகளென்னுந் திருநாமத்தையுடைய மேலான சிவஞான தேசிகரானவர் (யாவரு மெளிதிலுணரத்) தமிழ்ப்பாவினமாகச் செய்தருளினார். அங்ஙனம். (அவராற்செய்யப்பட்ட இந்நூலை ஓதி) இதிலுள்ள முத்திப்பிரயோசனத்தைத் தெரிந்து சாதனஞ் செய்தவர்கள் மேன்மையாகிய மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்ளுவார்களென்பது சத்தியமாம் என்று. (4)

பாயிரம் - கஉ - நூல் - எச - வாழ்த்துக்கள். - ரு.

நூற்பெருமை - க-ஆ பாடல் - கூ0

உதாரணப்பாடல் - சக0-ஆ பாடல்-ரு00

நிஷ்டானுபூதி மூலமும்,
சாரம்பொதியைநாயகர் சபைக்கு முதற்பட்டத்து
சுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட நூதனவுரையும்

முற்றுப்பெற்றன.

நேரிசை வெண்பா.

போதமுறு மேதமறும் போதச் சிவயோக
சாதனையைச் செய்து தலைப்படுவர்—ஓதரிய
முத்தரு மாவரிம் முறையினு தாரணமும்
புத்துரையுங் கற்போர் பொலிந்து.

# பாட்டு முதற்குறிப்பகராதி.



பாட்டு முதற்குறிப்பகராதி

முற்றிற்று.



புவனேஸ்வரி பிரசுராலயம்,
23, பாளையப்பன் தெருவு, தங்கசாலைபோஸ்டு, மதராஸ்.

வெளியாய் விட்டது !! வெளியாய் விட்டது !!

# பகவத்கீதை வசனம்.

பாக்கெட் அளவு 18-அத்தியாயங்களும் அடங்கியது.

படத்துடன் சுத்தப்பதிப்பு.

## இதில் அடங்கிய அத்தியாயங்களின் விபரம்.

1. சோக வத்தியாயம்
2. சாங்கிய யோக வத்தியாயம்
3. கர்ம பிர்ம்மயோக வத்தியா
4. ஞான கர்மயோக வத்தியாயம்
5. சந்நியாசயோக வத்தியாயம்
6. அப்பியாசயோக வத்தியாயம்
7. பரமாம்ஸ விஞ்ஞானயோகவத்
8. அக்ஷரப் பரப்பிரம்மயோகவத்
9. இராஜவித்திய இராஜகுஹ்ய இராஜயோக வத்தியாயம்
10. விபூதிவிஸ்தாரயோகவத்தி
11. விஸ்வரூபயோகவத்தியாயம்
12. பக்தியோக வத்தியாயம்
13. பிரகிருதி புருஷயோகவத்தி
14. குணத்திரய விபாகயோகவத்
15. புருஷோத்தமயோகவத்தியா
16. தெய்வ அசுர சம்பத்துவிபாக
17. சிரத்தாத்திரய விபாக யோக
18. சகல உபநிஷதார்த்தப் பிரதிபாதன மோக்ஷயோக வத்தியாயம்.

இதில் வேதாந்த ரஹஸ்யத்திற்கு உபமானமாய் ஸந்தர்ப்பானுசாரமாய் உபநிஷத் வாக்யங்கள் ஆங்காங்குஉபயோகிக்கப்பட்டிருக்கின்றன. யோக ஞானங்களை விளக்கிக்காட்டும் நூற்களிற் இதுவே முதன்மை பெற்றதுவாம். அலையுமனதை அகத்தில் அடக்கு வதற்கு அரியபெரிய கருவியாகும். கற்றோரேயன்றி மற்றோரும் களிப்புடன் வாசிக்கத் தக்கதுவாம். ஏழைகளும் எளிதில் வாங்கும் பொருட்டே பாக்கெட் அளவில் விலை மிகவும் சஹாயமாய்ஏற்படுத்தப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| இதன் விலை ராபர் பயிண்டு | 0 | 8 | 0 |
| ஷை கலிகோ பயிண்டு விலை | 0 | 10 | 0 |
| ஷை வசனம் பெரியது | 1 | 8 | 0 |
| ஷை கிரந்தசுலோகம் தமிழ் அர்த்தம் | 1 | 6 | 0 |

மேல்கோர்ட்பாத்... [illegible]